## தேய்ந்துபோன டயர், மேலும் 40,000 மைல் உழைக்கலாம்

பஸ் அல்லது லாரி டயர் தேய்ந்துபோனால், அதனை மேலும் எவ்வளவு அதிக மைலுக்கு உபயோகிக்கலாம் என்பது, ரீடிரெடிங் செய்யும் முறையைப் பொறுத்தது. விஞ்ஞான முறையில் டிவிஎஸ் ரீடிரெட் செய்வதால், ஒரே டயரை மீண்டும் மீண்டும் ரீடிரெட் செய்ய முடியும். இதனால் 40,000 மைல் வரை அதிகமாக ஓட்டலாம்.

டிவிஎஸ் ரீடிரெடிங், ஒரு டயருக்கு அதிக மைல்களைக் கொடுக்கிறது. அதனால் ஒரு ரூபாய்க்கு அதிக டயர் மைல்களைக்கொடுத்து, செலவைக் குறைக்கும்.

**இந்தியாவிலேயே ரீடிரெடிங் செய்வதில் மிகப் பெரிய ஸ்தாபனம் டி வி எஸ்.**




**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

(டிவிஎஸ் ஸ்தாபனம்)

புதுக்கோட்டை—மதுரை—கோயமுத்தூர்—பங்களூர் • திருநெல்வேலி

JWT-SI-88-2318

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, மார்கழி 21 ○ ஜனவரி 5



படவிளக்கம் 21ம் பக்கம் பார்க்க



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




நாள் முழுவதும்
நேர்த்தியாக இருக்க
பெர்லீன்
ப்ரென்ச்
லாவண்டர்
ப்ரிலியண்டைன்
உபயோகியுங்கள்
PEARLINE PARIS
P.O. Box 455 BOMBAY
BR-5J

புகைபிடிக்கும் இங்கிதம்

# உதவுவீர் முன்னே, ஊதுவீர் பின்னே




நாலுபேருக்கு நடுவில் புழங்கும் போது, சொந்த சிகரெட்டைப் பற்றவைப்பதற்கு முன்பாக, பிறருக்கு வழங்குவதே ஒழுங்கு. ஒரு பெட்டியைக் கச்சிதமாக நீட்டினீர்களேயானால் அதுவே மெச்சுதற்குரிய வழி. பிறரிடமிருந்து பெறும் ரகங்களைக் குறைகூறாம லிருத்தல் சிறந்த பண்பாட்டுக்கு அறிகுறி.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது **பனாமா**

Panama
20
CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம்— இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

'பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 616 TAM

Greens' Advtg.



மலர் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்,

இதழ் 23

# இசை விழா நினைவுகள்

வழக்கம் போல் சங்கீத உற்சவம் நடந்து நிறைந்திருக்கிறது. இதைத் தொடர்ந்து தியாகப் பிரம்ம ஆராதனை, புரந்தரதாஸர் நினைவு நாள் இவையும் நேர்ந்து இசை நினைவிலேயே நம்மை நிறுத்துகின்றன.

இன்று ஒரு நியாயமான கேள்வி நம் மனத்தில் எழுகின்றது. நானூறாண்டு களுக்கு முன்பு புரந்தரதாஸர் வித்திட்டதும், சென்ற நூற்றாண்டில் தியாகையர் செழிப்புறப் பயிர் செய்ததுமான கர்நாடக சங்கீதம் எந்த அளவில் இன்று அவர்கள் வகுத்த வழியில் செல்கிறது? தாஸருக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே தெய்வத்துடன் இணைந்த தமிழிசையாக இருந்த இந்த மரபு எந்த அளவில் இன்று காப்பாற்றப்படுகிறது?

நமது சங்கீதம் ஆண்டவனுக்கே உரியது என்பது பற்றியும், குருகுலவாசம், சுருதி சுத்தம், வாக்கின் தெளிவு இவை பற்றியும் பேரறிஞர்களெல்லாம் வெகு அழகாகப் பேசிப் பல உண்மைகளை வெளியிட்டிருக்கிறார்கள். என்றாலும் இன்று நம் இசை இருக்கும் நிலையை மதிப்பிட வேண்டுமானால் இந்தச் சங்கீத விழாவில் நடை பெறும் கச்சேரிகளைத்தானே பார்க்க வேண்டும்? அப்படிப் பார்க்கும்போது தெய்விகத்தை யும், சுருதி சுத்தத்தையும், பாவத்தையும் எந்த அளவுக்குக் காண்கிறோம்?

தேர்ந்த வித்வான்களை ஒரு புறம் விட்டு விடுவோம். புதிதாக அவர்களைப் பாராட்டியோ, குறை கூறியோ விமரிசிப்பதில் பொருள் இல்லை. வருங்காலத்தில் சங்கீத மரபைக் காத்துத் தரவேண்டியவர்களையே கவனிப்போம். ஏராளமான இளம் வித்வான்கள் பாடினார்கள். ஒரு சிலர் மனோ தர்மத்துடனும், மரபைப் போற்றும் பாங்குடனும் நன்றாகவே பாடினார்கள். மற்றவர்கள்?

கலைகளுக்கு வெறும் சாஸ்திரம் மட்டும் போதாது. கதை எழுதவோ, கவிதை இயற்றவோ சட்டத் திட்டங்கள் ஏதும் இல்லவே இல்லை. அந்தரங்கத்தில் உள்ள ஏதோ ஒரு சத்தியத்தின் சட்டத்துக்கு — வார்த்தைக்கு வராத சட்டத்துக்கு — உட்பட்டுத்தான் கதையும் கவிதையும் பிறக்கின்றன. ஆனால் சிற்பம் சமைக்கவும், சித்திரம் தீட்டவும் ஓரளவுக்குச் சாஸ்திரங்கள் உதவும். எனினும் கலைஞனின் மனோ தர்மம்தான் அவனது சிருஷ்டியை நிறைவு செய்யும். சாஸ்திர அறிவு மட்டும் ஆண்டவனைக் காணப் போதாது; சாதகனின் இதய அநுபவமும் சேர வேண்டும் என்பது போலவேதான் கலைகளிலும் பூரணத்துவத்தைக் காண இரண்டும் இணைய வேண்டி யிருக்கிறது. கலைகளில் சிறந்த சங்கீதத்தின் விஷயமும் இப்படித்தான். ராகத்தின் ஆரோகண அவரோகணத்துக்கும் தாளத்தின் மாத்திரைகளுக்கும் உட்படு மளவுக்குத்தான் சாஸ்திரங்கள் இசைக் கலைஞனைக் கட்டுப்படுத்தும். இந்தக் கட்டுப் பாட்டுக்குள், மரபு என்ற விளக்கவொண்ணாத விதிமுறைகளுக்கு இணங்கத் தனது சுதந்திரத்தைப் பயன்படுத்தியே அவன் அழகுகளைக் கொண்டு வரவேண்டும். கருவி களின் பல பாகங்களை இயந்திர கதியில் பூட்டிக் கருவியை நிர்மாணிப்பது போல் சாஸ்திர விதிகளை மட்டும் இணைத்து இசையை உருவாக்கிவிட முடியாது. கலைஞனின் சுதந்திரம் அதில் இன்றியமையாத ஒரு பாகம். அந்தச் சுதந்திரத்தைச் சிறிதும் பயன்படுத்திக் கொள்ளாமல் ஸீனியர் வித்வான்களை அப்பட்டமாகக் காப்பி அடிப்பதும்

தவறு; சுதந்திரம் என்ற பெயரில் மனம் போனபடி மரபைக் குலைப்பதும் தவறு. இந்த இரண்டு உண்மைகளை யும் நமது இளம் பாடகர்களுக்கு நினைப் பூட்ட வேண்டியிருக்கிறது.

இசைக்கு இலட்சணம் கூற இய லாது. எனினும் கர்நாடக மரபோடு நீண்ட காலமாகச் சேர்த்துப் பேசப் படும் சில அம்சங்களை இளம் பாடகர் களுக்கு ஞாபகப்படுத்துகிறோம். முதலா வது, பக்தி. ஆண்டவனிடம் மனத்தைச் செலுத்த நமது இசைக் கலைஞர்கள் பயின்றால்தான் நாதோபாஸகர்களான மகான்களின் பாடல்களை உள்ளவாறு இசைக்க முடியும். சத்திய உருவான பரமனுக்கு உரியதே சங்கீதம்; சத் தியமே சங்கீதம் என்றுணர்ந்து போலி களைத் தள்ள வேண்டும். போலிக் குரலில் பாடும் 'பாஷனை' விட்டு, வாய்ப்பாட்டை வாய் விட்டுப் பாடும் பாட்டாகவே செய்து, போலி பக்தி என்ற 'பாஷனை'யும் விடுத்து, வாய்ப் பாட்டை வாயோடு நில்லாமல் இதயத்தி லிருந்தே வரும் பாட்டாக்க வேண்டும்.

கர்நாடக இசையின் இரண்டாவது சிறப்பு அம்சம் கமகத்தில் பிறக்கும் விச் ராந்தி. பள பளப்பும், பரபரப்பும் ஓரளவுக்கு அவசியமாயிருக்கலாம். என் றாலும் அமைதிதான் நம் இசையின் ஜீவன். ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் போல் நீண்ட கார்வைகளில் மட்டும் பிறப்பதல்ல கர்நாடக இசையின் அமைதி. ஸ்வர ஸ்தானங்களை இழைத்து இழைத்து நகாசு செய்து ஒன்றை ஒன்று கவ்வும் கமகச் சங்கிலியால் அமைதியை எழுப்புவதே கர்நாடக சங்கீதம். விறு விறுப்பூட்டும் சப்த ஜாலங்களும், மனத் தில் பிறவாமல் கைக்கணக்கை மட்டுமே சார்ந்து நிற்கும் ஸ்வரப் பிரஸ்தாரங் களும் இரண்டாம் பட்சம்தான்.

ரசிகர்கள் இவற்றைத்தான் விரும்பு கிறார்கள் என்று தோன்றலாம். எனி னும் கலைஞர்கள் யாவரும் நரம்பைக் கிண்டி விடுவதை விடுத்து, இதயத்துக்கு இதமளிப்பதற்கு என்றே பாடத் தொடங்கினால் அவர்களுடைய சத்தியத் தின் பலம் வெல்லாமற் போகாது.

புது இசைத் தலைமுறைக்கு முக்கிய மாக ஒரு வேண்டுகோள். அபூர்வ ராகம், அபூர்வ தாளம் என்று சொல் லிக் கொண்டு ரசிகர்களைக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட வேண்டாம்! சொந்த சாகித்தியம் இயற்றுவது, தாங் களே புது ராகங்களை சிருஷ்டிப்பது, புது மொழியொன்றையே உண்டாக்கி அதில் கீர்த்தனை பார்ப்பது — இவை யெல்லாம் வேண்டவே வேண்டாம். பெரியோர்கள் சென்ற பாட்டையைப் பின்பற்றினாலே போதும். விநயம்தான் வித்தையை வளர்க்கும் வழி.

# என்ன சேதி?

### தேர்தல்கள்

சென்னை நகரசபைக்கும், ஜில்லாக் களில் முனிசிபாலிடிகளுக்கும் வருகிற பிப்ரவரி மாதம் தேர்தல்கள் நடக்க விருக்கின்றன. சென்னை நகரசபையி லும், மற்ற ஸ்தல ஸ்தாபனங்களிலும் கவனிக்கப்படும் அலுவல்கள் மிகச் சாமான்யமானவை. சாலை வசதி, தண்ணீர் வசதி, ஊர் சுகாதார வசதி முதலிய மிக அடிப்படையான விஷ யங்களே இச்சபைகளின் கவனத்தைக் கவருகின்றன. ஆகவே, இவ்வேலைகளைக் கவனிக்க, நகரசபை ஊழியர்களிடையே யும், உத்தியோகஸ்தர்களிடையேயும் கௌரவமும் மதிப்பும் பெறத் தக்க ஊரில் உள்ள பெரியவர்களையும், தன் னலம் கருதாது உழைக்கும் உத்தமர் களையும் தேர்ந்தெடுப்பதுதான் முறை. ஆகவே, இத் தேர்தல்களில் கட்சி அரசியல் புகவே நியாயமில்லை. ஆனா லும் ஆளும் கட்சி இங்கும் கட்சியின் பேரால் அபேட்சகர்களை நிறுத்து வதால் மற்றக் கட்சிகளுக்குப் போட்டி யிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக் கிறது. கட்சி அரசியல் போர், வருகிற சில வாரங்களில் தமிழகம் முழுவதும் நடைபெறவிருக்கிறது. இந்த நிலையில் பொதுமக்களின் கடமை என்ன என்ற கேள்வி எழும். இதற்கு ஒரே பதில் தான் உண்டு. காங்கிரஸ் தனக்கு மிகச் செல்வாக்கு இருப்பது போல் காட்டிக்கொள்ளும் சூழ்ச்சியில் பொது மக்கள் விழக்கூடாது. எல்லாத் தேர்த லிலும் ஏதும் ஐயப்படாமல், காங்கிர சுக்கு மாறுபட்ட எதிர்க் கட்சியில் உள்ள அபேட்சகர்களையே தேர்ந்தெடுத் துக் காங்கிரஸின் அகங்காரத்தைச் சீர்ப் படுத்த வேண்டும்.

### ஆந்திரரும் ஹிந்தியும்

ஆந்திர நாட்டில் முக்கிய நகரமான கர்நூலில் பேச வந்த ஸ்ரீ மொரார்ஜி தேசாய், தமது பிரசங்கத்தை ஹிந்தி யில் தொடங்கினார். பொதுமக்கள் ஹிந்திமேல் உள்ள தங்கள் வெறுப்பைப் போதிய அளவு காட்டிக் கொண்டதன்

விளைவாக மொரார்ஜி தேசாயினால் தமது பேச்சைத் தொடர முடியவில்லை. அந்தப் பேச்சைத் தெலுங்கில் மொழி பெயர்க்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஸ்ரீமதி யசோதா ரெட்டி அவர்களைப் பேச விடாமல் கலவரம் செய்துவிட்டனர். ஆகவே மொரார்ஜி தேசாய் ஆங்கிலத்தில் பேச நேர்ந்தது. அவர் ஆங்கிலத்தில் பேசத் தொடங்கிய பிறகு கூட்டம் அமைதியாக நடைபெற்றதாம். எந்தப் பொதுக்கூட்டங்களிலும் கலவரம் ஏற்படுவதை யாருமே விரும்ப மாட்டார்கள். ஆனால் இப்படிக் கலவரங்களும், குழப்பங்களும் விளைவித்தால்தான் அவர்களுடைய அறிவுக்கு எட்டுகிறது என்பதைக் காணப் பரிதாபமாக இருக்கிறது.

## குட்டு உடைபட்டது!

டாக்டர் சம்பூர்ணானந்தர் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையில் பேசியிருக்கிறார். காங்கிரசுத் தலைவர்களுக்குச் 'சோஷலிஸம்' என்னவென்றே தெரியாது என்று கூறி விட்டார். ஜெயப்பூரில் தீர்மானித்த ஜனநாயக சோஷலிஸம் என்னவென்பதைப் புவனேசுவர் காங்கிரஸ் கூட்டத்தில் விண்டு விண்டு விளக்கப்போவதாகக் கூறிவந்த சமயத்தில் பல நாள் காங்கிரஸில் இருந்தவரும், உத்தரப் பிரதேசக் காங்கிரஸ் முதன் மந்திரியாக இருந்தவரும், தற்சமயம் ராஜஸ்தான் கவர்னராக இருக்கும் டாக்டர் சம்பூர்ணானந்தர் காங்கிரஸ்காரர்கள் சோஷலிஸம் பற்றிப் பேசுவதெல்லாம் பொதுமக்களை ஏமாற்றப் பார்க்கும் திட்டமே என்று பட்டவர்த்தனமாகக் கூறிவிட்டார்.

## திட்டமும் பிரதமரும்

திட்டங்களினால் நாட்டில் ஏற்பட்டுள்ள புது விழிப்பையும், தேசத்தின் தோற்றமே மாறி வருவதையும் நமது பத்திரிகைகள் எடுத்துக் கூறுவதில்லை என்று பிரதமர் பம்பாயில் குறைப்பட்டுக்கொண்டார். இதையேதான் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த போதும், சென்னை பத்திரிகை நிருபர் கூட்டத்திலும் குறிப்பிட்டார். அவர்கள் ஒவ்வொரு திட்ட இலக்குக்கும் சென்று முதலீடு செய்யப்பட்ட பணம் எவ்வளவு, உற்பத்தி எவ்வளவு, எந்த வேகத்தில் நடைபெறுகிறது, பொது மக்களின்



## ராஜாஜியின் புத்தாண்டு வாழ்த்து

எனக்குக் கடவுள் பக்தி யிருக்கிற படியால் புது வருஷத்தில் அரசாங்கத்துக்குத் தெளிவான மதியும் மக்களுக்கு ஓரளவு நன்மையும் ஆண்டவன் அருளால் தோன்றும் என்று எதிர்பார்க்கிறேன். முக்கியமாக, ஆளும் கட்சிக்குச் சமீபத்தில் உண்டான பல தோல்விகள் இந்த ஆசைக்குக் காரணமாகும்.

பணம் எவ்வளவு விரயமாகிறது என்பனவற்றை யெல்லாம் பற்றி உண்மையான சித்திரம் வரைந்து தருவார்களானுல் பிரதமரின் மனச்சாட்சி வேதனையுறும். அந்த அளவுக்கு அவர்களுக்குப் பிரதமர் நன்றி செலுத்த வேண்டும்.

## தர்மம் காத்த நீரர்

ஓர் அரும் பாரதப் புதல்வரின் நூற்ருண்டு விழா பிப்ரவரி ஏழாந் தேதி நிகழ்கிறது. காலஞ்சென்ற ஸர் பி.எஸ். சிவஸ்வாமி அய்யரவர்களே அந்தப் பெரியார். பிரிட்டிஷார் காலத்தில் இந்திய ராணுவத்தில் இந்தியர்களுக்குச் சரியான ஸ்தானம் ஏற்படும் முயற்சியில் தீவிர பங்கு எடுத்துக் கொண்டவர். தமது தனி வாழ்விலும் நேர்மையையே நாடி நின்று, ஆட்சியாளர்களைச் சாடும் வீரம் பெற்றிருந்தார் அவர். வீரத்தோடு நெஞ்சு ஈரத்தையும் பாரதியார் சேர்த்துப் பேசியதற்கேற்பத் திரத்தோடு தர்ம சிந்தனையும் பெற்றிருந்தார் ஸ்ரீ சிவஸ்வாமி அய்யர். அவரது தர்ம உள்ளத்தின் இரு சின்னங்களாகவே சென்னையில் லேடி சிவஸ்வாமி அய்யர் பள்ளியும், திருக்காட்டுப்பள்ளியில் ஓர் உயர்நிலைப் பள்ளியும் விளங்குகின்றன.



அய்யரவர்களின் நூற்ருண்டை முன்னிட்டுத் திருக்காட்டுப்பள்ளியில் உள்ள பள்ளியையும் ஹாஸ்டலையும் அபிவிருத்தி செய்யவும், அவரது நூல்களைப் பதிப்பிக்கவும் சில அன்பர்கள் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். இதற்கு இரண்டு லட்சம் ரூபாய் பிடிக்கும் என மதிப்பிட்டிருக்கிருர்கள். எல்லோரும் உதவ வேண்டிய உத்தமமான தரும காரியம். பொருள் உதவி புரிய விரும்புவோர், **பொருளாளர், ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் நூற்ருண்டு நிதி, 'நீலேகவர்', எட்வர்ட் எலியட் ரோடு, மயிலாப்பூர் சென்னை - 4** என்ற விலாசத்துக்கு அனுப்பிவைக்கவும்.

## பெரு நஷ்டம்

ஸர்தார் லால் சிங் காலமானுர் என்ற செய்தி விவசாயிகளின் நன்மையில் ஈடுபட்டவர்களுக்கெல்லாம் பெருத்த அதிர்ச்சியை அளிக்கும். பாலேவனத்தைச் சோலேவனமாக்கும் அற்புதத் திறம் படைத்த விவசாய நிபுணர் ஸர்தார் லால் சிங். அவர் பல காலம் பஞ்சாப் சர்க்காரில் விவசாய டைரக்டராக இருந்து அரும் பணியாற்றி யிருக்கிருர். அவருடைய விவசாயத் துறை அனுபவத்தை நாட்டுக்குப் பயன்படுத்த வேண்டுமென்று திட்டக் கமிஷன் அங்கத்தினராகவும் சேர்த்துக் கொண்டார்கள். அவருடைய மேலான யோசனைகளே அரசாங்கம் அறிய வேண்டி ராஜ்ய சபை அங்கத்தினராகவும் நியமித்துக்கொண்டார்கள். ஆனுல் திட்டக் கமிஷனும், காங்கிரஸ் அரசாங்கமும் நில உச்ச வரம்புச் சட்டம், கூட்டுப் பண்ணை முறை முதலிய கவைக்குதவாதனவும் விவசாய உற்பத்தியைப் பாதிக்கும்படியானவுமான திட்டங்களே மேற்கொண்டனர். இவற்றைக் கண்டித்துச் சர்க்காருக்கு எவ்வளவோ எடுத்துரைத்தார்; எச்சரிக்கை செய்தார். கடைசியில் அரசாங்கத்துக்குப் புத்தி புகட்டும் வகையில் ஓர் எதிர்க் கட்சி உருவாக வேண்டும் என்று கருதினுர். அவருடைய ஊக்கத்தின் விளைவாகவே சுதந்திரக் கட்சி உருவாயிற்று. அவர் வற்புறுத்தலின் காரணமாக ராஜாஜி சுதந்திரக் கட்சியை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார் என்ருல் மிகையாகாது. சுதந்திரக் கட்சி தோன்றிய நாளிலிருந்து இதுவரை அதற்குத் தக்க பக்கபலமாக இருந்து உதவி வந்த லால் சிங்கின் மறைவு நாட்டுக்கும் சுதந்திரக் கட்சிக்கும் பெருத்த நஷ்டமாகும்.



## ஓர் இனிய வைபவம்

**பா**ரத நாட்டில் கடந்த எண்பத்தேழு வருஷங்களுக்கு மேலாக நடு நிலை வழுவாது பத்திரிகை தர்மத்தைப் போற்றி வந்திருப்பதுடன் லட்சக்கணக்கான பிரதிகள் விற்பனையாகுமளவுக்குப் பிராபல்யம் அடைந்துள்ள உயர்தரமான பத்திரிகை ஒன்றினைக் குறிப்பிட வேண்டுமென்றால் உடனே 'ஹிந்து' பத்திரிகையைத்தான் யாரும் சொல்வார்கள். அத்தகைய ஓர் உன்னத நிலைக்கு அந்தப் பத்திரிகை வளர்ச்சியடைய உழைத்தவர்கள் — ஜி. சுப்பிரமணிய அய்யர், கஸ்தூரி ரங்கய்யங்கார், அவரது புதல்வர் கஸ்தூரி ஸ்ரீநிவாசன் ஆகியோர்.

காலஞ்சென்ற கஸ்தூரி சீனிவாசன் அவர்களிடம் ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. சிறு வயதிலேயே தந்தையைப் பிரிந்த தம்மிடத்தில் அந்தக் குறை தெரியாதவாறு, ஒரு தந்தையைக் காட்டிலும் அதிகமான அன்பும் அபிமானமும் ஸ்ரீ கஸ்தூரி ஸ்ரீநிவாசன் காட்டி வந்தார் என்பதாக ஸ்ரீ சதாசிவம் அடிக்கடி சொல்லுவார்.

பத்திரிகைத் துறையிலும் தமக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்த ஸ்ரீ ஸ்ரீனிவாசனின் நினைவைப் போற்றும் வகையில் அன்னாரது திரு உருவப் படம் ஒன்றினைத் திருவல்லிக்கேணி ஹிந்து ஹைஸ்கூலுக்கு ஸ்ரீ சதாசிவம் அவர்கள் பரிசாக அளித்தார். ஸ்ரீ சம்கர் தீட்டிய இந்த ஓவியத்தைச் சென்னை முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் தலைமையில் நடைபெற்ற ஒரு விழாவில் மைசூர் மகாராஜா ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் சென்ற மாதம் இருபத்தியோராம் தேதியன்று திறந்து வைத்து ஸ்ரீ கஸ்தூரி ஸ்ரீநிவாசனின் குண இயல்புகளைப் பாராட்டிப் பேசினர்.



கஸ்தூரி ஸ்ரீநிவாசன் அவர்கள் ஹிந்துப் பத்திரிகையின் அபிவிருத்திக்கு என்று செய்த காரியங்கள் பல, பாரத நாட்டுப் பத்திரிகைத் தொழிலின் வளர்ச்சிக்கே எடுத்துக்காட்டாக விளங்கி உதவின என்று மைசூர் மகாராஜா கூறியதை நாம் முழுமனத்துடன் வரவேற்று அத்தகைய ஒரு பெரியாருக்கு நமது அஞ்சலிகளைத் தெரிவித்துக் கொள்வோம்.

**அட்டைப் பட விளக்கம்**

## சங்கீத பிதாமகர்

இவ்விதழ் மேலட்டையைப் புனிதமாக்கும் ஸ்ரீ புரந்தரதாஸரின் நானூறாண்டு நிறைவு விழாவை இசை விழாவின்போது நேயர்கள் யாவரும் நினைவு கொண்டிருப்பார்கள்.

தாஸர் அவர்களின் பெருமைகளை மியூஸிக் அகாடெமியில் எடுத்துச் சொல்லிய முடிகொண்டான் ஸ்ரீ வேங்கடராமய்யர் அவர்கள் இந்தச் சங்கீத பிதாமகர் முக்கியமாக இசை மாணுக்கர்களுக்குச் செய்துள்ள பேர் உபகாரத்தை விளக்கினர். சங்கீத சிட்சையின் அஸ்திவாரமாகிய ஸ்வராவளி, ஜண்டை, அலங்காரம், கீதம் முதலிய ஆரம்பப் பாடங்களை அமைத்துத் தந்ததன் மூலம் தாஸரவர்கள் இசை வளர வேண்டும் என்பதில் எவ்வளவு கருணை காட்டியிருக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்தினர். புரந்தரதாஸர் அவர்களின் பாடல்களைத் தங்கள் நிகழ்ச்சிகளில் சேர்த்துக் கொள்வதன் மூலம் பாடகர்கள் தமது நன்றியை அவருக்குத் தெரிவிக்க வேண்டும். ஹம்பியில் அவரது நானூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறவும், அவருடைய நூல்கள் பிரகரமாகிப் பிரசாரத்துக்கு வரவும் உதவி புரிவதன்மூலம் ரசிகர்கள் எல்லாரும் தங்கள் நன்றி உணர்ச்சியைத் தெரிவிக்கலாம்.

திரவியம் அனுப்பி வைக்க வேண்டிய முகவரி:

N. THIPPAIAH, Treasurer, Sri Purandaradas Fourth Centenary Celebration Samyukta Samiti, Patel Nagar, Hospet, Bellary Dt.




**39**

இறைவனை நேரில் பூதக் கண்களால் பார்க்க முடியாதாயினும், அவனைத் துதித்துப் பாட முடியும்; அதன்வழி ஆனந்தம் அடையுங்கள் என்கிறார் ஆழ்வார்.

**உளனாய நான்மறையின்**
**உட் பொருளை**

நான்கு வேதங்களிலும் அவற்றின் உட்பொருளாய் உள்ளவனாகிய அவனை.

**உள்ளத்து**
**உளனாகத் தேர்ந்துஉணர்வ**
**ரேலும்—**

இதயத்தில் வாசம் செய்கிறான் என்று தெளிந்து உணர்ந்துகொண்டு விட்டாலும்.

**—உளனாய**
**வண்டா மரைநெடுங்கண்**
**மாயவனை யாவரே**
**கண்டார்**

[வண்டாமரை - வண்தாமரை, அழகிய தாமரை.]

பிறப்பு, இறப்பு இல்லாமல் என்றும் இருப்பவனை, அழகிய தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடைய மாயவனாகிய அந்தத் திருமாலை, ஸ்வரூபத்தை முற்றும் கண்டுகொள்ள முடியாது என்று முடிவு செய்துகொண்டு, உங்களால் ஆன அளவு கல்யாண குணங்களைப் பாடிப் பாடித் துதித்து ஆனந்தம் அடையுங்கள். அதுவே நாம் செய்யக்கூடிய செயல் என்கிறார்.

**யாவரே**
**கண்டார் உகப்பர்**
**கவி**

[கவி - கவியை, தோத்திரங்களை. உகப்பர்- விரும்பி மகிழ்ச்சியில் திளைப்பார்கள்.]

அவனைக் கண்ணால் கண்டவர் யாருமில்லை. அவனுடைய தோத்திரத்தைப் பாடுவதிலே பக்தர்கள் ஆனந்தம் கொள்கிறார்கள்.

இந்தப் பாடலின் கருத்து என்னவென்றால், சாமான்யமான காட்சிப் பொருள்களைக் கண்ணால் பார்ப்பது போல் பரம்பொருளைக் காண இயலாது. பக்திமேலிட்டு உணர்வு நிலையிலே உள்ளம் உருகித் தோத்திரம் பாடும்போது உண்டாகிற அந்தப் பேரானந்தமே இறையனுபவம். நான்மறையின் உட்பொருளாக நிற்பதும், உள்ளத்திலே உணர்வு மயமாகக் கலந்திருப்பதும் இந்த அனுபவமே.

**உளனாய நான்மறையின்**
**உட்பொருளை உள்ளத்து**
**உளனாகத் தேர்ந்துணர்வ**
**ரேலும் — உளனாய**
**வண்டா மரைநெடுங்கண்**
**மாயவனை யாவரே**
**கண்டார் உகப்பர்**
**கவி.**

வழக்கமாக
உபயோகியுங்கள்
நீம்
டூத் பேஸ்ட்

மற்ற எல்லா
டூத்பேஸ்ட்களிலும்
சேர்க்கப்பட்டுள்ள
முக்கியமான ரசாயன
பொருள்களோடு நீம்
சத்தும் கலக்கப்பட்
டுள்ள டூத் பேஸ்ட்
அது ஒன்றே
தான்



கல்கத்தா
கெமிகல்
கல்கத்தா 29

HTP-192-TM

தென் இந்திய ஆபீஸ்:

5/149, பிராட்வே, சென்னை-1




THANGABASPAM
TOBACCO

KARAIKUDI.

BS

# மதுர வாணிக்கு மதுரையின் வரவேற்பு

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் எடின்பரோ கலை விழாவில் கலந்துகொள்ளச் சென்ற போது இத்தேசத்தில் ஒவ்வொரு வீட்டினரும் தமது சகோதரி அயல் நாடு செல்வது போல் பெருமைப்படுவதாகக் குறிப்பிட்டிருந்தோம். இருந்தாலும், அவர் பிறந்த ஊராகிய மதுரை அவரது அந்நிய தேச விஜயத்தில் விசேஷமான பெருமிதம் கொண்டிருந்தது. அந்தப் பெருமைக்கு ஓர் உருவம் அளித்தாற் போல் சென்ற டிசம்பர் பதின்மூன்றாம் தேதியன்று மதுரை மாநகராட்சி ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு ஒரு வரவேற்பு அளித்தது. அன்றைக்கு தெய்விகமும், தமிழும், இசையும் ஒன்றாகக் கலந்து வளர்ந்த ஆலவாயில், தெய்வத்தமிழிசைக்கு உலக அரங்கிலே பாராட்டுத் தேடித் தந்த விதுஷிக்கு மரியாதை செலுத்தப்பட்டது.

நகர மக்களின் சார்பில் திரு ஏ. சிதம்பர முதலியார் அவர்கள் ஸ்ரீமதி எம். எஸ்ஸை அழகாக வரவேற்ற பின்பு தமிழவேள் திரு பி. டி. ராஜன் அவர்கள் இசைவாணியை இதயபூர்வமாகப் பாராட்டிப் பேசினார். எடின்பரோ கலை விழாவில் கலந்துகொண்டதன் மூலம் ஸ்ரீமதி எம். எஸ். தமிழ்த்திரு நாட்டுக்குச் சிறந்த கலைத் தொண்டு புரிந்துள்ளதாகவும், இன்று எம். எஸ்ஸுக்குக் கிடைத்துள்ள கியாதி தமிழகத்துக்கே கிடைத்ததாகும் என்றும் அவர் கூறினார். சம்பிரதாயப்படி நகரசபைத் தலைவர் திரு தேவசகாயம் அவர்கள் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கு மதுரைமாநகரின் மணம் கனிந்த வரவேற்புரையை வாசித்தளித்தார்.

ஸ்ரீமதி எம். எஸ். தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு இதழையும், அணிவிக்கப்பட்ட மாலையையும் தமது கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களின் பாதத்தில் வைத்துப் பணிந்தது அனைவர் உள்ளத்தையும் தொட்டது.

இந்த அன்பான வரவேற்பில் உளம் நெகிழ்ந்து போயிருந்த ஸ்ரீமதி எம்.எஸ். தமது நன்றியைத் தெரிவித்துச் சத்திய உணர்வுடனும், சத்திய உணர்வு தரும் எளிய சொல்லழகுடனும் ரத்தினச்சுருக்கமாக ஓர் உரை நிகழ்த்தினார். ''இசையுலகில் நான் சிறியவள். என்னைவிடப் பெரியவர்களும், மகா வித்வான்களும் பலர் இருக்கிறார்கள். அந்த சங்கீத மகனீயர்களுக்கெல்லாம் என் நமஸ்காரம்'' என்று தன்னடக்கத்துடன் கூறினார். ''நான் வெளிநாடுகளுக்குச் சென்று ஏதேனும் சாதிக்க முடிந்ததென்றால் அதற்கு மதுரை மீனாட்சி அன்னையின் திருவருளும், ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் அநுக்கிரகமும், ராஜாஜி, பி. டி. ராஜன் போன்ற பெரியோர்களின் ஆசியும்தான் காரணம்'' என்று கூறினார்.

''எனக்குக் கிடைக்கும் கௌரவத்துக்கெல்லாம் என் கணவரே காரணமாவார். ரசிகர்கள் விரும்பிக் கேட்குமாறு என் இசையை உருவாக்கி வருபவர் அவரே. என் தந்தை, தாய், குரு, தெய்வம் யாவும் அவரே'' என்று உணர்ச்சியுடன் கூறிய எம். எஸ். தம்மைப் பெற்றெடுத்த தாய் வீணை ஸ்ரீமதி ஷண்முக வடிவு அம்மாளை நினைவு கொண்டு அவர் இல்லாததை எண்ணி உருகினார்.

அதன் பின் உலகத்தின் தாயான அங்கயற்கண்ணியின் மீது அருமையான ஒரு பாடலைப் பாடினார் ஸ்ரீமதி எம். எஸ். 'மேனாட்டினர் மிகவும் ரசித்த சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையைப் பாடுகிறேன்' என்று அவர் அறிவித்ததுமே சிலப்பதிகாரத்தின் உச்ச கட்டங்கள் நடைபெற்ற நான்மாடக்கூடலில் இன்று வாழும் மக்கள் பேரானந்தம் அடைந்தார்கள்.

நகரசபையின் உப தலைவர் திரு என். ஆர். ராமகிருஷ்ணன் வந்தனோபசாரம் கூற இந்த அரிய நிகழ்ச்சி இனிது நிறைவேறிற்று.

மறு நாள் மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஆடி வீதியில் நிகழ்த்திய கச்சேரியை ஓர் அற்புதம் எனலாம். சுமார் இருபதினாயிரம் மக்கள் மூன்று மணி நேரம் மௌனமாக இருந்து இசையைச் செவிமடுத்தது மதுரை மக்களின் பண்புக்கு ஓர் அத்தாட்சியாகும். அன்று திரு ராஜன் அவர்கள், தீபம் ஏற்றி வைத்தால் அந்த ஒளி எப்படி நாற்றிசையிலும் பரவுகிறதோ அவ்வாறே மதுரை தந்த சங்கீத தீபமாகிய எம். எஸ். வெளி நாடுகளிலெல்லாம் இசை ஒளியைப் பரப்பியிருக்கிறார் என்று கூறி, தேவி மீனாக்ஷியின் ஆசியாக இசைவாணிக்கு ஒரு வெள்ளிக் குத்துவிளக்கை அளித்தார்.

எம். எஸ். பிறந்தார் என்பதற்காக மதுரையும், மதுரையில் பிறந்தோம் என்பதற்காக எம். எஸ்ஸும் பரஸ்பரம் எவ்வளவு பெருமை கொண்டிருக்கிறார்கள் என்பது அந்த இரண்டு நாட்களில் வெளியாயிற்று. இந்தப் பெருமை மேன்மேலும் பொலிவுறச் சொக்கநாதனும், மீனாக்ஷி அன்னையும் அருள்வார்களாக!

ஸ்ரீ மகாபாரத சொற்பொழிவு கமிட்டி (1964) மயிலாப்பூர், சென்னை-4



# மயிலை சாயி கலா மண்டபத்தில்

**1-1-1964 முதல் 40 தினங்களுக்கு**

தினசரி மாலை 7 மணி முதல் 9 மணி வரை

திருமுருக

# கிருபானந்தவாரியார்

அவர்களால்

**ஸ்ரீ மகாபாரத சொற்பொழிவு நடைபெறும்**

★

சென்னை பிரதம நீதிபதி

**கனம் ஸ்ரீ எஸ். ராமச்சந்திர அய்யர்**

அவர்கள் தலைமை வகிப்பார்கள்

★

சேங்காலிபுரம்

**பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள்**

தொடங்கி வைப்பார்கள்

★

குறிப்பு: இந்தச் சொற்பொழிவின் மூலம் வருவாகும் பணத்தில் செலவு போகப் பாக்கி திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் சென்னை, குயப்பேட்டை, ஸ்ரீ கந்தசாமி கோயில் திருக் குளத் திருப்பணி கைங்கர்யத்திற்காகக் கொடுக்கப்படும்

**நிர்வாகக் குழுவினர்**

ஸ்ரீ S. G. ரத்னம் அய்யர்
,, V. S. கிருஷ்ணமூர்த்தி அய்யர்
கன்வீனர்கள்
,, S. H. நாராயண அய்யர்
பொக்கிஷதார்

ஸ்ரீ P. S. ராகவராம சாஸ்திரி
,, T. S. முத்துசுவாமி அய்யர்
,, M. S. நாகராஜ ராவ்
,, S. A. வைத்தியநாத அய்யர்
ஸ்ரீமதி வசுமதி ராமசுவாமி
,, லக்ஷ்மி பழனியப்பன்

மைக் & ஒலி பெருக்க ஏற்பாடு: அஸோஸியேடட் ரேடியோ ஏஜன்ஸிஸ், மைலாப்பூர், சென்னை-4



# புரந்தரதாஸர்

கே. ஸம்பத்கிரிராவ்



'லம்போதர லகுமிகர' என்ற பிள்ளையார் கீதத்தை நாம் எவ்வளவோ முறை கேட்டிருக்கிறோம். கர்நாடக சங்கீதத்தைத் தொடங்கும் கட்டத்தில் வித்தியார்த்திகள் யாவரும் கற்கும் இந்தக் கீதம் ஸ்ரீ புரந்தர தாஸரவர்களுடையதுதான். சிட்சையின் ஆரம்ப காலத்திலேயே கற்பிக்கப்படும், 'கெரய நீரனு' என்ற மலஹரி ராக கீதமும் தாஸருடையதுதான்.

தடாகத்திலிருந்து ஒரு கை நீரெடுத்துத் தடாகத்திலேயே தர்ப்பணமளிப்பவன் அதில் மகிழ்ச்சி காண்கிறான். இதேபோல் ஸ்ரீ ஹரி அளித்துள்ள செல்வத்தையும் அவனுக்கே காணிக்கை ஆக்கி, வாழ்க்கையை மெய்யாகவே வாழ்ந்து காட்டுங்கள்

என்பது இந்தப் பாட்டின் பொருள். குழந்தைக்கும் புரியும் எளிய சொற்களால் பாடுகிறார். அதே சமயத்தில் 'நாம் காண்பன யாவும் ஈசனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. அவன் உனக்குத் தருவதை அனுபவிப்பாயாக. பிறரது பொருளுக்குப் பேராசைப் படாதே' என்று கூறும் ஈசோபநிஷதத்தின் முதல் மந்திரப் பொருளையும் கூறி விடுகிறார் ஸ்ரீ தாஸர்.

பகவானுக்குத் தாஸனாகிய ஸ்ரீ புரந்தர தாஸர் எப்போதும் ஆண்டவனின் நாமம் நாவில் நிற்கத் துறவறத்தின் திருச் சின்னமாக வாழ்ந்து, இப்படியே கானத்தின் மூலம் ஞானம் உபதேசித்து மக்களிடையே சஞ்சரித்து வந்தார். மக்களுக்குப் புரிகிற மொழியில் அவர்களது அன்றாட வாழ்க்கையிலும் அனுபவத்திலுமுள்ள உவமைகளின் மூலம் உபநிஷத உபதேசங்களை ரஸாயனமாக இறுத்து அளித்தார். உலகினரை உத்தமமான வாழ்வு வாழும்படி அறைகூவினார். இந்த உபதேசப் பணியைக் கண்டு அவரது குருவாகிய ஸ்ரீ வியாஸ தீர்த்தர் அவர்களே புரந்தர தாஸரின் பாடல்களைப் 'புரந்தர உபநிஷதம்' எனப் பெரிதும் புகழ்ந்து மகிழ்ந்தார். விஜய நகர சாம்ராஜ்யம் மகோன்னதமான நிலையிலிருந்த போது, கிருஷ்ண தேவராயரின் குருவராக இருந்தவர் ஸ்ரீ வியாஸ தீர்த்தர். பெரும் புலமை பெற்றவர். அவரே இப்படிப் பொது மக்களின் மொழியாகிய கன்னடத்தில் அமைந்த இசைப் பாடல்களை முனிவர்கள் தேவ பாஷையில் தந்த உபநிஷதத்தோடு வைத்துப் பேசியது பண்டிதர்களிடையே பெருத்த சலசலப்பை உண்டாக்கி விட்டதாம்! ஆனால் எந்தக் காலத்திலுமே பாரதத்துப் பெரியவர்களின் இயல்பு எல்லாப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களையும் பண்பாட்டு வாழ்வில் உயர்த்தும் வகையிலேயே இருந்திருக்கிறது. 'ஆத்மிக உலகின் சோஷலிஸ பாணி' என்று கூறக் கூடிய இம்மரபில் வந்தவரே ஸ்ரீ புரந்தரதாஸர்.

பதினாறும் நூற்றாண்டின் முன் பாதியில் தென்னிந்தியாவில் பொது மக்களுக்குப் பெரும் உபதேசங்களை அளித்தவர்களில் ஸ்ரீ புரந்தர தாஸர் முதலில் நிற்கிறார். பொன்னையும் ரத்தினத்தையும் வியாபாரம் செய்து ஏராளமாகத் திரவியம் திரட்டியிருந்த அவர் ஆண்டவனிடம் அடிமையாவதற்காக அவ்வளவு பொருளையும் துறந்தார். இன்று ஹம்பி என்று கூறப்படும் அன்றைய விஜய நகரத்துக்குத் தம் மனைவி மக்களோடு சென்றார். அங்கிருந்த வியாஸ தீர்த்தரது மடம் அந்நாட்களில் ஒரு பல்கலைக் கழகமாகவே விளங்கிற்று. பூஜ்ய வியாஸ தீர்த்தரது சீடரானார் புரந்தர தாஸர். அதிகாலையிலேயே விழித்துக் கொண்டு துங்கபத்திரா தீர்த்தத்துக்குச் செல்வார். ஸ்நானமும், அநுஷ்டானமும் முடித்துக்கொண்டு புத்திரர்கள் உள்ளிட்ட அன்பர் குழாத்தோடு மாநகரத்தின் வீதிகளில் பகவந் நாமத்தைப் பாடி வருவார்; ஆடி வருவார்; இசையின் லயத்தோடு பக்திப் பரவசத்தில் லயித்துப் பஜனை புரிவார். ஹரிதாஸர்களுக்கே உரித்தான கோலத்தில் வருவார். தலையிலே பாகை; கண்டத்தில் துளசி மணி மாலை; கைகளில் சப்திக்கும் ஜாலரா; ஆடும் போது குலுங்குவதற்காகக் கால்களில் சதங்கை; ஒரு தோளுக்குக் கீழாகக் கட்டித் தொங்க விட்ட தம்புரா; மற்றத் தோளிலிருந்து பையின் ஸ்தானத்தில் தொங்கும் வஸ்திரம் — பிக்ஷையைச் சேகரிக்கத்தான் — இப்படியாகத் தமது புனித கோஷ்டியுடன் மெல்ல மெல்ல வீதிகளைக் கடந்து செல்வார் புரந்தர தாஸர். பிக்ஷைக்காக எந்த வீட்டினுள்ளும் நுழைவதில்லை. ஆனால் பக்தர்கள் தாங்களாகவே வந்து பிக்ஷை இட்டுச் செல்வார்கள். மற்றக் கைங்கரியங்களும் செலுத்துவார்கள். இவை புரந்தர

தாஸரின் குடும்பத்துக்குக் கண்டும் எஞ்சினை அவற்றை ஏழையருக்கும், விருந்தினருக்கும் தம்மை அண்டி வரும் சீடர்களுக்கும் அவர் அளித்து விடுவார்.

விஜயநகரத்தை விட்டு வெளியே யாத்திரை சென்றபோதும் தாஸரின் தினசரி வாழ்க்கை இதுதான். 1539ல் தமது குரு தொண்ணூற்றிரண்டு வாழ்வு முதிர்ந்து வாழ்ந்து மறைந்த பின்பு தாஸர் இருபத்தைந்தாண்டுகள் வாழ்ந்தார். அவர் க்ஷேத்திராடனம் செய்தது இந்தக் காலத்தில் தான் என்று ஊகிக்கலாம்.

திருப்தி கொண்ட உள்ளம், சொல்லும் கருத்தில் அந்தரங்கமான ஈடுபாடு, சக்தி வாய்ந்த சொல் இவற்றோடு பொலிந்த தம் வாழ்வை இம் முனிவர் ஈசுவரார்ப்பணம் செய்து வாழ்ந்ததால்தான் ஆடலினுலும் பாடலினுலும் அவர் தமது ஜீவதசையிலேயே அதிசயமான விளைவுகளை உண்டாக்க முடிந்தது. ஆண்டவன் என்பவன் உயிருடன் விளங்கிய ஒருவனாக அவருக்கு இருந்தான். இதே போல் மற்றவர்களும் ஆண்டவனைத் தங்களின் உள்ளே இதயத்தில் காண வேண்டும், வெளியிலும் எங்கும் காண வேண்டும்; தூய மனத்தோடு ஆண்டவனின் கருணையை நம்பி வாழ்ந்தால்தான் அவர்கள் சம்சாரப் போராட்டத்தைத் தீரமாக எதிர்த்து நிற்க முடியும் என்று உபதேசித்துப் பாடினார் தாஸர். சுற்றி வளைக்காமல் நேரடியாகப் பொருளைச் சக்தியுடன் சொல்வது அவரது பாடல்களின் தனிச்சிறப்பு. அவர் தாமே பெற்றிருந்த ஆத்மிக சாதனைகளும் அநுபவங்களும்தான் இத்தகைய சக்தியை அளித்தன.

'நா நின்னத்யான' என்ற கானடா ராகப் பாடலில் அவர் எவ்வளவு நிச்சயத்துடன் கூறுகிறார் பாருங்கள்: ''உன் தியானத்தில் நான் அமிழ்ந்திருக்கும்போது போக்கிரிகள் என்னை என்ன செய்ய முடியும்?'' தொடர்ந்து கூறுகிறார் :

> நீ என்னைப் பாதுகாத்து வரும்போது தீயோர்களால் எனக்கென்ன தீங்கு நேர முடியும்? நான் முழுவதும் உன் நினைவில் நிரம்பிக் கிடக்கிறேன். உக்கிரமாக எரிகிற தீயை எறும்புகள் எதிர்க்க முடியுமா? துஷ்டக் குதிரை ஒன்று ஓடும்போது எழுகிற புழுதி சூரியனின் காந்தியை மறைக்க முடியுமா? இன்னல்களைத் தாங்கவும், இன்னல் படவும் அறிந்த ஒருவருக்கு என்ன கெடுதல் விளைய முடியும்? வீசுகின்ற சுழல் காற்றினால் மலையை அசைக்க முடியுமா?

இத்தகைய உயர்ந்த நம்பிக்கையுடன் தான் புரந்தர தாஸர் உலகத்தையும், அதன் சோதனைகளையும் எதிர்கொண்டார். அதே போல வாழுமாறு உலகத்துக்கு உபதேசித்தார்.

'ஜலபோஜ' என்ற புகழ் பெற்ற மத்தியமாவதி கிருதியில் அவர் சொல்கிறார்:

> நீ நீத்தி நிலத்தே வெற்றி காண வேண்டும். ஆசைகளையும் உலகின் கொடிய இன்பங்களையும் விட்டு விடவேண்டும். தாமரை இலை நீர் போல் வாழவேண்டும். முந்திரிப் பருப்புப் பழத்துக்குள் புதைந்திராமல் வெளியே நீட்டிக் கொண்டிருப்பது போல் வாழ வேண்டும். தூண்டிலில் செருகிய மாமிசத் துண்டுகளைக் கொரித்துத் தானே பிடிபட்டுவிடும் மீனாகத் துன்புறுதே! உலகத்தின் மாயையில் சிக்காதே, என்றும் ஆண்டவனையே நம்பி வாழ்.

'மானவ ஜன்ம' என்ற பூர்வி கல்யாணி ராகப் பாட்டில் பேசுகிறார்:

> மானுடனாகப் பிறப்பது கிடைத்தற்கரிய பேறு. அறிவிலிகாள்! அந்தப் பேற்றைத் தூர எறிந்து விடாதீர். புழுதியிலே உழைந்து கொண்டு மண்ணைத் தின்னுகிறீர்கள். அறிவு கெட்டவர்களே! பொன்னையும் பொருளையும் விரும்பிப் பட்டினி கிடப்பதை விட்டுப் பரமனின் நாம அமுதத்தைப் பருகிப் பசி தீருங்கள்.

'இது பாக்ய, இது பாக்ய' என்ற பந்துவராளிப் பாடலில், தாம் ஆண்டவனைப் பாத சேவை செய்து அனவரதமும் பாடக் கிடைத்தது பாக்யம் என்று கூறித் தொடர்கிறார்.

> சம்சார சாகரத்தின் அலைகளுக்கிடையே நீ பாறை போல் உறுதியாய் இருக்க வேண்டும்.
>
> ஞானிகளின் சங்கத்தில் வில்லைப் போல் வளைந்து கொடுக்க வேண்டும்.
>
> பொறுமையுடன் மென்மையாகப் பிரார்த்தித்து ஆண்டவனைத் திருப்திப் படுத்த வேண்டும்.
>
> உறவினருக்கு இனியவனாக இருக்க வேண்டும்.
>
> அறிவின் உதவியால் உனது செயல்களையும் சிந்தனைகளையும் சீராக்கிக் கொள்ள வேண்டும்.
>
> சாதுக்களுடனும், சந்நியாசிகளுடனும் இருக்கும்போது அவர்களுடைய ஊமைக் குழந்தையாக இருக்க வேண்டும்.
>
> பக்தி என்ற தத்துவக் கடலில் மீனாக நீந்த வேண்டும்.
>
> எண்ணத்திலும், உரையிலும், செயலிலும் நீ எப்போதும் பரிசுத்தமாக இருக்க வேண்டும்.

சமய தத்துவங்களை விளக்கும் போதும் ஸ்ரீ புரந்தர தாஸர் புராணங்களையும் பழங்கதைகளையும் தாராளமாகக் கையாண்டார். அஜாமிளன், துருவன், பிரஹலாதன், கஜேந்திரன் முதலிய புராணப் பாத்திரங்களை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார்.

மகா வீரனான ஹனுமானின் புகழ் பாடவோ அவர் சிறிதும் சலிக்கவில்லை. கர்ம யோகம், பக்தி, ஞானம் என்ற மூன்றுக்கும் ஒரு மூர்த்தியாக அமைந்த ஆதரிச புருஷராக ஆஞ்சநேய ஸ்வாமியைக் கொண்டாடினார் புரந்தர தாஸர். ஹனுமானின் அவதாரமாக மத்வாச்சாரியாரைக் கருதுவது மாத்வரின் மரபு. ஆனபடியால் பக்தி சம்பிரதாயத்தைச் சேர்ந்த புரந்தர தாஸருக்கு ஹனுமந்தனிடம் தனியொரு பக்தி இருந்தது இயற்கையே. மேலும் அவர் வாழ்ந்த ஹம்பியும் அதன் சுற்றுப்புறங்களும்தான் ராமாயண காலத்தில் கிஷ்கிந்தையாயிருந்ததென்றும் அங்குதான் ஆஞ்சநேயர் பிறந்து வளர்ந்தார் என்றும் ஒரு நம்பிக்கை உண்டு.

எனவே ஹம்பியில் தமது சமய சாதனைகளைப் புரிந்து வந்த தாஸர் மீண்டும் மீண்டும் ராமபிரானிடம் தொழும்பு பூண்ட அந்த மகாத்மாவிடம் சிந்தனையைத் திருப்பிப் பக்தி புரிந்தார்.

ஏதேனும் ஒரு காட்சியையோ சம்பவத்தையோ கண்டவுடன் அந்த வேகத்தில் அப்போதே அவர் பாடிய ஆக கிருதிகள் பல உண்டு. இவையும் நிரந்தர உண்மைகளை உள்ளடக்கியுள்ளதால் கேட்பவரின் உள்ளத்தில் ஆழப் பதிந்து விடுகின்றன.

கோயிலில் ஆலாட்சி மணி ஒலிக்ிறது— எல்லாக் கோயில்களிலும் நடக்கிற நிகழ்ச்சி தான். ஆனால் தாஸர் சட்டென்று ஒரு பாட்டுப் பாடி விடுகிறார்.

> மணி முழங்குகிறது. கேளுங்கள்! என்னவென்று முழங்குகிறது? உங்களுடைய வாழ்க்கை செலவாகிக் கொண்டே வருகிறது; மெல்ல மெல்ல நழுவிக்கொண்டே வருகிறது என்று முழங்குகிறது. காலம் கருணையின்றிக் கழிந்து கொண்டே யிருக்கிறது. சுறுசுறுப்பாகுங்கள்! நீங்கள் செய்த செயல்களை எண்ணிப் பாருங்கள். இனிச் செய்ய வேண்டியவற்றையும் நினைந்து பாருங்கள்.

'தாளோ செரிஸோ இதை' என்ற பாடல் இது.

மிகவும் புனித சீலர்களாக இருப்பது போல் வேஷம் போடுபவர்களைக் கண்டால் தாஸருக்குச் சிரிப்பு வருகிறது. 'நெகயுபருதிதே' என்ற பாடலில், ''வெளி வேஷத்தையும், ஆஷாடபூதித்தனத்தையும் பார்க்கும் போது நான் சிரிக்கிறேன்'' என்று கூறுகிறார். வயிற்றுப்பாட்டுக்காக அல்லவா இப்படி ஆசார வேஷம் போடுகிறார்கள் என்று வருந்தி, 'ஹயோ, சற்றும் பக்தி யில்லாமல் போனார்களே' என்று பாடுகிறார், 'உதர வைராக்ய' என்ற பாடலில்.

சமையற்கட்டில் நுழைந்து வாலைக் குழைத்த நாயை அடித்துத் துரத்தினாலும் திரும்பியும் அது அங்கேயே வருவதை ஒப்பிட்டு, மக்களின் சபலப் போக்கை நகைச்சுவையுடன் மறைமுகமாக விமரிசிக்கிறார் தாஸர்.

> வளைந்த வாலுள்ள சுவானமே! அடுக்களையில் திருட்டுத்தனமாக உள்ளே நீ என்ன தின்றாய்? பட்சணமும் பணியாரமுமா? அடியும் உதையும்தானே? பாவம். சிணுங்கி வாலையாட்டிக் கொண்டு நீ ஓடுவதைப் பார்த்தேனே!

என்கிறார் 'தொங்கு பாலத நாயி' என்ற பாட்டில்.

புரந்தர தாஸரின் பாடல்களில் வாழ்க்கையின் எந்த ஒரு சம்பவமும் விட்டுப்போகவில்லை. இதனால்தான் அவை நாலு நூற்றுண்டுகளுக்குப் பின்னும் இன்னும் கன்னட நாட்டின் ஒவ்வொரு வீட்டிலும் வாழ்கின்றன.

வேஷதாரிகளைப் பயமின்றிக் கண்டித்தது போலவே தம்மைச் சுற்றிலும் கண்ட எல்லா ஒழுங்கீனங்களையும் அவர் கண்டனம் செய்தார். சமூகம் உயர்ந்த சமூக நன்னெறிகளைச் சார்ந்து நிற்க வேண்டும் என்று பாடுபட்டார். அவர் எந்தத் தனி ஒரு நபரைக் குறித்தும் பாடவில்லை. எனினும் அவருடைய பாடல்களில் பல தங்களுக்கே பொருந்துவதாகக் கேட்போர் நினைப்பதுண்டு. 'கடு மூர்க்கரிவரு' என்ற பாட்டில் மனிதனின் மடமைகளுக்கு அவர் தயாரிக்கும் இந்தப் பட்டியலில் பல அம்சங்களில் ஒருசில எவ்வளவு பேருக்குப் பொருந்தும் பாருங்கள்:

மடமையின் உச்சி இவையே:

> உறவினர்களுக்குக் கடன் கொடுப்பது: உடன் இருப்பவர்களை முன்னாக உறுத்துவது: ஜீவனோபாயத்துக்காகக் குழந்தையை விற்பது: மனைவியின் பிறந்த வீட்டில் போய் வசிப்பது: வறுமைக் காலத்தில் கண்டவரிடமெல்லாம் எரிந்து விழுவது: முதுமையில் கலியாணம் செய்துகொள்வது: கன்று இறந்துபோன பசுவைக் கறப்பது: அடமானம் இல்லாமல் பணம் கொடுப்பது: தாயைத் தூற்றுவது: அன்னமிட்டவருக்குக் கன்னம் செய்வது: வெறும் வதந்தியைக் கேட்டுப் பரபரப்படைவது.

புரந்தர தாஸரின் காலத்தில் தீண்டாமை வழக்கம் மிகக் கடுமையாக இருந்தது. 'தீண்டாதார் ஊருக்கு வெளியேதான் இருக்கிறார்களா? உள்ளே இல்லையா?' என்று கேட்கும் முனிவர் 'ஹொலய ஊர ஹொரகே' என்ற பாடலில் சேர்க்கத் தகாதவர்களின் இழி குணங்களை எடுத்துச் சொல்லி ஊருக்குள்ளே வாழும் பல உயர் ஜாதியினரும் இதன்படி தீண்டாதாரே என்கிறார். பிறப்பையும் செல்வத்தையும் கொண்டு பெருமிதப்படுவதை அவர் ஏராளமான பாடல்களில் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்.

புஞ்புயான பகுத்தறிவும், நடைமுறை ஞானமும் கொண்ட பாடல்கள் மட்டுமின்றி, உன்னதமான மனோபாவங்களை எளிய மொழியில் கூறும் பாட்டுக்களும் உண்டு.

தர்மமே வெல்லும் — இந்தப் புனித வாக்கை என்றும் மறவாதீர்.



''ஐய்யய்யோ! சிங்கத்தைச் சுடுப்பா! சும்மா பார்த்துகிட்டு நிக்கறியே, கையிலே துப்பாக்கி வச்சிக்கிட்டிருந்தும்...''

''அட...மெள்ள சுட்டாப் போவுது. இந்தப் பொட்டல் காட்டிலே அது எங்கே போய் ஒளிஞ்சுக்கப் போவுது?...''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

விஷத்தைத் தந்தவனுக்கு விருந்து தாருங்கள்; பகைத்துக் கொன்பவனுக்குப் பாதுகாப்பளியுங்கள்; வஞ்சகம் செய்தவன் பெயரை உங்கள் மகனுக்கு இடுங்கள். என்றெல்லாம் 'தர்மமே ஜெயவெம்போ' என்ற பாட்டில் கூறுகிறார். எப்பேர்ப்பட்ட இலட்சிய வாதம்!

சான்றோர் கேண்மையைப்பற்றி அவர் அடிக்கடி குறிப்பிடுகிறார். 'துர்ஜனரமனெ யொளிஹ' என்ற பாடலில்,

'தீயவன் வீட்டின் பால் பருகுவதைவிட உத்தமன் இல்லத்தில் நீர் அருந்துவது நலம்; தீயவர்களுடன் இன்பமாய்ப் பொழுதைக் கழிப்பதை விட, உத்தமர்களிடம் சச்சரவிடுவதில் கழியும் பொழுது பயன் தரும்' என்கிறார்.

இப்படி மாற்றி மாற்றி இரு விஷயங்களைச் சொல்லும் எத்தனையோ பாடல்களை உதாரணம் காட்டலாம். ஏனெனில் அவர் அபாரமான வளம் பொருந்திய சாகித்திய கர்த்தர். அவர் நாலு லட்சத்து எழுபத்தையாயிரம் பாடல்களை இயற்றியதாகச் சொல்வதுண்டு. தற்போது, அவருடையது என்று நம்பக் கூடிய ஆயிரத்து இருநூறு பாடல்களே கிடைத்துள்ளன.

புரந்தர தாஸரின் வாக்கில் யாரும் தவிர்க்க முடியாமல் ஆழ்ந்து ஈடுபடுவதற்கு ஒரு முக்கியமான காரணம் அவரது பாடல்களின் எளிமையான இசை உருவம்தான். அதில் சொல்லும், ஒலியும் துலாக்கோல் பிடித்து நிறுத்தாற்போல் ஒன்றி இசைந்திருக்கின்றன. எளிய வார்த்தைகளை எளிய இனிய இசைப் பெட்டகத்துக்குள் ஒளித்திருக்கிறார். அது இதயம் அறிவு இரண்டையும் ஆகர்ஷிக்கிறது. நமது உணர்ச்சியைப் பொருளின் பால் தூண்டிவிடவே அவரது சங்கீதம் பயனுறுகிறது. வார்த்தைகள் கூறும் கருத்திலிருந்து சங்கீதம் நம்மை ஒருபோதும் வேறு திசையில் திருப்பி விடுவதில்லை. இன்று சங்கீத விற்பன்னர்களாக இருந்து தாஸரிடம் பக்தி கொண்டுள்ள சில உற்சாகிகள் சங்கீத அலங்காரங்களைப் பூட்டும் ஓர் ஆப்பாக மட்டும் அவரது சொற்களைக் கருதிப் பாடுவது அவருக்குச் செய்யும் சேவையாகாது.

பாலகிருஷ்ணனை வருணித்து ஸ்ரீ தாஸர் இயற்றியுள்ள எழிலார்ந்த பாடல்கள் நமது விலைமதிப்பற்ற சொத்துக்களில் அடங்கும். அவற்றில் சில பரத நாட்டியத்திலும் அபிநயம் பிடித்துக் காட்டப்படுகின்றன. உதாரணமாகப் பரத நாட்டியக் கலைஞர்களின் அபிமானப் பாடலும், எல்லா ரசிகர்களும் என்றும் விரும்புவதுமான 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ.' விழாக் காலங்களில் இந்தப் பாடல்களைப் பெண்டிர் விசேஷமாகப் பாடுவதுண்டு. தங்களுடைய குழந்தையையே ஸ்ரீ கிருஷ்ணனாக நினைத்துப் பாடுவார்கள். நம் தேசத்திலன்றி வேறெங்கு குழந்தைகளை இப்படித் தெய்வமாகப் பாவிக்கப் போகிறார்கள்? இந்த பாவத்தை நம் அன்னைமார்கள் உணருவதற்குக் கண்ணனின் பாலிய லீலைகளைக் கூறும் பாடல்களே பெரிதும் காரணம். மக்களின் இலக்கியமாகி விட்ட ஸ்ரீ கிருஷ்ணலீலையைப் புரந்தர தாஸரும் வளப்படுத்தி யிருக்கிறார். கொஞ்சுவது, கெஞ்சுவது, மிஞ்சுவது, தாலாட்டுவது என்றிப்படி பல பாவங்களையும் ஏராளமான பாடல்களில் வடித்திருக்கிறார். இப்பாடல்கள் நம் நாட்டின் எண்ணிறந்த இல்லங்களில் இனிமையையும், ஒளியையும் பரப்பியிருக்கின்றன.

தட்சிண பாரதத்தின் வாழ்முறையையும் சிந்தனையையும் செம்மைப்படுத்துவதில் ஸ்ரீ புரந்தர தாஸரும், மற்ற ஹரிதாஸர்களும் கொண்டுள்ள பங்கை மதிப்பிடவே முடியாது. இந்த நாலு நூற்றாண்டுகளாக வாழ்க்கை என்ற கலையை நமது மக்களுக்குப் போதித்து வரும் ஓர் ஆசிரியரே ஸ்ரீ தாஸர். அவரது ஞானம் நமது வாழ்வை என்றும் பிரகாசப்படுத்தி வருமாக!









**1885**-ம் ஆண்டு மத்தியில் ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தொண்டையில் நோவு உண்டாயிற்று. சாதாரணப் புண்ணாகவும் வலியாகவும் இருந்தது நாளாக ஆக உக்கிரமாகிக் கொண்டு வந்தது. வைத்தியர் பரீட்சித்துப் பார்த்தார். மருந்துகள் சொன்னார். 'ரொம்பவும் பேசக் கூடாது, பரவசமும் சமாதியும் கூடாது' என்று சொன்னார். அது பரமஹம்ஸரால் முடிகிற காரியமா? சிஷ்யர்களிடம் அன்பு கொண்டு உபதேசிப்பதையும், ஆண்டவனிடம் அன்பு கொண்டு உபாசிப்பதையும் அவரால் எப்படி நிறுத்த இயலும்?

கல்கத்தாவுக்கு அருகிலுள்ள பாணிஹாதியில் ஓர் உற்சவத்துக்குச் சென்ற பரமஹம்ஸர் ஒரு நாள் முழுவதும் பாட்டும், பரவச ஆட்டமும், சமாதியுமாகச் செலவிட்டார். உடம்பு அதனைத் தாளவில்லை. மீண்டும் வைத்தியர்கள் பார்த்தார்கள். பழைய கதையையே சொன்னார்கள். ஆனால் உலக அன்னையிடம் குழந்தையாகவும், உலக மக்களிடம் அன்னையாகவும் இல்லாமல் இருக்கப் பரமஹம்ஸரால் இயலவில்லை.

1885-ம் ஆண்டு இறுதியிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் படுத்த படுக்கையாகவே ஆனார். நரேந்திரருக்கு அச்சம் உண்டாயிற்று. நண்பர் ஒருவரிடம் அவர் கூறினார்: ''நம்முடைய அன்புக்கும், பக்திக்கும் உரியவர் நீண்ட நாள் நம்மிடையே இருக்க மாட்டார் என்று அஞ்சுகிறேன். இவருடைய நோயைக் குறித்து நான் சில வைத்திய நூல்களைப் படித்தேன்; மருத்துவ நண்பர்களையும் ஆலோசித்தேன். அதிலிருந்து அவருடைய தொண்டைப் புண் புற்று நோயாகி விட்டது என்றே பயப்படுகிறேன். புற்று நோய்க்கு இது வரை மருந்து கண்டுபிடிக்கவில்லை.''

இதயத்தில் அமிருதம், வாக்கிலும் அமிருதம்; இதய அமுதத்தை இன்சொல் அமுதமாகப் பொழிந்தவரின் தொண்டையிலா கோரமான புற்றுநோய்?

முறைப்படி சிகித்ஸை செய்ய வேண்டுமென்றார்கள். உடலைப் புறக்கணிக்க வேண்டும் என்ற அளவுக்குக் கூட அதனிடம் சிரத்தை காட்ட இயலாத பரமஹம்ஸர் நடக்கிறபடி நடக்கட்டும் என்று அதற்கும் இணங்கினார். நரேந்திரர் அவரிடம் வந்து சேர்ந்த அதே ஆண்டில் மதுராநாதரின் மனைவி ஜகதாம்பாதாஸி ஜகன்மாதாவின் பாதாரவிந்தத்தை அடைந்து விட்டதால் இப்போது முன்போல் தட்சிணேசுவரம் சௌகரியப்படவில்லை. முதலில் கல்கத்தாவில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி அங்கு குடிபெயர்ந்தார் தட்சிணேசுவரத்தைத் திருத்தலமாக்கிய குருநாதர். பக்பஜார் என்ற பகுதியில் பலராம போஸின் வீட்டில் ஒரு வாரம் தங்கி சிகித்ஸை பெற்றார். அதன்பின் சியாம்புகூரில் சௌகரியம் வாய்ந்த ஒரு வீட்டுக்குச் சென்று தங்கினார். கல்கத்தாவின் பிரபல ஹோமியோபதி நிபுணரான டாக்டர் மஹேந்திர லால் சர்க்கார் வைத்தியம் செய்யலானார். நாம் கண்டு நீண்ட நாட்களாகிற குழந்தை சாரதாமணியும் இப்போது தூய அன்னையாகிய ஞானி சாரதா தேவியாகி, சியாம்புகூருக்கு வந்து சமையல் பணியை ஏற்றுக் கொண்டாள்.

நரேந்திரரின் குருபக்தி ஏனைய சிஷ்யர்களுடைய குருபக்திக்கு வலிவூட்டியது. அவர்கள் யாவரும் வீடு, படிப்பு முதலியவற்றை இரண்டாம் பக்ஷமாகக் கருதிக் குருநாதரின் பணிவிடையில் ஈடுபட்டனர். அவர்களுடைய பெற்றோர்கள் எதிர்த்துப் பார்த்தனர். ஆனால் நரேந்திரரின் உறுதி — அவர் மற்றவர்களுக்கு அளித்திருந்த உறுதி — காரணமாக அந்த எதிர்ப்புப் பிசுபிசுத்தது.

தங்களிடம் இருக்கும் பொருளை யெல்லாம் குருநாதருக்குச் சமர்ப்பிக்க கிருஹஸ்த சிஷ்யர்கள் முன்வந்தார்களெனில் பிரம்மச்சாரி சிஷ்யர்களோ, தங்கள் உடலை அவரது பணிக்கே பரிபூரணமாக ஈடுபடுத்த உறுதிபூண்டார்கள். குருமஹராஜின் அந்தக் கொடூரமான நோயே அவரது சிஷ்யர்களெல்லாம் ஒன்று சேரவும் உதவியது.

குருநாதரது வியாதியைப் பற்றிப் பலப்பல கருத்துக்கள் எழுந்தன. 'அவதார புருஷராகிய ராமகிருஷ்ணருக்கு ஏன் இத்தகைய பயங்கர வியாதி சம்பவிக்க வேண்டும்?' என்ற கேள்வி எழுந்தது.

எந்த வியாதி வந்தாலும் அது உடலுக்குரியதே எனக் கொண்டு, உள்ளத்தை அது பற்றாது என்பதை நிருபித்து ஆனந்தம் சற்றும் குன்றாமலிருக்கும் பான்மையை உலகுக்கு நிதரிசனமாக்கவே அவதார புருஷராகிய ஸ்ரீராமகிருஷ்ணர் புற்று நோயை ஏற்றார்; கர்மவினை காரணமாக வந்த நோயல்ல அது — என்று சிலர் கருதினர்.

நமக்குப் புரியாத ஏதோ முக்கியமான நோக்கத்துக்காகக் காளிமாதா தான் அந்த வியாதியை ஏற்படுத்தியிருக்கிறாள் — என்று சிலர் கருதினர்.

இயேசுநாதர் போல் பக்தர்களின் பாபத்தைத் தாங்கி அதற்காகத்தான் பரமஹம்ஸர் இந்த நோயைத் தாமாகவே ஏற்றிருக்கிறார் என்பது வேறு சிலருடைய கருத்து.

ஆனால் இன்னமும் ஏனோ நரேந்திரரால் மட்டும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஓர் அவதாரம் என்பதை முழுக்க முழுக்க ஒப்புக் கொள்ள முடியவில்லை. அவருடைய தேக உபாதியையும் தாமாக ஏற்படுத்திக் கொண்டதாகவோ, இயற்கை விதிகளுக்கு மேலாக அம்பிகை ஏற்படுத்தியதாகவோ நரேந்திரர் கருதவில்லை. உடலுக்குப் பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் முதலிய இயற்கை மாற்றங்கள் நிகழ வில்லையா? ஸ்ரீராமகிருஷ்ணரும் குழந்தையாகவும், இளைஞராகவும் இருந்துதானே முதுமையடைந்தார்? அதே போல அவருடைய உடம்புக்கு இயற்கையாக இந்தப் பயங்கர நோய் கண்டிருக்கிறது — என்றுதான் நரேந்திரர் அபிப்பிராயப்பட்டார்.

சாதாரண மானுடராகப் பிறந்திருந்தாலும், தெய்விகத்தைப் பெற்று விட்டவர் தமது குருமஹராஜ் என்பதில் அவருக்குச் சம்சயம் இருக்க வில்லை. இதைப் பற்றி அவர் டாக்டர் மஹேந்திரலால் சர்க்காரிடம், ''தாவரங்கள்—ஜீவராசிகள் இவற்றுக்கிடையே ஓர் இனம் உண்டு. அந்த இனத்திலுள்ள ஒன்றினைத் தாவரம் என்பதா, ஜீவராசி என்பதா என்று நிர்ணயிக்க முடியாது. அதே போல மனித உலகுக்கும் கடவுள் உலகுக்குமிடையே ஏதோ ஒரு ஸ்தானத்தில் உள்ளவர் குருநாதர்'' என்று கூறினார்.

எந்த மஹேந்திரலால் சர்க்காரிடம் நரேந்திரர் இப்படிக் கூறினாரோ அவரிடமே பரமஹம்ஸர் வேறு விதமாகப் பேசினார். ''அத்வைத கோஸ்வாமியின் தீவிரமான பிரார்த்தனையின் காரணமாகத்தான் ஸ்ரீ கௌரங்கர் (கிருஷ்ண சைதன்யர்) அவதரித்தார் என்று சொல்வதுண்டு. அது போல் நீங்கள் இங்கே பார்ப்பது எல்லாமும் (அதாவது பரமஹம்ஸராகிய தம்முடைய அவதாரமும்) அவனுக்காகத்தான் (நரேந்திரருக்காகத்தான்)'' என்று கூறினார்.

குருமஹராஜின் முக்கிய சிஷ்யரான நரேந்திரர் தமது ஆசாரியர் அவதார புருஷரா என்பதை நிச்சயமாக விளக்காததற்கும் ஒரு காரணம் இருந்திருக்க வேண்டும். பரமஹம்ஸரின் போதனைகள் உலகுக் கெல்லாம் பொருந்தி யிருந்தன. ஆனால் ஆண்டவனின் அவதார ரகசியம் உலகம் முழுவதற்கும் புரியாத மர்மாகும். இந்த மர்மத்தைச் சொல்லி யாவரும் ஏற்கக் கூடிய தத்துவங்களைக் குழப்புவானேன் என்று நரேந்திரர் எண்ணியிருக்கக் கூடும். தத்துவத்தை மறந்து தத்துவ உபதேசகரைத் தொழும் நிலையும் அவதாரக் கொள்கையால் ஏற்படக் கூடும் என்றும் அவர் கருதியிருக்கலாம். உண்மையிலேயே ராமகிருஷ்ண முனிவருடைய சிஷ்யர்களிடையே இப்படி ஒரு போக்கு தோன்றத் தொடங்கியது.

பிரபல வங்காளி நாடகாசிரியரும், போகாத வழி யெல்லாம் போய், பிறகு குருநாதர் அருளால் சன்மார்க்கத்தைத் தொட்டவருமான கிரீச சந்திர கோஷ் இதற்குக் காரணமாக அமைந்தார். அவருடைய வாழ்க்கை முழுவதையும் பரமஹம்ஸர் தாமே வாங்கிக்கொண்டு நடத்தி வைத்ததால் கிரீச சந்திரருக்குப் பரமஹம்ஸர் சர்வேசுவரனின் அவதாரமே என உறுதிப்பட்டுவிட்டது. அதைத்



**கணவன் :** உஸ்! கத்தாதே! இரும்புப் பெட்டியை மாடியிலிருந்து கீழே கொண்டு போக ஒரு மாசமா ஆளைத் தேடிக்கிட்டிருந்தேன். ரொம்பக் கூலி கேட்டாங்க. ஏதோ தெய்வச் செயலா திருடங்க வந்து தூக்கிட்டுப் போறாங்க! கீழே கொண்டு போனதும் கத்தலாம்!!

தயக்கமின்றி வெளியிட்டும் விட்டார்: ராமசந்திர தத்தர் இதனை முற்றிலும் ஒப்புக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன், கிருஷ்ண சைதன்யர் இவர்களின் அவதாரமே குருமஹராஜ் என்று கருதி அவரைத் தொழலானார். அதோடு இந்த அவதாரத்தில் முன்பு எவரெவராக இருந்தவர்கள் எந்தெந்த சிஷ்யர்களாக மீண்டும் பிறந்திருக்கிறார்கள் என்று ஆராயவும் தொடங்கினார். உணர்ச்சி வசப்பட்டவர்களையே உத்தம பக்தர்களாகக் கருதித் தம் முடிவுகளை அவர் வெளியிட்டார்.

இதனாலெல்லாம் சிஷ்யர்களின் நிதானமும், மனசின் சம நிலையும் மாறின: இவற்றை விட உணர்ச்சிப் பரவசமும், அழுகையும், சிரிப்பும், ஆட்டபாட்டமும், ஆர்ப்பாட்டமுமே சிறந்தவை என்றெண்ணி, அவர்கள் மனக் கிளர்ச்சியைப் பயிலலானார்கள். அதாவது உண்மையாகப் பொங்கி வரும் உணர்ச்சிப் பிரவாகத்துக்குப் பதிலாகத் தாங்களாகவே மனக் கிளர்ச்சியை வரவழைத்துக் கொள்ளலானார்கள். 'என்னிடம் பொறுப்பைத் தள்ளி விட்டு நிம்மதியாயிரு' என்று பரமஹம்ஸர் பூரண சரணாகத புத்தி பெற்றிருந்த கிரீசரிடம் கூறியதைத் தவறாகப் புரிந்து கொண்ட சிஷ்யர்கள் சிலர், தாங்கள் என்ன தவறு செய்தாலும் தங்களை அது தீண்டாதபடி குருநாதர் ரட்சித்து விடுவார் என்று எண்ணலானார்கள்.

இது காரணமாக அவர்களின் சாதனையும், துறவற விருப்பமும் தளரலாயின. இந்நிலையில் பிரம்ம சமாஜத்தின் முக்கியஸ்தர்களில் ஒருவரான விஜய கிருஷ்ண கோஸ்வாமி இந்த உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு உரமூட்டினார். ஒரு நாள் டாக்காவில் தமது இருக்கையில் அவர் தியானம் புரிந்து கொண்டிருக்கையில் ராமகிருஷ்ண தேவரின் உருவெளித் தோற்றத்தைக் கண்டார். உடனே குருமஹராஜிடம் விரைந்தார் அவர். ''நான் இந்தத் தேசம் முழுதும் சஞ்சாரம் செய்திருக்கிறேன். பல ஆத்மஞானிகளைக் கண்டிருக்கிறேன். ஆனால் உங்களைப் போலொருவரை நான் காண வில்லை. நீங்கள் யார் என்பதில் இனி எனக்கு ஐயமே இல்லை. நீங்கள் இவ்வளவு எளிதில் அணுகக்கூடியவராக இருப்பதால்தான் நீங்கள் யார் என்பதை மக்கள் புரிந்து கொள்ளவில்லை. நீங்களே எங்கேனும் ஒரு மலையின் உச்சாணிச் சிகரத்தில் வசித்தீர்களெனில், யாத்திரைசெய்து அணுகுவதற்குச் சிரம சாத்தியமாக இருக்குமிடத்தில் வசித்தீர்களெனில், உலகம் உங்களை வேறு விதமாகப் பார்க்கும்...''

என்றெல்லாம் பரமஹம்ஸரிடம் பொழியத் தொடங்கி விட்டார் விஜயர்.

விஜயர் சியாம்புகூருக்கு வரத் தொடங்கியதிலிருந்து அங்கு ஒரே அல்லோல கல்லோலமாயிற்று. 'இந்த நிமிஷமோ, மறு நிமிஷமோ எப்போது வேண்டுமானாலும் தாம் அவதாரம் என்று நிரூபிக்கும் ஓர் அற்புதத்தைக் குருநாதர் புரியப் போகிறார்' என்று ஆவேசமாகக் காத்திருந்தனர் அடியார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரோ மானுடருக்குரிய நோயைக் கடவுளுக்குரிய பொறுமையுடன் தாங்கும் பேர் அற்புதத்தை மட்டுமே புரிந்து வந்தார்.

சிஷ்யர்களின் போக்குச் சரியான முறையில் செல்ல வில்லை என்று வருந்தினார் நரேந்திரர். உபாஸனையாலும், துறவாலும், உள்ளுருகிய பக்தியாலும், ஞானானுபவத்தாலும் மகானானவர் குருமஹராஜ். அவர் பரவசமுறுவது சத்திய தரிசனத்துக்கு அநுகூலமானது. ஆனால் அநுபூதி பெறாத சீடர்கள் தற்போது அடையும் பரவசம் அப்படிப்பட்டதல்ல என்று அவர் கருதினார்.

அவர்களுக்கு அன்புடன் உபதேசித்தார்: ''பொய் உணர்ச்சிகளுக்கு ஆத்

மிக சாம்ராஜ்யத்தில் மதிப்புக் கிடையாது. மனக் கிளர்ச்சிகளுக்கு ஒரு தடை இல்லாவிடில் தேகமும் புத்தியும் கோளாறுவதிலேயே முடியும். ஆத்மிக வாழ்க்கையை மேற்கொள்ளும் நூறு பேரில் எண்பது பேர்கள் போலியாகவும் பதினைந்து பேர்கள் பைத்தியமாகவும் ஆகிறார்கள். பாக்கி ஐந்து பேர்களே சத்திய தரிசனத்தைப் பெறும் பாக்கியத்தைப் பெறுகிறார்கள். எனவே, ஜாக்கிரதையா யிருங்கள்.''

எதிலுமே போலித்தனம் மன்னிக்க முடியாததாகும். மதத்தில் கேட்கவே வேண்டாம். மற்றப் போலிகளை மாற்ற உதவும் மத உணர்விலேயே போலித்தனம் கலந்து விட்டால் அதைவிடப் பாபம் உண்டோ?

வேண்டுமென்றே ஆவேசத்தை நடிக்கப் பழகியவர்கள், நரேந்திரருடைய புத்திமதியின் பேரில் அந்த நடிப்பை விட்டார்கள். மற்றவர்களுக்கு நல்ல உணவு அளிக்கப்பட்டு, அவர்களையும் பிராணாயாமம் முதலியவற்றில் பயிலுவித்ததில் கொந்தளிப்பு அடங்கப் பெற்றார்கள். உண்மையான துறவு பற்றியும், பக்தி பற்றியும் பாடிப் பாடியே நரேந்திரர் பலருடைய சித்தத்தைத் திருத்தினார். குருமகராஜுடைய தீவிரமான சாதனைகளை எடுத்துக் கூறி அவற்றுக்காக அவர் எவ்வளவு அந்தரங்க சுத்தமாகப் பாடுபட்டார் என்பதை விளக்கினார். 'அவரை உண்மையாகப் போற்றுவது அவரைக் கடவுளாகத் தொழுது பரவசம் அடைவதல்ல; அவருடைய உபதேசங்களை அநுசரிப்பதேயாகும்' என்பதை மற்ற சிஷ்யர்கள் ஏற்குமாறு செய்தார் நரேந்திரர்.

குரு தேவரின் உடல்நிலை நாளுக்கு நாள் க்ஷீணித்து வந்தது. மருந்துகளினால் ஒரு பயனும் இல்லை. ஆலைகளும், குடியிருப்பு வீடுகளும் நெரிசலான கல்கத்தாவின் சூழ்நிலை பரமஹம்ஸருக்கு உகந்ததல்ல என்று கருதினார் மஹேந்திரலால். எனவே, கல்கத்தாவின் புற நகரங்களில் ஒன்றான காஸிப்பூரில் கோபால சந்திர கோஷ் என்பாருக்குச் சொந்தமாயிருந்த ஒரு வீடு மாதம் எண்பது ரூபாய் வாடகைக்கு அமர்த்தப்பட்டது. சுற்றிலும் தோப்பும் துரவும் சூழ்ந்த அந்த அமைதியான வீட்டுக்கு 1855ம் ஆண்டு டிசம்பர் 11-ந் தேதியன்று குருமஹராஜ் பெயர்ந்தார்.

சகிக்க இயலாத நோவும் ஆசுவாசமும் மாறி மாறி வந்தன. ஒரு நிமிஷம் புற்றுநோயின் கொடுமையில் துடிப்பார் குருமஹராஜ். மறுகணமே அமைதி நிறைந்த ஆனந்தத்தில் மிதப்பார்: 'தமது காரியம் பூர்த்தியாகி விட்டது; தம்மிடம் பூத்த அநுபவப் புஷ்பங்களைக் கொய்து ஹாரமாக்கி உலகுக்குச் சூட்டக்கூடியவர்கள் வந்தாயிற்று' என்ற உணர்ச்சி அவரிடம் மேலோங்கி நின்றது.

புத்தர் கூறிய தர்மத்தைப் பிரசாரம் செய்ய ஓர் ஆனந்தரும், இயேசுநாதரின் உபதேசங்களின் மீது கிறிஸ்து சமயத்தை நிலைநாட்ட ஒரு பீடரும், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரின் பக்தி நெறியைப் பரப்ப நித்தியானந்தரும் பிறந்தது போல ராமகிருஷ்ண முனிவரின் அநுபவங்களை உலகுக்குப் பொதுவாக்கப் பிறந்த நரேந்திரர் தமது பிறவிப் பணியைப் புரிந்துகொண்டாயிற்று. மரணப் படுக்கையிலும் சிஷ்யருக்கு எத்தனையோ உபதேசங்களைப் புகட்டினார் குரு. உத்தரவுகளை இட்டார். பேச முடியாமலே ரகசியக் குரலில் சிரமப்பட்டுப் பேசினார். அதுவும் முடியாதபோது எழுதிக் காட்டினார்.

''போகு முன் சொல்ல வேண்டிய தவ்வளவையும் வெளியிட்டு விடுவேன்'' என்றும் ''இவ்விடத்தைப் பற்றி ஏராளமான மக்கள் போற்றிப் பாராட்டத் தொடங்கும்போது அன்னை அதனை எடுத்துக் கொண்டு விடுவாள்'' என்றும் அவர் சொன்னதை நினைந்து நினைந்து நொந்தனர் சிஷ்யர்கள்.

இப்போது அடியார் கூட்டமோ பெருகிக் கொண்டே வந்தது. கருணை வசப்பட்ட பரமஹம்ஸர் அவர்கள் எல்லோரிடமும், ரணம் கண்டு ரத்தம் கசியும் தொண்டையிலிருந்து அமுதம் துளிக்கப் பேசிக்கொண்டேதான் இருந்தார். ரணம் உக்கிரமாயிற்று. குருநாதரின் உடம்பு எலும்புக் கூடாகி வந்தது.

இரவு பகல் சிஷ்யர்கள் காஸிப்பூரிலேயே தங்க நேரிட்டது. அப்போது நரேந்திரர் சட்டப் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் அவர்களுடைய வீட்டுக்கு உரிமை கோரி ஒரு பங்காளி தொடுத்திருந்த வழக்கில் விசாரணை நடந்து கொண்டிருந்தது. கல்கத்தாவுக்கும் காஸிப்பூருக்குமாகத் திண்டாடினார் அவர். காஸிப்பூரிலேயே தமது புத்தகங்களைக் கொண்டு வந்து படிக்கலானார்.

இத்தனைக்கும் நடுவே நரேந்திரரின் உள்ளம் தெய்வ தரிசனத்துக்காகக் கொந்தளிக்கத் தொடங்கியது. தெய்வ தரிசனம் மட்டுமல்ல; தரிசிக்க முடியாத நிர்க்குணப் பிரம்மத்தில் சற்றேனும் இரண்டறக் கலந்திருக்க வேண்டும் என்ற ஆர்வம் அவர் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்தது.

ஒரு நாள் இரவு காஸிப்பூரில் தங்கி யிருந்தபோது அவருக்கு உறக்கம் கொள்ளவே யில்லை. உள்ளே ஏதோ பேரலைகள் நிமிர்த்து நின்றன; எரி மலைகள் வெடிக்கத் தயாராக இருந்தன. அந்தக் கமுக்கத்தை அவரால் தாங்கவே முடியவில்லை.

சரத், இளைய கோபால், இன்னும் சிலரைக் கூட்டிக் கொண்டார் நரேன். ''தோட்டத்தில் கொஞ்சம் உலாவ லாம் வாருங்கள்'' என்று கூறி அவர் களை அழைத்துச் சென்றார். நடந்த படியே பேசலானார். ''குருமஹராஜின் நோய் மிகவும் முற்றிவிட்டது. அவர் இருக்கும்போதே பிரார்த்தனை, தியானம் இவற்றின் மூலம் ஆத்ம உயர்வைப் பெற முயல்வோம். இல்லாவிடில் பிறகு எல்லை யில்லாமல் பச்சாத்தாபப் பட வேண்டியதாகும். 'இந்த வேலை ஆகட் டும், அந்த வேலை ஆகட்டும்; அதன்பின் ஆண்டவனுக்காகப் பிரார்த்திக்கலாம்' என்று மூட்டாள்தனமாகக் காலத்தை விரயமாக்கி வருகிறோம். இந்த எண்ணத்தை இப்போதே வேரோடு பிடுங்கி எறிய வேண்டும்.''

நிசி அன்னை உடுத்த வானப் புடவை யில் சரிகைப் பொட்டுக்களை அள்ளித் தெளித்தாற் போலத் தாரா கணங்கள் மயக்க ஒளி சிந்தும் அந்த வேளையில், மரமும் செடியும் கொடியும் மண்டிய காஸிப்பூர் தோப்பில் பரிசுத்தமான உள்ளம் உடைய வாலிபர்கள் தெய்வத் தைக் காண வேண்டும் என்ற மகோன் னதமான லட்சியத்துடன் சென்று கொண்டிருந்தார்கள்.

நட்சத்திர ஒளியில் நரேந்திரர் கண் ணுக்கு வைக்கோலும், சுள்ளிகளும் அருகே கிடப்பது தெரிந்தது. ''இதற்கு அக்கினி மூட்டுவோம். இந்த வேளையில் தான் சந்நியாசிகள் 'துனி' என்ற தீ மூட்டுவது வழக்கம். நாமும் தீ மூட்டு வோம். அந்தத் தீயில் நம் ஆசைகளைச் சாம்பராக்குவோம்'' என்றார் நரேந்திரர்.

அக்கினி வளர்க்கப்பட்டது. அத னைச் சுற்றி அந்த இளம் பிள்ளைகள் வட்டமாக அமர்ந்தனர். உண்மை யாகவே தங்கள் ஆசைகளைப் பஸ்மீ கரமாக்குவதாகப் பாவித்து அக்னி பகவானை வணங்கினர்.

குப்பையும் சத்தையுமான எண்ணங் களை உள்ளம் கொள்ளாமல் நிரப்பிக் கொண்டிருக்கும் நாம் அகக் கண்ணால் கண்டு தூய்மை பெற ஒரு காட்சி இது.

உடலுயிர் மே லுணர்விலுந் நீ
ஓங்கி விட்டானே - இந்நேரம்
கடவுளர் தாம் எம்மை வாழ்த்திக்
கை கொடுத்தாரே

என்று கவி பாடியது மெய்யாயிற்று. கடவுளர் அந்த அற்புத இளைஞர்களுக் குக் கைகொடுத்துவிட்டனர். (தொடரும்)

## இதுவும் ஒரு சிற்பம்

இந்த இதழின் இன்னொரு பக்கத்தில் அரசினரின் ஓவியக் கலைத் தொழில் கல்லூரி பற்றியும் அங்கு மாணவர் களுக்குப் போதிக்கப்படும் நவீன ஓவிய, நவீன சிற்பப் பாணிகள் பற்றியும் ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறது.

இதோ பக்கத்தில் நீங்கள் காண்பதும் அத்தகைய நவீன சிற்பங்களுள் ஒன்று தான். முழுக்க முழுக்க சைக்கிள் பகுதி களாலேயே தயாரான இந்த அதி நவீன சிற்பம் ஜெர்மானியச் சிற்ப ஓவியரின் படைப்பு. படத்தைப் பார்த்தால் தலை கால் புரியாமற் போய்விடுமோ என்று தான் முன்னெச்சரிக்கையாகப் பக்கத் தில் இரண்டு பேர்களை நிற்க வைத்திருக் கிறார்கள் போலும். அது சரி, இந்த அதி நவீன சிற்பம் எதைக் குறிக்கிறது அல்லது எதை உணர்த்துகிறது? சிந் தித்துப் பார்த்தால் ஏதாவது ஒரு முடி வுக்கு வராமலா போய்விடுவோம்?



## திருமணம்



மணமகன் : மணமகள் :

S. ராஜேந்திரன் - விஜயலெக்ஷ்மி

★

மணமகன் : திருவனந்தபுரம் உயர்திரு V. S. சுப்பிரமணியம், B. A., B. L., I. A. A. S. (ரிட்டயர்டு டிப்டி அக்கவுண்டன்ட் ஜெனரல்) அவர்களுடைய புதல்வனும் Dr. S. சிவராஜன், B.Sc., M.B. B.S. (விஜயா கிளினிக், நாகர்கோயில்) அவர்களுடைய சகோதரனுமான Dr. S. ராஜேந்திரன், B.Sc., M.B. B.S. (ராஜன் கிளினிக், கல்லிடைக் குறிச்சி) அவர்களுக்கும்,

மணமகள் : நாகர்கோயில் ராமவர்ம புரம், கலைமகள் தெரு, இலட்சுமி இல்லம் A. ராஜலெக்ஷ்மி - P. கணபதி அவர்களின் புதல்வி சௌ. விஜயலெக்ஷ்மிக்கும் 1—12—63ல் திருமணம் இனிது நடந்தது.

வாழ்க மணமக்கள் !





தயாரிப்பவர்கள்
பாரத் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

ஏஜண்டுகள்
தி ஓரியண்டல் மெர்க்கண்டைல் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா - பம்பாய் - டெல்லி
கான்பூர் - சென்னை



# ஏழை பங்காளன்

ஏழை எளியவர்களால் சமூகத்துக்கு என்ன பயன்? தாங்களும் சிரமப்பட்டுக் கொண்டு மற்றவர்களையும் சிரமத்துக்குள்ளாக்கும் அவர்கள் சமூகத்துக்கு ஒரு தீராத பிரச்னை என்று பலர் நினைக்கலாம். ஆனால் அவர்கள் திரைக் கதைக்குப் பெருநிதியாக இருந்து வந்திருக்கிறார்கள். உலகில் துயரப்படுகிறவர்களை வேறு யார் கவனிக்கா விட்டாலும் படாதிபதிகள் விடாமல் கவனித்து அவர்கள் அவல வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டி வந்திருக்கிறார்கள்! பெரும்பான்மையான படங்கள் ஏழைகள் படும் அல்லல்களை மாத்திரம் காட்டிக் கண்ணீரை வரவழைக்கும் கதையாகத்தான் இருக்கும். ஆனால் ராஜலட்சுமி பிக்சர்ஸாரின் ''ஏழை பங்காளன்'' கதை ஏழை மக்களைச் சுற்றியே வளர்ந்து அவர்களுக்குச் சுபிட்சம் அளிக்க முயன்று வழக்கமான போக்கிலிருந்து மாறியிருக்கிறது.

பணக்கார வாலிபனான ரகு ஏழைகளோடு ஏழைகளாய் வாழ்ந்து அவர்களைச் சீர்திருத்தி நல் வழிப்படுத்தும் முயற்சியில் பலவிதத் துன்பங்களை அனுபவிக்கிறான். இடையில் ஏழைப் பெண் பொன்னுருக்கியின் காதலும் கிடைக்கிறது.

ஜெமினி கணேசனுக்கு முற்றிலும் புதிய பாத்திரம். சிரமமான பாத்திரத்தை ஏற்று அமைதியாக நடித்து வெற்றி பெற்றிருக்கிறார். 'பிளாட் பாரம்' வாசிகளோடு புழுதியில் படுத்து, ஆப்பம் தின்று, அநாதைச் சிறுவர்களைத் தெருக் குழாயடியில் குளிப்பாட்டி, போக்கிரி ஒருவனிடம் அடிபட்டு அவதிப்படுகிறார். இந்தப் படத்தில் 'காதல் மன்னன்' மக்கள் திலகமாக மாறியிருக்கிறார்! மக்கள் திலகம்தான் வர வரக் காதல் மன்னனாக மாறி வருகிறாரே! ''தாயாக மாறவா?'' என்ற பாட்டுப் பாடப்படும்போது ஜெமினி கணேசனின் முகபாவங்கள் உருக்கத்தை வெளிப்படுத்துவதும், ''முட்டையை விட்டுப் பறவை வந்து முழிக்க முழிக்கப் பாக்குதடா'' என்ற பாட்டுக்கு வேடிக்கையான முகபாவங்களை வெளிப்படுத்துவதும் நன்றாயிருக்கின்றன.

சின்னக் கண்ணுவாக வரும் ராகினி நன்றாய் நடித்திருக்கிறார். அதிகப்படியான அழகையும், நிறைய வசனமும் இல்லாத வரையில் ராகினிக்கு அதிர்ஷ்டம்தான். ''நான் ஆப்பம் சுட்டுச் சம்பாதிக்கிறேனே! அது போதாதா? நீ என்னத்துக்கு வேலைக்குப் போகணும்?'' என்று ரகுவைக் கள்ளங்கபடின்றிக் கேட்கும்போது அவர் நடிப்பு தத்ரூபமாக இருக்கிறது.

நாகேஷ் 'சாயா' விற்பவனாக வந்து தமிழும் மலையாளமும் கலந்து பேசியே 'அப்ளாஸ்' வாங்குவது பாராட்டுக்குரியது. டி. எஸ். முத்தையாவின் துயரமும், எம். என். நம்பியாரின் உருட்டல் மிரட்டல்களோடு, அசோகனின் கெடுபிடிகளும் சேர்ந்து கதைக்குத் திருப்பம் தருகின்றன. கொதிக்கும் சோற்றில் உள்ளக் கொதிப்பை உருவாக்கிக் காட்டியிருப்பது ஒளிப்பதிவின் திறமைக்குச் சான்று பகர்கின்றது. ஒளிப்பதிவுக் கலைஞர் தம்புவின் கைவண்ணம் படம் முழுதும் படிந்திருக்கிறது.

என்னதான் ஏழை பங்காளனானாலும் காதல் இல்லாவிட்டால், பழகிப் போன படரசிகர்கள் ஏமாற்றமடைவார்கள் என்று கனவில் காதலிக்கச் செய்திருக்கிறார்கள்! அக்காட்சி நன்றாய்ப் படமாக்கப்பட்டிருக்கிறது.

சென்ஸார் போர்டுக்கு வேலையே வைக்காத படம், இனக் கவர்ச்சி இல்லாமலே சுவாரஸ்யமான படம், நல்ல கருத்துக் கொண்ட படம் 'ஏழை பங்காளன்'.

— காந்தன்





# மீனாட்சி கல்யாணம்

அனுசூயா

‘மீனாட்சி கல்யாணம்’ கதா காலட்சேபம் செய்பவர் சொல்லிக் கொண்டிருந்தார்:

“இப்படியாகத்தானே கல்யாணத்துக்கான சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டு விட்டன. முப்பத்து முக்கோடி தேவர்களும், பதினாயிரத்தொரு ரிஷிபுங்கவர்களும் வந்து விட்டார்கள். அவர்களுக்காக இமயமலையை ஒத்த அளவுக்கு முதல் தரமாகச் சிறுமணி அரிசிச் சாதம் வடித்துக் குவிக்கப்பட்டிருந்தது. அந்தச் சாதம் சாப்பிடுவதற்கு வேண்டிய அளவு கறிகாய் மலைகள், சாம்பார், மோர்க் குழம்பு, ரசம், பாயசம் நிரப்பப்பட்டிருந்த பெரிய குளங்கள்....

“மாப்பிள்ளையாகிய சிவபெருமானும் ஜாம் ஜாம் என்று வந்து விட்டார். அவருடன் ஒருத்தர் தான் வந்திருந்தார். அவருக்குக் குடை பிடிக்கும் குண்டோதரன் என்று பெயர்.

“இவ்விருவரையும் பார்த்த மீனாட்சியின் தோழிகளுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்து விட்டது. அவர்கள் மீனாட்சியினிடம் போனார்கள்.

“ஏன், மீனாட்சி! சிவபெருமானைப் பற்றி அப்படி இப்படி என்றெல்லாம் சொன்னாயே. வெறும் ஆண்டி மாதிரியிருக்கிறாரே” என்றாள் ஒருத்தி.

“சம்பந்தி என்று ஒருத்தரையும் காணவில்லையே. பார்க்கச் சகிக்காமல் ஓர் ஆளை மட்டும் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறாரே” என்றாள் இன்னொருத்தி.

“பாவம்! அப்பா, அம்மா, அண்ணன், தம்பிகள், அக்கா, தங்கைகள், தாயாதிகள், அக்கம் பக்கத்தார் எல்லோரோடும் சண்டை போலிருக்கிறது.....” என்றாள் மூன்றாவது தோழி.

அவர்கள் சொல்வதைக் கேட்டபோது மீனாட்சியை அவமானம் பிடுங்கித் தின்றது. பதில் சொல்லாமல் தலையைக் குனிந்துகொண்டிருந்தாள்.

“திருமாங்கல்யதாரணம் ஆகி விருந்தாளிகள் சாப்பிட்டு விட்டுப் போகும் வரையில் பொறுத்துக் கொண்டிருந்தாள். பிறகு தன் கணவன் ஏகாந்தமாய் இருக்கும்போது அவரிடம் சென்றாள். அவள், “இந்தாங்க, உங்களைத்தானே!” என்று ஆரம்பிக்கவில்லை. ‘ஹல்லோ, மை டியர்!’ என்று இந்தக் காலத்துப் படித்த பெண்களைப் போலவும் கூப்பிடவில்லை. ‘நாதா! தேவரீருக்கு அடியேன் ஒன்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். முப்பத்து முக்கோடி தேவர்கள் சாப்பிட்டு விட்டுப் போன பிறகும் சமையல் பாதிக்கு மேல் மீந்து போய் விட்டது. தாங்கள் நாற்பது கோடி சிவகணங்களையும் அழைத்துக் கொண்டு வருவீர்களென்று எதிர்பார்த்துச் சமையல் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. தாங்கள் ஒருத்தரை மட்டுமே அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள். என்னுடைய தோழிமார்கள் என்னைப் பரிகசிக்கிறார்கள்...” என்றாள்.

“‘தேவி மொழிந்ததைக் கேட்டுப் பகவான் புன்னகை புரிந்தார். ‘பிரியே! கவலைப்பட வேண்டியதில்லை’ என்று திருவாய் மலர்ந்தருளினார். பிறகு குண்டோதரனைக் கூப்பிட்டார். ‘சமையல் செய்து மீந்து போயிருக்கும் யாவற்றையும் தின்று தீர்ப்பாயாக’ என்று பணித்தார். உடனே வடவாமுகாக்கினியை அவரது வயிற்றுக்குள் செலுத்தினார். குண்டோதரன் ஒரே விநாடியில் எல்லாவற்றையும் சாப்பிட்டு முடித்தார்.

‘பசிக்கிறதே! இன்னும் விந்திய மலையளவு சாதம் வேண்டுமே!’ என்றார்.

‘தாகம் தாங்க முடியவில்லையே!’ என்று தவித்தார். உடனே சிவபெருமான், பூமியைக் காண்பித்து ‘வைகை’ என்று ஆக்ஞாபித்தார். குண்டோதரன் அவ்வண்ணமே கையை வைத்தபோது அந்த இடத்திலிருந்து ஓர் ஆறு கிளம்பிற்று. அதிலிருந்து பெருக்கெடுத்து ஓடிய தண்ணீரைக் குண்டோதரன் குடித்துத் தாகவிடாய் தணித்துக் கொண்டான். அந்த ஆற்றுக்கு அதிலிருந்துதான் வைகை ஆறு என்று பெயர் வந்தது......”

காலட்சேபம் செய்பவர் இப்படிச் சொல்லிக் கொண்டே போனார். இந்தக் குண்டோதரன் சம்பவத்தைக் கேட்ட போது, கல்யாணம் சிக்கனமாகச் செய்ய வேண்டுமென்று பிரசாரம் செய்கிறார்களே அது விஷயம் ஞாபகத்துக்கு வந்தது.

‘கல்யாணம் என்றால் அநாவசியமாக ஊரைக் கூட்டி அமர்க்களப்படுத்தக் கூடாது’ என்று உதாரணம் காட்டுவதற்காகவே சிவபெருமான் ஒரே ஒரு மாப்பிள்ளைத் தோழனை மட்டும் அழைத்துக் கொண்டு வந்தார் என்றே எனக்குத் தோன்றியது.

கல்யாணம் சிக்கனமாகச் செய்வதைப் பற்றி, பங்களூர்க்காரரான திரு சாமண்ணா என்பவர் எழுதிய கடிதம் ‘ஹிந்து’ பத்திரிகையில் வெளியாகியிருந்தது. அதில் அவர் சமீபத்தில் நடைபெற்ற ஒரு கல்யாணத்தைப்

பற்றிய உண்மையான செலவு விவரங்கள் தந்திருக்கிறார். முகூர்த்தம் ஒரு கோவிலில் நடைபெற்றது. அதற்கு ஐம்பது பேருக்கு மட்டுமே அழைப்புக்கள் அனுப்பப்பட்டிருந்தன. பகல் விருந்து ஒரு ஹோட்டல் தோட்டத்தில். மாலை அதே இடத்தில் சிற்றுண்டி, வரவேற்பு. அழைப்பு நூறு பேருக்கு மட்டும். மொத்தச் செலவு ரூபாய் ஆயிரம் மாத்திரம். இந்தக் கல்யாணத்தை நடத்தியவர்கள் உயர்தர மத்திய வகுப்புக் குடும்பத்தினர். மாதம் சுமார் எழுநூறு, எண்ணூறு ரூபாய் வருமானமுள்ளவர்கள்.

இந்தக் கலியாணத்தின் வைதிக காரியங்கள் நடந்த போதும், விருந்தின் போதும் வரவேற்பின் போதும் அழைக்கப்பட்டவர்கள் ஒவ்வொருவரும் நன்றாகக் கவனிக்கப்பட்டு உபசரிக்கப்பட்டிருப்பார்கள் என்பது நிச்சயம். ஏனென்றால், சந்தைக் கூட்டம் கூட்டவில்லையே.

எல்லோருக்குமே கலியாணத்தைச் சிக்கனமாகச் செய்ய வேண்டுமென்றுதான் உள்ளூற ஆசை. ஆனால் அப்படிச் செய்யத் தைரியமில்லை. 'நாலு பேர் நாளைக்கு என்ன சொல்வார்களோ?' என்ற பயம்.

ஊரில் உள்ளவர்கள் எல்லாரும் தாங்கள் கலியாணம் செய்த விதத்தைப் பற்றியே ஓயாமல் பேசிக் கொண்டிருப்பார்கள் என்ற கவலை. கல்யாண விஷயம் ஒரு நாள் நாடகம். பெண் வீட்டினரின் தாயாதிகளும், பிள்ளை வீட்டினரின் தாயாதிகளும் கொஞ்ச நாளைக்கு ஏதாவது குறை கூறிக் கொண்டிருப்பார்கள். அதைத் தவிர வேறு ஆபத்து எதுவுமில்லை.



கல்யாணமென்றால், 'சிக்கனம் செய்யாதிருப்பது எப்படி' என்பதில் தான் முடியும் என்று தோன்றுகிறது. இது அழைப்புக் கடிதம் அச்சடிப்பதிலிருந்து ஆரம்பமாகிறது. முதலில் நானூறு, ஐந்நூறு கடிதங்கள் போதுமென்று தீர்மானிப்பார்கள். அது கடைசியில் குட்டி போட்டுக் கொண்டே போய் ஆயிரத்துக்கு வந்துவிடும். இத்தனை அழைப்புக்களுக்கும் இராப் பகல் உட்கார்ந்து கொண்டு கைவலிக்க விலாசம் எழுதுவார்கள்.

ஒரு பையன் எல். ஐ. ஸி. காரியாலயத்தில் வேலை செய்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் அந்தக் கட்டடத்தின் பதினான்கு மாடிகளிலும் வேலை செய்வோருக்கு அழைப்புக் கடிதங்கள் அனுப்ப வேண்டும் என்று ஆசைப்படுகிறான்.

சில பணக்காரர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். அவர்களுக்குத் தங்கள் வீட்டுப் பெண் பிள்ளைகளுக்குக் கல்யாணம் வரும் சமயம் பார்த்துத் திடீரென்று தெய்வ பக்தி வந்து விடும். தங்கள் பாட்டியோ, யாரோ கலியாணத்தைக் கோயிலில் செய்வதாகப் பிரார்த்தனை செய்து கொண்டு விட்டது ஞாபகத்துக்கு வரும். சந்தடியின்றி ஒரு கோயிலில் போய்க் கலியாணம் நடத்தி விட்டு வந்து விடுவார்கள். ஆனால் ஒரு நாள் மாலை வரவேற்பு என்று வைத்து விடுவார்கள். அந்தக் கூட்டத்துக்கு ஆயிரம் பேர்கள் வந்தால்கூட அதற்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய்க்கு மேல் செலவாகாது. இந்த ஏற்பாட்டில் சள்ளையும், பொறுப்பும் மிகக் குறைவு.

ஒருவர் தமது முதல் பெண்ணுக்குக் கலியாணம் செய்து வைக்கும்போது இப்போதெல்லாம் அவருக்கு வயது ஐம்பத்தைந்து ஆகிவிடுகிறது. உத்தியோகத்தில் உள்ளவர்கள் பலர் பென்ஷன் பெற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிற வயது. கல்யாணம் செய்தாக வேண்டிய பெண்கள் இன்னும் சிலர் இருக்கலாம். ஒரு கல்யாணத்துக்கே கையில் உள்ளதை எல்லாமோ, கடன் வாங்கியோ செலவழித்து விட்டால் பிறகு எப்படிக் காலம் தள்ளுகிறது?

முக்கியமாகச் சாதாரண மத்திய வகுப்புக் குடும்பத்தினர்கள் சிக்கனமாகக் கலியாணம் செய்துகொள்ளத் தீர்மானிக்க வேண்டும். அதற்கு முதற்படியாக 'மாப்பிள்ளை அழைப்பு' என்று ஒன்று இருக்கிறதே அதை நிறுத்தி விடலாம். ஒரு ஐந்தாறு காஸ் லைட்டுகளுடன் ஒரு பழைய ஓட்டை வண்டியில் முப்பது வயதான ஒரு பையனை வைத்து அதன் பின்னால் ஏழெட்டு ஸ்திரீகளும் வந்து ஊர்வலம் நடத்தினால்தான் கலியாணம் ஆகுமா? இது மாதிரி ஊர்வலங்களைப் பார்க்கும் மற்றவர்கள் அவற்றைப் பரிகசித்துத்தான் வருகிறார்கள்

''எல்லாம் சரிதான். சிக்கனமாக நடத்தப் பிள்ளை வீட்டார் சம்மதிக்க வேண்டுமே!'' என்று நீங்கள் கேட்கலாம்.

நியாயமான கேள்வி. அதற்கு ஒரு யோசனை தோன்றுகிறது.

அநாவசியமாகச் செலவழித்தால் எவ்வளவு ஆகுமென்று கணக்குப் போட்டுப் பாருங்கள். அதில் ஒரு பங்கைப் பிள்ளை வீட்டாருக்குக் கமிஷனாகக் கொடுப்பதாகச் சொல்லுங்களேன். அநேகமாக அவர்கள் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்வார்கள்.

★

**பார்வதி:** காமாட்சி தன் ஒரே பெண்ணுக்குப் பெரிய இடத்தில் கல்யாணம் பண்ணினாளாமே! இவ்வளவு நாள் பழகிய நம்மைக்கூட ஒரு வேளைச் சாப்பாட்டுக்குக் கூப்பிடாம இப்படியா கருமித்தனமாகக் கல்யாணம் பண்ணணும்?

**சங்கரி:** அவள் என்ன பண்ணுவாள், பாவம்! இருக்கிற ஆஸ்தி பாஸ்தியையெல்லாம்தான் வரதட்சிணையாகச் சம்பந்தி வீட்டாருக்குக் கொடுத்துவிட்டாளே!



செல்கிற ஆண்டுக்கு மங்களகரமாக விடை கொடுக்கவும், வருகிற ஆண்டை மகிழ்ச்சிகரமாக வரவேற்கவும் தமிழகம் கொண்டாடும் தனிப் பண்டிகையாக விளங்குகிறது ஆண்டு தோறும் சென்னையில் நடைபெறும் இசை விழா. இந்த ஆண்டும் இந்த இசை விழா சிறப்புற நடைபெற்றது. வாசகர்களுக்கு இசையை எழுத்தில் தர இயலாவிடினும், சங்கீத மகா நாட்டு வைபவக் காட்சிகளை இங்கு தருகிறோம்.

**மேல் மூன்று படங்கள்:**

மியூஸிக் அகாடமியின் முப்பத்தேழாவது மகாநாடு டிசம்பர் இருபதாம்தேதியன்று அதன் சொந்த மண்டபத்தில் தொடங்கிற்று. விழாவைத் தொடங்கி வைத்த திரு காமராஜ் அவர்கள் அகாடமியின் துணைத் தலைவரும், அதன் சங்கீத மண்டபம் எழும்பப் பேர் உதவி புரிந்தவருமான மத்திய மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார். கோட்டு வாத்தியம் ஸ்ரீ பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் தலைமை தாங்கினார்.

**கீழ் இரண்டு படங்கள்:**

இசை விழாக்கள் நடைபெற்ற அதே சமயத்தில் சாகித்திய கர்த்தர்களில் தன்னிகரின்றி விளங்கும் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களை தமிழ் எழுத்தாளர் மாநாட்டில் கௌரவித்தது மிகவும் பொருத்தமாகும். சிவன் அவர்களோடு, தமிழ்

வளர்ச்சிக்கு அருந் தொண்டாற்றியுள்ள ஜனாப் தாவூத் ஷாவுக்கும் மகாநாட்டின் சார்பில் திரு சா. கணேசன் அவர்கள் கேடயங்கள் வழங்கிக் கௌரவித்தார்.

மேல் மூன்று படங்கள்:

தமிழிசைமகாநாட்டின் இருபத்தியொன்றாவது விழா டிசம்பர் இருபத்தி யொன்றும் தேதி அண்ணாமலை மன்றத்தில் தொடங்கப்பட்டது. மத்திய மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் தொடங்கிவைக்க, சங்கீத கலாநிதி முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் அவர்கள் 'இசைப் பேரறிஞர்' என்ற விருதைப் பெற்று விழாவுக்குத் தலைமை தாங்கினார்.

ஸ்ரீ முசிரி அய்யரவர்களும், ஸ்ரீ எஸ். ராமநாதனும் பாடினார்கள். பண் ஆராய்ச்சி மகாநாட்டை திரு மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் தொடங்கி வைத்தார். கோபாலகிருஷ்ண பாரதியார் பாடல் போட்டியில் வெற்றி பெறுபவருக்குரிய ராஜாஜியின் தம்புராப் பரிசை பி. லீலாவதி பெற்றார்.

•

கடைசிப் படம்:

இந்தியன் ஃபைன் ஆர்ட் சொஸைட்டியின் முப்பத்தியொன்றாவது விழாவை டிசம்பர் இருபத்திமூன்றும் தேதியன்று தமிழக முதன் மந்திரி திரு எம். பக்தவத்சலம் அவர்கள் ஆரம்பித்து வைத்தார். தியாகராயநகர் வாணிமகாலில்நடைபெற்றஇந்த வைபவத்துக்கு ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி அவர்கள் தலைமை வகித்தார்.



# மாம்பழ வழக்கு

தாமரை மணாளன்

மண்டூகனூரைப் பொறுத்த அளவில் மிகப் பெரிய விசேஷம் என்னவென்றால், அந்த ஊரின் பெயரைப் பெருமைப்படுத்துவ தற்காக அப்புசாமி, கந்தசாமி என்று இருவர் இருந்ததுதான். அவர்கள் இருவரும் அண்டை வீட்டுக்காரர்கள். அவர்கள் தங்கள் ஊரின் பெயர் விளங்கும்படி எவ்வளவோ காரியங்கள் நிகழ்த்தி யிருக்கிறார்கள். அதில் எதுவும் அவர்கள் சமீபத்தில் நிகழ்த்திய மாம்பழ வழக்குக்கு ஈடாகாது.

அப்புசாமி வீட்டுக்கு யாரோ ஒரு விருந்தாளி ஒரு கூடை மாம்பழத்தைக் கொண்டு வந்திருந்தார். அதில் ஒரு பழம் சற்று அழுகலாக இருந்தது. அந்த அழுகல் பழத்தைக் குப்பையில் போடுவதா அல்லது அடுத்த வீட்டுத் திண்ணையிலிருக்கும் கந்தசாமி யின் மகன் கையில் கொடுப்பதா என்று சிறிது நேரம் யோசித்துப் பார்த்தார் அப்புசாமி. அடுத்த வீட்டுப் பையனிடம் கொடுத்தால், என்றாவது ஒரு நாள் யாராவது ஒரு விருந்தாளி அடுத்த வீட்டுக்கு ஏதாவது கொண்டு வரும் போது




அதில் தன் வீட்டுக்கும் பங்கு வரலாம்; அதை விட்டுக் குப்பையில் போட்டால் குப்பைத் தொட்டி திருப்பித் தரவா போகிறது என்று தோன்றியது அவருக்கு. உடனே அதை அடுத்த வீட்டுக்காரரின் பையனிடம் கொடுத்து விட்டார். அந்தப் பையன் தின்று பார்த்து விட்டு, மாங்கொட்டையை ஆத்திரத்துடன் கொல்லைப் பக்கம் விட்டெறிந்தான்; அது இரண்டு வீட்டுக் கொல்லைப்புறங்களுக்கும் எல்லையில் போய் விழுந்தது.

இது நடந்த ஒரு மாதத்துக்குப் பின் திடீரென்று அப்புசாமிக்கும் கந்தசாமிக்கும் ஒரு பெரும் அமளி ஏற்பட்டு விட்டது. அதற்குக் காரணம், அவர்கள் இருவரும் தங்கள் கொல்லைப்புற எல்லையில் புதிதாக ஒரு மாஞ்செடி வளர்ந்திருந்த விவரத்தை கவனித்து விட்டார்கள். அதோடு அந்த அழகான மாஞ்செடி மேல் அவர்கள் இருவருக்கும் ஆசையும் ஏற்பட்டது.

அவ்வளவுதான்: விவகாரம் தொடங்கி விட்டது. தாம் கொடுத்த மாம்பழத்தின் கொட்டையிலிருந்து முளைத்த மாஞ்செடி தமக்குச் சொந்தமானது என்று வாதித்தார் அப்புசாமி. கந்தசாமியோ, மாம்பழத்தைக் கொடுத்து விட்டதோடு அப்புசாமியின் உரிமை தீர்ந்து விட்டது என்றும், அவரிடமிருந்து அந்த உரிமை தம் மகனுக்கு வந்து, அவன் மூலம் அவன் தகப்பனாரான தமக்கே உரிமை யானது என்றும் போராடினார். இந்தப் போராட்டம் பல கேந்திரங்களில் நிகழ்ந்தது- முதலில் கொல்லைப்புறத்தில் நின்று போராடினார்கள். அப்புறம் வாசல் திண்ணை களிலிருந்து நடத்தினார்கள். அதன்பின் போராட்டம் நடுச் சந்திக்கு வந்தது. கடைசியில் பஞ்சாயத்துக் கோர்ட்டுக்கு வந்தது.

உள்ளூர்ப் பஞ்சாயத்துத் தலைவருக்கு ஒரு விசேஷப் பாண்டித்தியம் உண்டு.' எதையும் புராண ரீதியாக அலசி ஆராய்வார். பஞ்ச பாண்டவர்களில் முதல்வரான தர்மராஜாவிடம் இப்படி ஒரு வழக்கு வந்தது என்றும் அவர் அதில் எவ்விதத் தீர்ப்பும் கூறவில்லை என்றும் தர்மராஜனே இம்மாதிரி வழக்கில் தீர்ப்புக் கொடுக்காத போது, நாம் அதைப் போன்ற இந்த வழக்கில் தீர்ப்பு கொடுக்கிறது அதிகப்பிரசங்கித்தன மானது என்றும் அபிப்பிராயப் பட்டார்.

''இந்த அக்கிரம வழக்கின் மூலம் நாமும் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன வென்றால் இன்னும் பூமியை விட்டுக் கலியுகம் மாறவில்லை என்பதுதான். ஆகவே மக்கள் எல்லாரும் கூடி, இந்தக் கலியுகத்தை மாற்றித் தரும்படி பகவானைப் பிரார்த்திப்போம்! இந்த வழக்கின் வாதி பிரதிவாதிகளான அப்புசாமியும் கந்தசாமியும் தங்கள் வழக்கைக் கலியுகம் மா அடுத்த யுகம் பிறந்த பின் புதுப்பித்துக் கொள்ள வேண்டியது!'' அப்புசாமி கந்தசாமி இருவருக்குமே இந்தத் தீர்ப்பின் ஆரம்பம் புரியவில்லை; முடிவும் பிடிக்கவில்லை! எனவே மாஞ்செடி வியாஜ்ஜியம் முன்சீப் கோர்ட்டுக்கு ஏறியது. அந்தக் கோர்ட்டார் ஐந்து வருஷங்கள் பன்னிவிட்டு முடிவில், 'மாம்பழம் கொடுத்த அப்புசாமிக்கே மாஞ்செடியும் சொந்தம்' என்று தீர்ப்பளித்தார்.

உடனே கந்தசாமி ஜில்லாக் கோர்ட்டுக்கு அப்பீல் செய்தார். அப்பீலில், 'அப்புசாமி கொடுத்த அழுகல் மாம்பழத்தைக் கொட்டை வரைக்கும் சகிப்புடன் தின்ற கந்தசாமியின் மகனின் வாய் வீரம், வீரப் பதக்கம் பெறத் தக்கதென்று பொறிக்க செய்யப்பட்டதுடன், அவன் மாங்கொட்டையை அவ்வளவு ஆத்திரத்துடன் வேகமாக வீசியெறிந்திருக்காவிட்டால் அது மண்ணுக்குள் புதைந்து முளைத்திருக்க முடியாது. எனவே மாஞ்செடி 'கந்த

சாமி அண்ட் சன்'ஸுக்கு உரிமையானது' என்று தீர்ப்பாகியது.

அப்புசாமி பொறுப்பாரா? அவர் உடனே இந்தத் தீர்ப்பை எதிர்த்து ஹைகோர்ட்டில் அப்பீல் போட்டார். ஹைகோர்ட்டில் வழக்கு மும்முரமாக நடந்தது.

வழக்கு ஹைகோர்ட்டில் நடந்து கொண்டிருக்கும்போது, கிராமத்தில் ஓர் ஆச்சரியமான சங்கதி நிகழ்ந்து விட்டது. அதாவது மாஞ்செடி மரமாகிக் காய் காய்க்க ஆரம்பித்து விட்டது. இதனால் நிலைமை ரொம்ப நெருக்கடியாகி விட்டது. ஹைகோர்ட்டில் அப்பீலில் யார் ஜெயிப்பார் என்று தெரியாமல் குழப்பமாக இருந்ததால் இரண்டு பேருக்குமே தாம்தான் தோற்றுப் போவோமோ



என்ற பயம் ஏற்பட்டு விட்டது. அத்துடன், தாம் தோற்றால், தம் கண் முன்னேயே அடுத்தவன் மாங்காய் பறிப்பானே என்ற பொறாமையும் ஏற்பட்டு விட்டது. இந்தப் பொறாமை இரண்டு பேருக்கும் ஒரு நாள் இரவில் ஏற்பட்டு விட்டது.

அப்புசாமிக்கு இரவு பத்து மணிக்கு அந்தப் பொறாமை ஏற்பட்டது. உடனே அவர் கொல்லைப்பக்கம் போய்த் தனக்கு உதவாத மரம் அவனுக்கு எப்படி உதவலாம், அதை அழித்து விடுவதே நியாயம் என்ற தர்ம சிந்தனையுடன் அரிவாளால் மரத்தில் பாதியை வெட்டினார். சுமார் ஒருமணி நேரம் வெட்டியதால் களைப்பு ஏற்படவே வெற்றிலை பாக்குப் போட்டுவிட்டு வரலாம் என்று வீட்டுக்குள் போனார். பதினொரு மணிக்கு மேற்படி பொறாமை கந்தசாமிக்கு வந்து உதித்தது. உடனே அவரும் அப்புசாமியைப் போலவே தம் பங்குக்குப் பாதி மரத்தை வெட்டினார். இரு பாதியாலும் விழுந்தது மரம்!

மரம் வீழ்ந்த காதை ஹைகோர்ட்டுக்கு எட்டியது. உடனே நீதிபதி 'மரத்தை யார் வெட்டியது சரியானது, யார் வெட்டியது அக்கிரமமானது என்று தெரியும் வரை மரம் யாருக்குச் சொந்தமானது என்று தீர்ப்பளிக்க முடியாது. உடனே கீழ்க் கோர்ட் அது விஷயமாகத் தீர்ப்பு நடத்தி அறிக்கை அனுப்ப வேண்டியது' என்று விஷயத்தைக் கீழே தள்ளினார். அந்தக் கீழ்க் கோர்ட் அதற்குக் கீழ்க் கோர்ட்டுக்குத் தள்ளியது. முடிவில் விஷயம் மூலஸ்தானத்துக்கே வந்து நின்றது. பின் விசாரணை முடிந்து அறிக்கை படிப்படியாக மேலே சென்றது.

முடிவில் ஹைகோர்ட் கீழ்க்கண்ட தீர்ப்பை வழங்கியது. "சம்பந்தப்பட்ட மரம் அப்புசாமி, கந்தசாமி இருவரில் யாருக்கும் சொந்தமானதல்ல. ஏனென்றால், அப்புசாமி கொடுத்து, கந்தசாமியின் மகன் வாங்கிய மாம்பழத்தின் கொட்டையிலிருந்து மேற்படி மாமரம் முளைக்கவில்லை! அந்த மாங்கொட்டைக்கும் இந்த மாமரத்துக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. கந்தசாமியின் மகன் கடித்து விட்டு எறிந்த மாங்கொட்டை முளைக்கவேயில்லை... அந்தப் பையனுடைய நீண்ட பற்களால் கடித்துக் குதறப்பட்ட பின் அம் மாங்கொட்டை முளைப்பது சாத்தியமேயில்லை என்று தாவர ஆராய்ச்சியாளர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். மேற்படி மாங்கொட்டை ஆழமான பல் காயத்துடன் இன்னும் அந்தக் கொல்லைப்புறத்தில் ஒதுங்கிப் புதைந்து கிடந்ததைப் புதை பொருள் ஆராய்ச்சியாளர்களும் துப்பறியும் நிபுணர்களும் கண்டு பிடித்துக் கோர்ட்டில் ஆஜர் செய்திருக்கிறார்கள். சாட்சியங்கள் மூலம் கந்தசாமியின் மகன் எறிந்த மாங்கொட்டை வேறு, பிரஸ்தாப மரம் வேறு என்று நிரூபிக்கப்பட்டு விட்டதால் வாதி, பிரதிவாதிகளுக்கு அந்த மரத்தின் பேரில் உரிமை இல்லை. அந்த மரமானது அப்புசாமி, கந்தசாமி ஆகிய இருவரின் வீட்டை ஒட்டியிருந்த மூன்றாம் வீட்டுக்காரர் ஒருவருக்குச் சொந்தமானது ஆகும். இந்த மர்மம் அந்த மூன்றாம் வீட்டுக்காரரின் வாக்குமூலம் மூலமாக வெளியாகியிருக்கிறது. தாம் வைத்த செடிக்கு அப்புசாமியும் கந்தசாமியும் உரிமை கொண்டாடிப் பேணிப் பாதுகாத்து வந்ததால் தமக்கு மரத்தை வளர்க்கும் பொறுப்பு சுலபமாகி விட்டது என்ற எண்ணத்துடன் இந்த மூன்றாவது நபர் மாஞ்செடியின் பிறப்பு வளர்ப்பு பற்றிய மர்மங்களை மூடி மறைத்து வந்திருக்கிறார். இப்பொழுது அவர் தம் மரத்துக்கு நஷ்ட ஈடு கேட்கிறார். அது சட்டப்படி செல்லத் தக்கதல்ல. தம் சொந்த மரம் என்றாலும், அதை வெகு காலமாக அப்புசாமி, கந்தசாமி ஆகியவரின் பராமரிப்பிலும் பொறுப்பிலும் நிபந்தனையின்றி விட்டு வைத்ததில் சட்டப்படி அந்த மரத்தின் மீதுள்ள உரிமை அவருக்குக் காலாவதியாகிவிட்டது. அந்த உரிமை அனுபவ பாத்தியதையால் அப்புசாமிக்கும் கந்தசாமிக்கும் வருகிறது. எனவே அவர்கள் இருவருமே சேர்ந்து மரத்தை வெட்டிவிட்டதில் பிரச்னை எதுவும் இல்லை. எனவே இந்த வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது!"

## உங்களுக்கும் ஒரு

# பிலிப்ஸ்

## ஸைக்கிள்

## அவசியம்

மளமளவென கண்ணைப் பறிக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள் உங்களைப் போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காகவே பிரத்தியேகமாய்த் தயாரிக்கப்பட்டது. உயர்ந்த ரக எஃகினாலான இந்த ஸைக்கிள், உறுதியும், எவ்விதமான கரடு முரடான பணியினைச் சமாளிக்கவல்ல சக்தியும் வாய்ந்தது. 70 வருட காலமாய் உலகெங்கும் புகழ் பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள், டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் மிக்க நவீன இயந்திர வசதி கொண்ட தொழிற்சாலையில், உங்களுக்காக தயாரிக்கப்படுகிறது.




# PHILLIPS

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

HWT, PH/2053a





# ஹாக்கி வீரர்கள்

ஆம்ஸ்டர்டாமில் நடக்கும் ஒலிம்பிக் ஹாக்கிப் போட்டியில் கலந்துகொள்ளும் வழியில் லண்டனுக்கு வந்திருந்தார்கள் ஹாக்கி ஆட்டத்தில் மந்திரவாதி என்று புகழ்பெற்ற தயான்சந்தும், இந்திய ஹாக்கி வீரர்களும். ஆல்டர்ஷாட் என்னுமிடத்தில் இந்திய ஹாக்கி ஆட்டக்காரர்களுக்கும் ஆங்கில வீரர்களுக்கும் ஒரு பந்தயம் இருந்தது. இந்தப் பந்தயத்தில் கலந்து கொள்வதற்காக இந்திய ஆட்டக்காரர்கள் கிளம்பிய போது தங்கள் விளையாட்டு மூட்டைகளை அங்கிருந்த பணியாளரிடம் தூக்கி வரும்படி கேட்டுக் கொண்டார்கள். அந்தப் பணியாளர் இவர்களது வேண்டுகோளைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. உரக்கக் கத்திப் பார்த்தார்கள்; ஒன்றும் பயனில்லை. இந்தச் சமயத்தில் எதிரே ஆங்கில கோஷ்டியினர் தத்தம் விளையாட்டு மூட்டைகளோடு மைதானத்துக்குச் செல்வது தெரிந்தது. இங்கிலாந்தில் சாதாரண மனிதனா யிருந்தாலும் அல்லது பிரபுவாக இருந்தாலும் விளையாட்டு மைதானத்துக்குத் தத்தம் பொருள்களைத் தாமே எடுத்துச் செல்லும் அதிசயத்தைக் கண்டனர் இந்திய ஆட்டக்காரர்கள்.

இந்திய நாட்டுக்கு ஹாக்கி விளையாட்டும், விளையாட்டுப் பண்பும் கற்றுக் கொடுத்த இங்கிலாந்து நாட்டிலிருந்து ஹாக்கி விளையாட்டுக்காரர்கள் டிசம்பர் 28ந் தேதி இந்தியாவுக்கு வருகிறார்கள். இவர்கள் இந்திய நாட்டில் ஏழு டெஸ்ட் பந்தயங்கள் ஆடவிருக்கிறார்கள். முதல் டெஸ்ட் பம்பாயிலும், இரண்டாவது டெஸ்ட் குவாலியரிலும் நடைபெறுகின்றன. கடைசி டெஸ்ட் நம் சென்னை நகர சபையின் எழும்பூர் மைதானத்தில் ஜனவரி 9ந் தேதி நடைபெறவிருக்கிறது.

இங்கிலாந்து கோஷ்டிக்கு டேவிஸ் கேப்டனாக வருகிறார். இங்கிலாந்து கோஷ்டிக்காக ஒலிம்பிக் பந்தயங்களில் இவர் கலந்து கொண்டு ஆடியிருக்கிறார்.

பிரிட்டனில் ஐந்து நூற்றாண்டுகளாக ஹாக்கி விளையாடி வருகிறார்கள். 1886ம் வருஷம் ஹாக்கி சங்கம் ஏற்பட்டதிலிருந்து இந்த ஆட்டத்துக்கு மவுசு பெருகி, 35,000 ஆட்டக்காரர்களும், 50,000 மாணவர்களும் ஹாக்கி விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது அதிசயிக்கத் தக்க செய்தி. பிரிட்டனில் பெண்கள் ஆடும் ஹாக்கி ரொம்பப் பிரசித்தி. 1960 வெம்ளி ஸ்டேடியத்தில் ஜெர்மனிக்கும், பிரிட்டனுக்கும் நடைபெற்ற பெண்கள் ஹாக்கிப் போட்டியில் இங்கிலாந்து கோஷ்டி வெற்றி பெற்றதைக் காண 54,000 பேர்கள் வந்திருந்தார்களாம். பெண்கள் ஹாக்கிப் பந்தயத்தில் 'கோல்' எதிர்த்த கட்சியில் விழுந்து விட்டால் இவர்கள் ஆடிப் பாடிக் களிப்பதில்லை. இது ஒரு நல்ல பண்பாடு!

முதல் பம்பாய் டெஸ்டில் இந்திய காப்டனாகத் திகழும் லக்ஷ்மண் 1956, 1960 ஒலிம்பிக் ஆட்டங்களில் கோல்கீப்பராக இருந்து ஆடியவர். இவர்தான் ஆட்டத்தின் வெற்றி தோல்விக்கே மூல காரணமானவர். இவர் நன்றாகப் பந்தைத் தேக்கத் தொடங்கி விட்டால் ஆட்டம் களை கட்டி விடும். இதை அறிந்தே இவருக்குக் காப்டன் பதவியை முதல் டெஸ்டிலேயே கொடுத்திருக்கிறார்கள் போலும்!

1928லிருந்து 1960 வரை உலக ஹாக்கி மன்னர்களாகத் திகழ்ந்த இந்திய கோஷ்டியினர் ரோமில் பாகிஸ்தானிடம் தோல்வியடைந்து விட்டனர். இங்கிலாந்து ஹாக்கி ஆட்டக்காரர்கள் உலக ஹாக்கி வரிசையில் நான்காவது ஸ்தானத்தை வகிக்கின்றனர். இவர்களிடமும் இந்திய ஹாக்கி வீரர்கள் கோட்டை விடாமல் நல்லபடியாக ஆடி நற்பெயர் எடுக்க வேண்டும்.

— குண்டுமணி

# நகைச்சுவை மலர்

''சிரிப்பே சிந்தனைக்கு வித்து'', ''சிரித்து வாழ்; சிரிக்க வாழாதே!'', ''சிரித்த முகமே வாழ்க்கையின் இன்பம்'', ''வாய் விட்டுச் சிரித்தால் நுயர் விட்டுப் போகும்'' என்ற முதுமொழிகளை உணர்ந்து சிரிப்பின் சிறப்பைத் தெரிந்து, சிரிப்பின் அவசியத்தை அறிந்து, கல்கி இதனை ''நகைச் சுவை'' மலராக வெளியிட்டமைக்கு நன்றி.

ஜபல்பூர்
15-12-63 ஆர்.டி. சுப்பிரமணியன்.

கல்கி நகைச்சுவை மலர் மிகவும் சுவையாக அமைந்திருக்கிறது. பேராசிரியர் கல்கி அவர்களின் வானொலிப் பேச்சு மலருக்கே அணிசெய்து கௌரவிக்கிறது. சுகி, நாடோடி, கொத்தமங்கலம் சுப்பு, சுந்தா ஆகியோரின் எழுத்தோவியங்களும், 'சாமா'வின் சித்திரங்களும் நல்ல நகைச்சுவை விருந்து. பல்வேறு மொழிகளிலிருந்தும் சுவையான நகைச்சுவைப் பகுதிகளைத் திரு ரா. வி. அவர்கள் திரட்டித் தந்திருப்பது நன்கு அனுபவிக்கக் கூடியதாக இருக்கிறது. அமரர்களாயிருக்கும் மேதைகளின் எழுத்துக்கள் நகைச்சுவைக் கதம்பத்தில் படிக்கும்போது எவ்வளவு பெரு மேதைகளை நாம் இழந்திருக்கிறோம் என்ற ஏக்கம்தான் நெஞ்சில் நிறைகிறது. திரு செல்லம் அவர்களின் 'சங்கீதக் கச்சேரியில்' கார்ட்டூன் மணிக் கணக்காக உட்கார்ந்து அணு அணுவாகச் சுவைத்து மகிழக் கூடியது. இத்தனையையும் திரட்டித் தந்திருக்கும் தங்களுக்குத் தமிழ்கூறும் நல்லுலகம் பெரும் நன்றிக் கடன் பட்டிருக்கிறது.

சென்னை-34
14-12-63 ஆர். பாஸ்கரன்

நகைச்சுவை மலர் குழந்தைகள் எதிர்பார்த்தபடி அமையவில்லை. இரண்டு மூன்று வாரங்களாக நகைச்சுவை மலரைப் பற்றிப் போட்டு வந்த சித்திரங்களை நினைத்துப் பார்த்து, அம்மாதிரி வேடிக்கைச் சித்திரங்கள் நிறைந்திருக்கும் என்று எதிர்பார்த்து ஏமாந்து விட்டார்கள். சினிமா நகைச்சுவை நட்சத்திரங்களின் புகைப்படங்கள் நகைச்சுவையைத் தரவில்லை. பல சிறு பரிசுகள் வைத்துச் சிரிப்புத் துணுக்குகள், சிறுகதை, படங்கள் இவைகளைக் கல்கி வாசகர்களிடமிருந்து பெற்று வெளியிட்டிருந்தால் அது ஒரு புது முயற்சியாக அமைந்திருக்கும். இப்படிச் சில மாறுதல்களுடன் இன்னொரு நகைச்சுவை மலரை வெளியிட்டு எங்களை மகிழ்விக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

செகந்திராபாத்
18-12-63 ராஜன்

நகைச்சுவை மலரில் பிரசுரமாகி யிருந்த ''இந்திய மொழிகளின் நகைச்சுவை'' நன்கு அமைந்திருந்தது. ''நகைச் சுவை வரலாறு'' என்ற கட்டுரையில் காளிதாசரது புகழ் ஷேக்ஸ்பியரைப் பின்பற்றுவதால் ஏற்பட்டது என்பது போலத் தொனிக்கிறது. இக் குறையைத் தவிர்த்துக் காளிதாஸனுக்குப் பெருமை சேர்த்திருக்கலாம்.

நாக்பூர்
14-12-63 நடராஜன்

வாரா வாரக் கல்கி பலவிதப் புது மாற்றங்களைச் செய்துகொண்டு ரொம்ப முன்னேறி வருகிறது. அப்போதைக்கப்போது புதுப் புதுப் பாணிகளைப் புகுத்தி வாசகர்களை மகிழ வைக்கும் கல்கி வாழ்க! நகைச்சுவை மலர் உண்மையில் ஒரு சிரிப்புக் கொத்து மலர்.

சென்னை-28
13-12-63 பி. ஆர். ராஜாராம்

'கல்கி' நகைச்சுவை மலரின் தரத்தைப் பார்க்க மகிழ்ச்சி அடைகிறோம். கவிஞர் கொத்தமங்கலம் சுப்புவின் ''சிரிக்கப் பேசலாச்சு'' என்ற பாடல் எளிமையாகவும், கருத்துடனும் ஹாஸ்யம் ததும்ப அமைந்துள்ளது.

பெங்களூர்
16-12-63 சீனிவாசன் சகோதரர்கள்

இதுகாறும் பற்பல மலர்களில் சேகரிக்கப்பட்ட கதை, கவிதை, கட்டுரைத் தேனை வழங்கிய ''கல்கி'' கடந்த சில வாரங்களாக ஓரே மலர்த் தேனை ஒவ்வொரு கோப்பைகளில் தந்து வருதல் கண்டு மிகவும் சுவைக்கின்றோம்.

இவ்வாரா நகைச் சுவை மலர் அதன் வரிசையிலே ஓர் அணியாகும். பக்கத்துக்குப் பக்கம் சிரிப்போடு சிந்தனையையும் கலந்து உள்ளத்திற்கு ஓர் இனிமை தந்தது. இதுபோன்ற மலர்கள் அடிக்கடி வர ஆவலுறுகிறேன்.

முத்துப்பேட்டை
14-12-63 க. மு. நெய்னா முகம்மது

நகைச்சுவைக்கு ஒரு மலர் வெளியிட்ட 'கல்கி'க்கு மனமார்ந்த நன்றி. 'கதிர்' எழுதியுள்ள 'சினிமாப் பார்ப்போர் சங்கடம்' என்னும் கட்டுரை இன்னமும் நகைச்சுவைக்கு வாரிசு உண்டு என்பதை நினைவு தருகிறது.

துறையூர்
12-12-63 வா. கோ. பா.

சர்க்கரையிட்ட சர்பத்தில் சிறிது உப்பும் இட்டால் அதன் சுவை கூடுதல் போன்று நகைச்சுவை பரவிக் கிடந்த நறுமலரில் வெளியான 'மாலி'யின் வாழ்க்கை பற்றிய கட்டுரை மலரின் சுவையை மிகைப்படுத்தியது. தலைசிறந்த நகைச்சுவை மலரில் இன்பமளிக்கும் இனிய கதைகளையும், ஓவியங்களையும் வழங்கி வரும் விற்பன்னர்களையும் பட

மாக வெளியிட்டது பற்றி நன்றி. மலரில் நகைச் சுவையில் சிறந்த பெண்மகளிரின் ஓவியங்களோ, காவியங்களோ வெளிவராத தின் காரணம்தான் தெரியவில்லை!

புதுதில்லி,
16–12–63 நா. ராஜாமணி

ஃ ஃ ஃ

## இன்னொரு சகுந்தலை வெண்பா

தங்கள் 24–11–63 இதழில் 'படித்துப் பாருங்கள்' பகுதியில் பிரசுரமாகியுள்ள திரு தொ. மு. பாஸ்கரன் அவர்களின் 'இளவேனில் வந்தது எதிர்' என்ற விமரிசனம் பார்த்தேன்.

அறிஞர் திரு க. நடேச பிள்ளை யாத்துத் தற்போது வெளிவந்துள்ள சகுந்தலை வெண்பாவிறுக்கு முன்னம் 'சகுந்தலை வெண்பா' என்று வேறொரு நூல் தமிழகத்தில் எழுதப் பட்டிருக்கிறது. 'இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை திரு சோமசுந்தர தேசிகர் அவர்கள் தேடி வைத்துச் சென்ற 313 வெண்பாக்களைக் கொண்ட இந்தச் 'சகுந்தலை வெண்பா'வை 1958ம் ஆண்டிலே அச்சுவாகனத்திலேஏற்றி வெளியிட்டிருக்கிறார்கள். துள்ளும் வரால் தோற்கும் நடையும், நல்ல தமிழ் நெஞ்சை வெல்லும் சுவையும் கலந்து படைக்கப்பட்ட நூல் அது.

'சாகுந்தலம்' ஒரு வைரச் சுரங்கம். இன்று அச்சுரங்கத்திலிருந்து ஓர் அற்புத மாலையை உருவாக்கித் திரு க. நடேச பிள்ளை தமிழுக்குத் தந்திருக்கிறார் என்று நாம் பாராட்டும்பொழுது நேற்றே அந்தக் தமிழ்த் தொண்டை நிகழ்த்தியவரை மறக்கக் கூடாதல்லவா?

சென்னை-30
26–11–63 ஆரெண்ணஸ்

[மேற்படி சகுந்தலை வெண்பாவை வெளியிட்டவர்கள்: எஸ். எஸ். தேசிகர் அண்டு சன்ஸ், 2, பன்னிரண்டாவது கிராஸ் தெரு, சென்னை-28; விலை: ரூ. 1]

## மறக்க முடியாது!

கல்கி 24–11–63 இதழில், ''சென்னை தொழில் நுணுக்கக் கல்லூரி'' என்ற தலைப்பில், ''எம். ஐ. டி.''யைப் பற்றிய கட்டுரையில் – ''திரு கே. சீனிவாசன் நீண்ட நாட்கள் பங்களூரில் உள்ள ''இன்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் சயன்''ஸில் ஆசிரியராகப் பணியாற்றி அநுபவம் பெற்றவர்'' எனக் குறிப்பிட்டுள்ளீர்கள்.

அவர்கள் அங்கே – ஆசிரியராக அல்ல– பேராசிரியராகவும் 'எலக்டிரிகல் கம்யூனிகேஷன் எஞ்சினியரிங்' பிரிவுக்கே தலைவராகவும் இருந்தார். மேலும் அவர் 'இன்ஸ்டிட்யூட்டி'லேயே வயதிலும், சேவையிலும் முதிர்ந்தவர்களாகவும் தகுதியில் சிறந்தவராகவும் விளங்கினர். பல முறை இன்ஸ்டிட்யூட்டின் டைரக்டர் ஆகவும் பணியாற்றியுள்ளார். இந்தப் பதவியிலேயே அவர் தொடர்ந்து நீடிக்கவும் சந்தர்ப்பம் இருந்தது.

அவர் விரிந்த அறிவும், பரந்த அநுபவமும் ஆற்றலும் உடையவர். சென்னையில் தொலை தூர மின் போக்குவரத்து இயலுக்கே அடித்தளமிட்டது அவர்தான். பலமுறை வெளி நாடுகளுக்கும் சென்று வந்துள்ளார். பிரஞ்சு உள்பட பல மொழிகளில் தேர்ந்தவர். இந்தியாவில் 'எலெக்டிரானிக்'ஸின் வளர்ச்சியில் அவருக்கு ஒரு பெரும் பங்கு உரித்தாகும். நம் நாட்டில் மட்டுமல்ல, வெளிதேசங்களிலும் அவர் பிராபல்யம் உள்ளவர்.

அவர் தமக்கென உயரிய கொள்கைகளை வகுத்துக் கொண்டவர். எளிய வாழ்க்கையையே மேற்கொண்டுள்ளவர். விளம்பரத்தையும், புகழ்ச்சியையும் அறவே வெறுப்பவர். மிகக் கண்டிப்புப் பொருந்தியவர். எனினும் அந்தக் கண்டிப்புக்கும், கட்டுப்பாட்டுக்கும் பின்னால் மறைந்து கிடக்கும் மனிதத் தன்மையையும், தயாள நோக்கையும், இரக்க சிந்தனையையும் எந்தச் சந்தர்ப்பத்திலும் எவரும் எளிதில் கண்டுகொண்டு விடலாம். அவர்களின் கருணைக்குப் பாத்திரமானவர்கள் என்றுமே அவரை மறந்துவிட முடியாது.

காரைக்குடி
26–11–63 கே. வேங்கடசுப்பிரமணியம்


மாதர்களுக்கு
குழந்தைகளுக்கு மருந்துகள்
குடும்ப அவசியங்கள்
குடும்ப தின-உதவிகள்

ஆயுர்வேத வித்வான் B. V. பண்டிட் அவர்களின்
சிறந்த ஆயுர்வேத மருந்துகள்

| | |
|---|---|
| ஜீவனி (பலவிருத்தி டானிக்) ... ரூ. | 2.50 |
| சூதுஜன் (கர்ப்பிணிகள் டானிக்) ... | 2.50 |
| டோனடேன் (பிரசவத்திற்குப் பிறகு லேகியம்) | 5.00 |
| காஸ்மன் (கஸ்தூரி மாத்திரை) பாட்டில் | 0.40 |
| கர்ஜன் (கோரோசனை மாத்திரை) பாட்டில் | 0.50 |
| பாலக்ஸ் (பேதியாக மாத்திரை) பாட்டில் | 0.40 |
| ஜ்வரேக் (ஜ்வரங்களில் உதவ) பாட்டில் | 1.00 |
| காலரேக்ஸ் (பேதிகளை நிறுத்த) பாட்டில் | 1.00 |
| நஞ்சன்கூடு-பல்பொடி (மெடிகேடட்) டப்பி | 0.56 |
| நீலா ரேசர் ஆயில் (இளநரை தடுத்து கூந்தல் செழிக்க) | 3.75 |
| ஜிஞ்பெப் (அஜீர்ண பித்த சமனி) | 0.40, 2.00 |

(சத்வைத்யசாலை - நஞ்சன்கூடு) சோல் ஏஜண்டு: யுனைடெட் கன்ஸர்ஸன், 8 பந்தர் தெரு, சென்னை-1




"குழந்தைகளென்றால் அவற்றைக் கவனித்துக்கொள்ள வேண்டாமா?" — கூட்டத்தில் ஒரு குரல் கேட்டது.

"இந்தக் கூட்டத்தில் போகிறோமே, குழந்தைகளை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று தோன்றவில்லையே, என்ன மானங்கெட்ட ஜன்மம்!" — உருளைக் கிழங்கு வடையை மூறித்து வாயில் போட்டுக்கொண்டிருக்க நடுத்தர வயதுள்ள ஓர் அம்மாள் பேசிய பேச்சு இது.

"என்னவோ அப்பா! பெண்கள் அழுதால் பார்க்கச் சகிப்பதில்லை எனக்கு!" — நகரம் சுற்றும் நாகரிக இளைஞன் ஒருவனின் வாயிலிருந்து வெளிவந்த அநுதாபச் சொல் இது.

"அவள் யாரோ, நீ யாரோ? உனக்கு எங்கிருந்து அப்பா வந்தது இத்தனை அநுதாபம்!" சூழ்நிலையின் தன்மை அறியாத ஒரு 'புறம்போக்கு' எழுப்பிய கேலிக் குரல் இது.

"என்னவோ, போ! காதல் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவர்களுக்கும் குழந்தைகளுக்கும் வெகு தூரம்! ஊருக்காகக் கொஞ்சம் அழுவார்கள். அப்புறம் எல்லாம் சரியாகிவிடும்!" — தமது நீண்ட மீசையை ஒதுக்கி விட்டவண்ணம் அவல் பொரியை வாயில் போட்டுக் கொண்டு சொன்னார் வயசான ஒருவர்.

உருளைக் கிழங்கு வடைக்கும் அவல் பொரிக்கும் பெயர் போன கடை அது. அதன் எதிரே கூடியிருந்த கூட்டத்தை விலக்கிக் கொண்டு காசை நீட்டியவன், இந்தப் பேச்சையும் காது கொடுத்துக் கேட்டேன்.

கடக்கட வடையும் பொரியும் கைக்கு வந்தபின், பக்கத்தில் நின்றவரிடம், "என்ன சமாசாரம்? என்ன நடந்தது?" என்று கேட்டேன்.




"இப்பொழு தெல்லாம்தான் குழந்தைகளைப் பிடித்துப் போகும் நோய் நாட்டில் பரவிக்கிடக்கிறதே! அதுவும் பம்பாயைப்போன்ற பட்டணத்தில் கேட்க வேண்டுமா? இதெல்லாம் தினம் நடக்கிற காரியம் தானே?" எனக்குப் பதில் சொல்லாமல் கூட்டத்தைப் பார்த்துப் பதில் சொன்னார் அவர்.

வடை தின்று தீர்வதற்குள்ளேயே எனக்கு ஒருவாறு விஷயம் விளங்கி விட்டது. விட்டத் தட்ட ஆறு மணிக்குக் கோகலே ரோட்டில் கணவனும் மனைவியும் குழந்தையோடு ஏதோ பொருள்கள் வாங்குவதற்காக வந்தார்களாம். பொருள்கள் வாங்குவதில் ஈடுபட்டிருந்தபோது அவர்களது குழந்தை காணாமற்போய்விட்டதாம். சிலர் யாரோ தூக்கிக்கொண்டு போய் விட்டதாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சிலர் அதுவாக எங்கோ காணாமற் போய்விட்டது என்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

எனக்கு அது ஒரு புது விஷயமாகப் படவில்லை. பம்பாயில் இப்படித் திருட்டு, புரட்டு, வழிப்பறி, கொள்ளை முதலியன தினம் நடைபெறவே செய்கின்றன. கேட்கும் போது உற்சாகமாக இருக்கிறது. அப்புறம் சிறிது நேரம் போனால் அந்த உற்சாகம் அடங்கிப் போய் விடுகிறது. எனக்கும் இதே பழக்கம்தான்!

ஆயினும் மறுநாள் சப் — இன்ஸ்பெக்டர் வாணி அவர்களைச் சந்திக்க நேர்ந்தபொழுது இது பற்றிக் கேட்டேன். அவருக்கு இது விஷயமாக ஒன்றுமே தெரியவில்லை.

தினப் பத்திரிகைகளில் கூட இது பற்றிய செய்தி வெளியாகவில்லை.

மூன்றும் நாள் - அதாவது சனிக்கிழமை இரவு பதினொன்றரை மணிக்குத்தான் வாணி வீடு திரும்பினார். வீடு வந்ததும் எனக்குக் குரல் கொடுத்தார்.

நான் அந்த நிகழ்ச்சியைப் பற்றி வாணியிடம் கேட்க வேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். நான் பேச்செடுத்ததுமே, "இன்றைய அவசரத்துக்கே அந்த நிகழ்ச்சிதான் காரணம்" என்றார் வாணி. "இரண்டு நாட்களுக்கு முன் நீங்கள் கேட்டபொழுது நான் சாக்குப் போக்குச் சொல்லி விட்டேன். எங்கள் இலாகாவில் எங்களுக்கு அது விஷயமாகக் கடுமையான தடை உத்தரவு விதித்திருக்கிறார்கள். கடந்த இரண்டு நாட்களாக நாங்கள் அந்தக் குழந்தையைத்தான் தேடிக் கொண்டிருந்தோம்.

அந்த நிகழ்ச்சியைப் பற்றிப் பேசக்கூடாது. பத்திரிகைகளிலும் குறிப்பு வெளியிடக் கூடாது என்றும் உத்தரவு பிறப்பித்திருந்தனர். உண்மை என்னவெனில்...." வாணி நடந்தது முழுவதையும் கூறினார்:

எபோர்டான் ஆஸ்பத்திரியை ஒட்டிய பங்களாவில் ஒரு சிந்தித் தம்பதிகள் வசித்து வந்தார்கள். அவர்கள் காதல் கல்யாணம் செய்து கொண்டவர்கள். ஜான் ஒரு கதாசிரியன். ஷீலா குந்தனுவி ஜானின் கதைகளைப்

படித்து அவளிடம் மனத்தைப் பறிகொடுத்தான். கடிதங்கள் மூலம் அவர்களது காதல் வளர்ந்து கல்யாணமாக முடிந்தது.

கல்யாணத்துக்குப் பிறகு அழகிய குழந்தை ஒன்று அவர்களுக்குப் பிறந்து வீட்டை அலங்கரித்தது.

லையாலில் உள்ள அந்தப் பங்களாவில் அவர்கள் குடும்பம் ஆனந்தமாக நடந்துவந்தது. ஜூல் கதைகள் எழுதுவான். ஷீலா படித்துப் புகழுவாள். பப்பு அவர்கள் இருவருக்குமிடையே அன்பை வளர்க்கும்பணியை மேற்கொண்டிருந்தாள். அவளைச் சீராட்டிப்பாராட்டுவதில் இருவருக்கும் இடையே போட்டி நிகழும். அவளுக்கு வயது ஒன்றரை ஆகியது. அவளது சிறு பிள்ளை விளையாட்டைப் பார்த்து ரசிக்கவே அவர்களுக்குப் பொழுது பற்றவில்லை.



ஜூலின் தந்தை ராம்பேலானி பாகிஸ்தானில் இருந்தார். அவர் அரசாங்கத்தின் சார்பில் போதனை முறைப் பயிற்சி பெற அமெரிக்காவுக்குப் போவதாயிருந்தார். தாத்தாவுக்குப் பேத்தியைப் பார்க்க வேண்டும் என்று ஆசை. அதனால் ஜூலும் ஷீலாவும் பப்புவை எடுத்துக் கொண்டு சனிக்கிழமை மாலை விமானத்தில் கராச்சிக்குப் போவதாக இருந்தார்கள். அதற்காக இரண்டரை டிக்கட்டுகள் அவர்கள் 'ரிசர்வ்' கூடச் செய்திருந்தார்கள்.

ஜூலின் தந்தைக்கு பம்பாயிலிருந்து சில பொருள்கள் தேவைப்பட்டன. அதோடு ஷீலாவும் சில பொருள்கள் வாங்க விரும்பினாள். எனவே, புதன் கிழமை நாலுமணிக்கே அவர்கள் கடை கண்ணிக்குப் புறப்படுவதாக இருந்தார்கள். ஆனால் பக்கத்து வீட்டுக் கோப் கமலானி பேசப் பிடித்துக் கொண்டு விட்டார். அவரிடமிருந்து விடுதலை பெற்றுப் புறப்படும் பொழுது மணி ஐந்தரை அடித்து விட்டது.

தாதரில் அவர்கள் சில்லறைச் சாமான்கள் வாங்கினார்கள். சிறிது நேரம் பப்புவை ஷீலா எடுத்துக் கொள்வாள். சிறிது நேரம் ஜூல் எடுத்துக் கொள்வான். இடையிடையே அவள் நடந்து வருவேன் என்று பிடிவாதம் பிடிப்பாள். நடை பாதையில் அவளை இறக்கி நடக்க விடுவார்கள். அவளது தளர் நடையைக் கண்ணுற்றுத் தம்பதிகள் களிப்போடு பேருவகை கொண்டனர்.

ஐடியல் ஸ்டோரில் ஷீலா ஸ்நோ, கிரீம், பவுடர் முதலியன வாங்க நுழைந்தான்.

படியேறும்வரை இருவரும் குழந்தைக்குப் பின்னலேயே சென்றனர். ஆனால் கடைக்குள் நுழையும்பொழுது ஜூல் அவளைத் தூக்கிக் கொண்டான். பப்பு முரண்டு பிடித்தாள், கீழே இறக்கி விட வேண்டுமென்று! சிறுமி பெரிய துரைசானியாட்டம் நடைபாதையில் நடை பயில ஆசைப்பட்டாள். கடைக்குப் போகக் கட்டோடு அவளுக்குப் பிடிக்கவில்லை.




குழந்தைப் பிடிவாதம் எல்லை மீறியது. ''விளையாடட்டும் அவள். இறக்கி விடுங்கள். நீங்கள் பார்த்துக் கொண்டிருங்கள். அதற்குள் நான் எல்லாம் வாங்கிக்கொண்டு வந்து விடுகிறேன்!'' என்றாள் ஷீலா.

ஷீலா கடைக்குள் நுழைந்தாள். பப்பு ஓடி விளையாடலானாள். படி ஏறுவாள், இறங்குவாள். இறங்கிய சந்தோஷத்தில் கலகலவென நகைப்பாள். விளையாட்டில் அவளுக்குத் தலைகால் புரியவில்லை. ஜான் அவளுடைய விளையாட்டை ஆசையோடு பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

லிப்ஸ்டிக்கும் மணிபர்ஸும் தேர்ந்தெடுக்க ஷீலா ஜானின் உதவியை நாடினாள்.

ஒருசில விநாடிகள்தானே என்று ஜான் கடைக்குள் நுழைந்தான். கவுண்டரில் பொருள்கள் வாங்கச் சிறிது நேரம் பிடித்தது.

பப்பு படியில் ஏறி இறங்கிக்கொண்டிருந்தாள். அப்பொழுது பப்புவின் காலடிகளில் பலவித வர்ணங்கள் கொண்ட பிளாஸ்டிக் பந்து உருண்டு வந்தது. பப்பு அதை எடுக்கக் குனிந்தபோது ஒரு சிவந்த கை அதை எடுத்துக் கொண்டு விட்டது. ஆம், அப்பொழுதுதான் காரிலிருந்து இறங்கிய ஒரு யுவதி அதைக் குனிந்து எடுத்துக் கொண்டாள்.

குதிரை வால் கொண்டை, நைலான் புடவை, பின்புறம் திறந்த பிளௌவுஸ், இளம் பெண் பப்புவையே பார்த்துக் கொண்டு நின்றாள். பப்பு தனது ஓரக் கண்களால் பந்தை எடுத்தவளைப் பார்த்தாள். அவளுக்கு அந்தப் பந்து வேண்டும் என்பதை அவள் பார்வை உணர்த்தியது.

இளம் பெண் பந்தை அவள் கையில் கொடுத்தாள். அவளை இடுப்பில் தூக்கிக் கொண்டாள். இனிமையாகக் 'கண்ணு!' என்று கொஞ்சிக் காரில் அமர்ந்துகொண்டாள். அவளோடு வந்தவன் காரை 'ஸ்டார்ட்' செய்தான்.

போகிறவர்கள், வருகிறவர்கள் அந்தப் பெண்ணை அதிசயமாகப் பார்த்தார்கள். 'குழந்தைகளை விளையாட விடுவதற்கு இதுவா இடம்?' என்று கேட்பது போலிருந்தது அவர்கள் பார்த்த பார்வை.

ஷீலா பொருள்கள் வாங்கும் படலத்தை முடித்துக் கொண்டு வெளியே வந்தாள். தனது ராணி என்ன செய்கிறாள் என்று பார்க்கும் ஆசையுடன் நடை பாதையில் இறங்கினாள். ஆனால் பப்புவை நடை பாதையில் காணவில்லை.

வண்டிப் போக்குவரத்து, ஆட்கள் நடமாட்டம் ஆகியவை காரணமாகக் கண்ணில் படவில்லையோ? — இருவரும் பார்வையை முடிந்த மட்டும் ஓட்டினர். வருவோர் போவோரின் கவனமும் அவர்களிடம் திரும்பியது. ஆனால் பப்புவைத் தான் காணவில்லை.

ஜானும் ஷீலாவும் பதற்றமடைந்த பார்வையுடன் இங்கும் அங்கும் பார்க்கலாயினர்.

ஷீலாவின் பொறுமை எல்லை மீறியது. அவள் போவோர் வருவோரிடம் கேட்கத் தொடங்கி விட்டாள். ''என் குழந்தை இப்பொழுதுதான் இந்தப் படிகளில் விளையாடிக் கொண்டிருந்தது. யாராவது பார்த்தீர்களா?'' என்று!

யாராலும் உறுதியாகக் கூற முடியவில்லை. ஆனால் எதிரே உள்ள நடைபாதையில் உட்கார்ந்திருந்த செருப்புத் தொழிலாளிக்கு ஒரு சந்தேகம் உதித்தது. 'சிறிது நேரத்துக்கு முன்பு ஒரு பெண் குழந்தையொன்றைக் காரில் தூக்கி வைத்துக் கொண்டு போனாளே, ஒருவேளை, அது இவர்கள் குழந்தையாக இருக்குமோ?' என்று எண்ணினான்.

கடைக்கெதிரில் ஒரு கம்பத்துக்கு அருகில் நின்று இலந்தைப் பழம் விற்றுக் கொண்டிருந்த கிழவி ஒருத்தி. ''குழந்தை இங்குதான் இருந்தது. ஆனால் ஒரு பெண்ணுடன் அது மோட்டாரில் ஏறிப் போய்விட்டதே!'' என்றாள்.

கிழவி சொல்லும் குழந்தை தன்னுடையதாக இராது என்று தீர்மானித்தாள் ஷீலா. இருந்தாலும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டிக் குழந்தைக்குப் போட்டிருந்த துணி மணிகளைப் பற்றியெல்லாம் துருவித் துருவிக் கேட்டாள். ''அதே குழந்தைதான். அதுதான் தாயாரோடு காரில் ஏறிக் கொண்டு போய்விட்டது'' என்றாள் கிழவி.

''இல்லை, இல்லை! அதன் அம்மா நான் அல்லவா?'' — ஷீலாவுக்குக் கண்களில் நீர் பொங்கி வந்தது.

செருப்புத் தொழிலாளியும், தான் பார்த்ததைப் பார்த்தபடியே சொன்னான். குழந்தையை யாரோ தூக்கிக்கொண்டு போய் விட்டார்கள் என்பது உறுதியாகி விட்டது.

போலீஸில் கேஸைப் பதிய வைப்பதைத் தவிர வேறு வழி புலப்படவில்லை அவர்களுக்கு.

ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லிக் கொண்டு தம்பதியர் இருவரும் எங்கள் காவல் நிலையத்தில் பதிய வைக்க வந்தனர். எங்கள் துறை செயல்படத் தொடங்கியது. 'வயர்லெஸ்' மூலம் எல்லாக் காவல் நிலையங்களுக்கும் நடமாடும் போலீஸ் ஜீப்புகளுக்கும் செய்தி பறந்தது. போலீஸ் இலாகா முழுவதுமே குழந்தையைத் தேடுவதில் முனைந்தது. ஆனால் இரண்டு நாட்களும் எங்கள் கைக்கு ஒரு துரும்புகூட அகப்படவில்லை.

ஜானும் ஷீலாவும் தங்கள் பங்களா வாசலுக்கு வந்தார்கள். பப்புவின் ஊஞ்சலையும் குதிரையையும் பார்த்தபொழுது அவர்களுக்கு அழுகை வந்து விட்டது. ஷீலாவோ விசித்து விசித்து அழவே தொடங்கிவிட்டாள். ஜான் தன் துயரத்தை மறைத்துக் கொண்டு அவளை மெதுவாகப் பங்களாவுக்குள் அழைத்துச் சென்றான்.

இனி கராச்சி போய் என்ன பயன்? யாரை அழைத்துப் போவது? அப்பாவிடம் என்ன சொல்வது? ஏது செய்வது? என்றெல்லாம் யோசிக்கத் தொடங்கினான் ஜான். பப்புவின் ஆண்டு நிறைவு அன்று எடுத்த புகைப்படம் ஒன்றை அவன் தன் அப்பாவுக்கு அனுப்பி யிருந்தான். அவருக்கும் அம்மாவுக்

கும் அது மிகவும் பிடித்திருந்தது. அன்று முதல் அவர்கள் 'பப்புவைப் பார்க்க ஆசையாயிருக்கிறது. இங்கே அழைத்து வா' என்று கடிதம் தவறாமல் எழுதி வந்தார்கள். அம்மாவும் அப்பாவும் இந்த அதிர்ச்சியைத் தாங்குவார்களா?

ஷீலாவுக்கு ஆறுதல் சொல்லி அவளை அழைத்துப் போக வேண்டுமே. அப்பாவைப் பார்க்க அவள் தன் துயரத்தை யெல்லாம் மறந்து பப்புவின்றி வரச் சம்மதிப்பாளா? எஞ்சியிருந்த நாட்கள் முழுவதும் அவன் மனத்தில் இதே கிளர்ச்சி, புயல்.

கோப் கமலானியும் அவர் மனைவியும் எவ்வளவோ சொல்லி அவர்கள் இருவரையும் சாப்பிட வைத்தார்கள். கராச்சி போகும் புரோகிராமை ரத்து செய்யாமல் தகப்பனாரைப் பார்த்து வரவேண்டும் என்றும் எடுத்துரைத்தார்கள்.

''இங்குதான் போலீஸ் விசாரணை நடைபெற்றுக் கொண்டிருக்கிறதே! மன ஆறுதலுக்கு இப்படி ஒரு மாறுதல் தேவைதான்!'' என்றாள் ஸ்ரீமதி கமலானி.

சனிக்கிழமை மாலை இருவரும் விமானத்தில் கராச்சிக்குப் புறப்பட்டார்கள். அழுது அழுது ஷீலாவின் கண்கள் வீங்கி யிருந்தன.

ஆகாய விமானத்தில் உட்கார்ந்ததும் விமான உபசாரிணி எல்லோரையும் இடுப்புப் பட்டையைக் கட்டிக்கொள்ளுமாறு கூறினாள். எல்லோரும் அவள் சொன்னபடியே செய்தனர். ஆனால் ஷீலாவுக்குத் தன் நினைவே இல்லை. விமான உபசாரிணி ரோஸி மீண்டும் கூறினாள், ''பெல்ட்டைப் போட்டுக் கொள்ளுங்கள்!'' என்று! கூறியதோடு நில்லாமல் அவளே வந்து ஷீலாவின் பெல்ட்டை மாட்டியும் விட்டாள்.

சிரித்த முகம் படைத்த ரோஸி ஒவ்வொரு பிரயாணியின் டிக்கெட்டையும் வாங்கிக்கொண்டு, சாக்லேட், டாப்பி, பப்பர்மெண்ட், லவங்கம், ஏலக்காய், சூயிங்கம் முதலியவை வைத்திருந்த தட்டை நீட்டினாள்.

விமானம் ஆறாயிரம் அடி உயரத்தில் பறந்து கொண்டிருந்தது.

ஷீலா இங்கும் அங்கும் பார்க்கக் கழுத்தைத் திருப்பினான். அப்பொழுது துரதிர்ஷ்டம் மீண்டும் அவன் கண்களெதிரே நின்றது.

அவனது மறுபுறத்து நாற்காலியில் மிக மிக நாகரிகமான ஜோடி ஒன்று உட்கார்ந்திருந்தது. பெண்ணின் மடியிலே நோயுற்ற குழந்தை ஒன்று காஷ்மீரிச் சால்வையினால் மூடப்பட்டுக் கிடந்தது. குழந்தையின் காலில் சிவப்பு வண்ணப் பூட்ஸ் போடப்பட்டிருந்தது. மூடிய கை ஒன்று மட்டும் தெரிந்தது. தலை மயிர் வறண்டு காணப்பட்டது. அந்தப் பெண்மணி அதை மிக அன்புடன் தோளில் சாத்திக்கொண்டிருந்தாள்.

ஷீலாவுக்குப் பப்புவின் நினைவு வந்தது. அவள் பின்னைப் பாசம் விழித்தெழுந்தது. முன் பின் அறிமுகம் இல்லாத பொழுதிலும் அவள் அந்தப் பெண்ணிடம், ''குழந்தையை நான் கொஞ்ச நேரம் வைத்துக்கொள்ளட்டுமா?'' என்று கேட்டாள்.

''உடல் நலம் சரியில்லை. இப்பொழுதுதான் தூங்கி யிருக்கிறது. கை மாறினால் விழித்துக் கொண்டு விடும்'' என்று பதில் அளித்தாள் அந்தப் பெண்.

அவள் கணவன் கடிந்து கொண்டான். ''குழந்தைக்குப் பிறர் பார்வை திருஷ்டிபட்டுவிடும். எல்லோருடைய கண்களும் ஒரு மாதிரி இருப்பதில்லை'' என்றான் அவன்.

ஷீலாவுக்கு அந்தப் பெண்ணின் கணவன் சொன்னது சரியாகவே பட்டது. அவளே தன் மகன் பப்புவை அறிமுகமில்லாத பெண்களிடம் கொடுப்பதில்லையே! திருஷ்டிப்பட்டு விடும் என்பது உண்மைதான்.

ஒரு வேளை அந்தப் பெண்ணின் கைசளைத்து விட்டது போலும். அவள் குழந்தையைத் தூக்கிச் சரியாகச் சாத்திக் கொண்டாள்.

விமானம் மேகங்களுக்கிடையே புகுந்து புறப்பட்டது. 'பெல்டைக் கட்டிக் கொள்ளவும்' என்ற அறிவிப்புத் தோன்றியது.

ரோஸி கூறுவதற்குள்ளாகவே, விமானத்துக்கு அதிர்ச்சி ஏற்பட்டு டக்கென்று இருநூறு அடி கீழே இறங்கி விட்டது. அதன் பலனாக அந்தக் குழந்தையின் இடது கால் பூட்ஸ் கீழே விழுந்து விட்டது.

ஷீலாவின் கவனம் திரும்பத் திரும்பக் குழந்தையின் பக்கமே சென்றது. அவள் குனிந்து அந்தப் பூட்ஸை எடுத்துக் குழந்தையின் காலில் மாட்டப் போனாள். அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள் மகன் பப்புவின் இடது காலில் பசுமையான மச்சம் ஒன்று உண்டு. அதே போன்ற மச்சம் அந்தக் குழந்தையின் காலிலும் இருந்தது. அவளால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. குழந்தையின் கால்களைச் சட்டென்று பற்றிக் கொண்டாள். சில்லென்றிருந்தது அது.

அந்தப் பெண்ணுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சட்டென்று எழுந்து தன் கணவனைத் தன் ஆசனத்தில் உட்காரச் சொல்லிவிட்டு, அவன் ஆசனத்தில் போய் தான் உட்கார்ந்து கொண்டாள்.

''உன் கண்களுக்கு எந்தக் குழந்தையைப் பார்த்தாலும் பப்புவாகவே தோன்றுகிறது!'' என்று ஷீலாவின் பேச்சுக்குச் சமாதானம் சொன்னான் ஜான்.

எல்லோரும் அவளைப் பைத்தியம் என்றே எண்ணினர். அந்தத் தம்பதிகளுக்கோ அவள் மேல் கோபம் கோபமாக வந்தது. ஷீலாவும் இடம் மாற்றிக் கொண்டு ஜன்னலுக்கு அருகில் அமர்ந்தாள்.

எதிரே வைத்திருந்த பையிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டாள் அவள். மேலே காற்று வரும் குழாயைத் தன் முகத்தில் படும்படியாகத் திருப்பிக் கொண்டாள்.

அவள் மெல்லிய குரலில் ஜானிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தாள். 'டாய்லட்' அறைக்குப் போகும் நோக்கத்தில் விமான உபசாரிணியை உதவிக்கு அழைத்தாள்.

ரோஸி அவளைப் பின் பகுதிக்கு அழைத்துச்



சென்றான். அவனிடம் ஷீலா, ''இரண்டு நாட்கள் முன்பு என் மகள் தூக்கிச் செல்லப் பட்டாள். அந்தப் பெண்ணிடம் இருக்கும் குழந்தை கட்டாயம் என்னுடையதாகத் தான் இருக்க வேண்டும் என்று தோன்று கிறது. என்னைக் கேப்டனிடம் அழைத்துப் போ. நான் ரிப்போர்ட் எழுதி வைக்க விரும்புகிறேன்!'' என்றாள்.

ரோஷி விமானமோட்டிக்கு எல்லாவற்றை யும் விளக்கக் கூறினான். விமான தளத்தில் சோதனைக்கான ஏற்பாடு செய்யுமாறும் வேண்டினான்.

காப்டன் பிரேஹசர் முதலில் கம்பியில்லாத் தந்தி மூலம் இந்தியப் போலீஸ் தலைமை இலாக்காவுடன் தொடர்பு பூண்டார்.

ரிப்போர்ட் பதிய வைத்தார். பிறகு சர்வ தேசியப் பாதுகாப்புச் சட்டப்படி கராச்சியில் உள்ள போலீசுத் தலைவருக்கும் செய்தியைத் தெரிவித்தார்.

''இன்னும் இருபது நிமிஷங்களில் நாம் கராச்சி விமான கூடத்தில் இறங்குவோம் !'' என்னும் அறிவிப்பு வந்தது.

பயணிகள் தங்கள் தங்கள் கைப்பைகளைச் சரிபார்த்துக் கொண்டனர். பெண்கள் தங்கள் சிங்காரங்களை முடித்துக்கொள்ள முயன்றனர்.

இரண்டரை மணி நேரம் எப்படி ஓடியது என்பது தெரிய வில்லை. இரவு ஒன்பது மணிக்கு விமானம் ஒரு வட்டமிட்டது. கராச்சி விமானகூடத்தில் தன் சக்கரங்களைப் பதிய வைத்து ஓடியது.

பிரயாணிகளின் நண்பர்களும் சொந்தக் காரர்களும் விமானகூடத்துக்கு வரவேற்க வந்திருந்தனர். அவர்கள் சற்றுத் தொலைவி லேயே நிறுத்தப்பட்டனர்.

ஜூலியின் தந்தை ராம் பேலானியும் தாயாரும் கூட வந்திருந்தார்கள். விமானம் நின்றது. படிகள் பொருத்தப்பட்டன. விமான உபசாரிணி கதவைத் திறந்தாள். வாசலில் ஆயுதம் தாங்கிய போலீஸ் அதிகாரி ஒருவர் நின்றிருந்தார். எல்லோரையும் சோதனை யிட்டார்கள். எதற்காக இந்தச் சோதனை என்பது யாருக்குமே தெரியவில்லை.

ஆஸ்திரேலியர், அரேபியர், குஜராத்தி யர் எல்லோருமே மகிழ்ச்சியுடன் தங்களைச் சோதனையிட இடம் கொடுத்தனர். ஜூலிக்கும் ஷீலாவுக்கும் முறை வந்தது.

போலீஸ் அதிகாரிக்கு அருகில் வந்ததும் ஷீலா பொறுமை இழந்து, ''நான்தான் ரிப் போர்ட் செய்தேன். அதோ பாருங்கள், அந்தப் பெண்மணிதான்..... அந்தக் குழந் தையைச் சோதித்துப் பாருங்கள். அது என்னுடையதாக இருக்குமோ என்று எனக் குச் சந்தேகம்!'' என்றாள்.

சொன்னவள் அழவே தொடங்கிவிட்டாள்.

ஜூலி ஷீலாவை வெளியே அழைத்து வந் தான். அவன் அவளைத் தந்தையிடம் ஒப் படைத்து விட்டு விமானத்துக்குக் கீழேபோய்




நின்றான். அடுத்தபடியாக அந்தத் தம்பதிகளின் முறை வந்தது. அந்தப் பெண் குழந் தையைப் பூப் போல் அணைத்துக் கொண்டு போலீஸ் அதிகாரிக்கு அருகில் வந்தாள்: இளநகை புரிந்து, ''என் பை, பர்ஸ் எல்லாம் அவரிடம் இருக்கின்றன. பார்த்துக் கொள் ளுங்கள். என்னை விடுங்கள்!'' என்றாள்.

''விமான உசாரிணியிடம் குழந்தையைக் கொடு! நீ வாக்குமூலம் கொடுக்கவேண்டும்!'' என்றார் போலீஸ் அதிகாரி.

அவள் சட்டென்று கொதித்தெழுந்து, ''உடல்நலமில்லாக் குழந்தையின் வாழ்க்கை யோடு விளையாட விரும்புகிறீர்களா?'' என்று கேட்டாள். கணவனும் சாக்குப் போக்குச் சொல்லலானான்.

''டாக்டர் இங்கு இருக்கிறார். கவலைப்படா தீர்கள்!'' என்றார் அதிகாரி.

வேறு வழி புலப்படாமற் போகவே, குழந் தையை ரோஷியின் கையில் கொடுக்கும்படியா யிற்று. ரோஷிக்குக் குழந்தையை வாங்கிக் கொள்ளத் தெரிய வில்லையோ, அல்லது என்ன ஆயிற்றோ, தெரியவில்லை! அவள் கையி லிருந்து குழந்தை ஐந்தடி உயரத்திலிருந்து கீழே தொப்பென்று விழுந்து விட்டது !

எல்லோரும் பதறி விட்டார்கள். ரோஷியோ பயத்தில் வீறிட்டுக் கதறியே விட்டாள். விமான மோட்டி உதவிக்காக ஓடிவந்தார். குழந்தையைத் தூக்க முயன்றார்.

போலீஸ் அதிகாரியும் டாக்டரும் குழந் தைக்கருகில் விரைந்தார்கள்.

''ஓடுகிறான், ஓடுகிறாள்! பிடியுங்கள் !'' என்ற கூச்சல் எழுந்தது.

தாயும் தந்தையும் குழந்தையைப் போட்டு விட்டு ஓடவே, குழுமியிருந்தவர்கள் அனைவ ரும் கூக்குரலிட்டார்கள். விமான கூடத்திலே போலீஸ் ஏற்பாடு முன்கூட்டியே வெகு ஜாக் கிரதையாகச் செய்யப்பட்டிருந்தது. இருவ ரும் ஓடி ஒளிய முடியாமல் பிடிபட்டனர்.

குழந்தையைத் தூக்கிக் கொண்டு, பிர யாணிகள் தங்கும் இடத்துக்கு வந்தார்கள். கூட்டம் அப்புறப்படுத்தப்பட்டது. பிறகு....

...டாக்டர் வந்தார். டாக்டர் தேவைப் படவே இல்லை. குழந்தை செத்திருந்தது.

ஆனால் இறந்த குழந்தையை அவர்கள் கொண்டு வரக் காரணம்....?

சோதிப்பதற்காகப் போலீஸார் குழந்தை யின் உடலைப் புரட்டினார்கள்.

முதுகுப்புறத்தில் மேலிருந்து கீழ் வரை தையல் போட்டிருப்பதைக் கண்டார்கள்.

தையல் பிரிக்கப்பட்டது....

குழந்தையின் உடலுக்குள்ளே, இதயம், சுவாசப் பை, எலும்பு எதுவுமே இல்லை.

உள்ளே திணிக்கப்பட்டிருந்தவை யெல் லாம் வைர வைடூரியங்களும், மாணிக்கப் பரல்களும் ரத்தினக் கற்களுமாக விலை யுயர்ந்த பொருள்களாகும்.

ஏறக்குறைய முக்கால் கோடி ரூபாய் பெறுமானம் இருக்கும் என்று மதிப்புப் போடப்பட்டது!

விலையுயர்ந்த பொருளுக்காக விலைமதிப் பற்ற ரத்தினம் ஒன்று பறி போயிருந்தது.

உலகத்தையே விலையாகக் கொடுத்தாலும் பெற்றோருக்குத் தன் மகள் பப்புவைக் காட்டி லும் உயர்ந்த விலை மதிப்பற்ற பொருள் வேறு எது இருக்க முடியும் ?

**(ஸ்ரீ அருந்ததி கேள்வடேகரின் மராட்டிக் கதை)**



# அணிற்பிள்ளையும் தென்னம்பிள்ளையும்



ஜ. சாமிநாதன்

ஜன்னல் வழியே உலகம் தெரிகிறது. இளமையின் செழிப்புடன் மதர்த்து இரண்டு தென்னம்பிள்ளைகள் தென்றலில் மெல்ல ஆடுகின்றன. சூரிய ஒளியில் இளம் ஓலைகள் பச்சைப் பசேலென்று மின்னுகின்றன.

ஆ, என்ன அழகு! கண்ணைக் கொள்ளை கொள்ளும் அழகு.

சிறிது நேரத்தில் தென்னம்பிள்ளைக்கு அருகில் முன்னங் காலைத் தூக்கிக்கொண்டு வந்து நிற்கிறது ஓர் அணில். அதன் பின்னே இரண்டு சின்னஞ் சிறிய அணிற்பிள்ளைகள் இளமையின் துறுதுறுப்புடன் ஓடி வருகின்றன. தாய் அணிலைச் சுற்றிச் சுற்றி வருகின்றன; கீச்சிடுகின்றன. தாய் அணிலும் சிறிய அணிற்பிள்ளைகளும் அந்த இரண்டு தென்னம்பிள்ளைகள் மீது ஏறியும், ஓடியும், மறைந்தும் கண்ணாமூச்சி விளையாடுகின்றன. அணிற்பிள்ளைகளின் அழகும், அதன் துறுதுறுப்பும் அவை ஓடுவதால் தென்னங் கீற்றின் அசைவும், அசைவின் அழகும்....

இறைவா, உலகில் அழகைப் படைத்த நீ வாழ்க! அந்த அழகைக் காணக் கண்களைப் படைத்த உன் கருணை வாழ்க!

அந்த அணிற்பிள்ளைகளின் ஆட்டம் முடிவில்லாதது போலத் தொடர்கின்றது.

என் கண்கள், என் கண்கள், என் கண்கள்... கண்ணீரைச் சொரிகின்றன.

இந்த ஆனந்தத்தை வார்த்தைகளில் சொல்லப் போமோ! கண்களைப் படைத்த அவன் வாழ்க!

சற்று நேரம் கழித்து முடிவில்லாதது போல் தோற்றிய ஆட்டம் சட்டென நின்றது.

தாய் அணில் சிலையாய்ச் சமைந்தது போல் நிற்கின்றது. சிறிய அணிற்பிள்ளைகளும் தாயிடம் ஒடுங்கி நிற்கின்றன.

மறுகணம்...

தாய் அணில் அலங்கோலமாகக் கூவிக் கொண்டு ஓடுகிறது. அணிற்பிள்ளைகளும் பிரளயம் மூண்டது போல் கதறி ஓடுகின்றன. கன்னங் கரிய நிறத்தில் காக்கை ஒன்று அணிற்பிள்ளைகளை... தாய் அணில் பதறிக் கூவுகின்றது.... அந்தச் சின்னஞ் சிறு அணிற் பிள்ளைகள் அந்தக் காக்கையிடம் சிக்கி... உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அந்த அணிற்பிள்ளைகள் படும் அவஸ்தை...

ஐயோ, ஆண்டவனே, இந்தக் கண்களை ஏன் படைத்தாய்? இந்த உயிர்களின் துடிப்பும் பெரிய உயிரின் கதறலும்...

இறைவா, கண்களை ஏன் படைத்தாய்?....

இரண்டு தென்னம்பிள்ளைகளும் அசைவில்லாமல் நிற்கின்றன. பிள்ளையைப் பறி கொடுத்த தாயைப் போல அந்த அணில்....

''ஐயோ பாவம், விபத்தில் சிக்கிக் கையும் காலும் போய், உடல் முழுவதும் கட்டுடன், 'இனி எப்படி வாழப் போகிறேனோ' என்று நினைத்து அழுகிறான் போலிருக்கிறது'' என்று நர்ஸ் ஒருத்தி இன்னொருத்தியிடம் சொல்கிறாள்.

ஆண்டவனே, நான் என்ன நினைத்தா அழுகிறேன்? என் அருகிலேயே இந்த அவலம் நிகழ்வதைப் பார்த்தும்கூட, அதைத் தடுக்கக் கையோ, கூவி அழைக்க வாயோ இல்லாமல் என்னைச் செய்து விட்டாயே என்றல்லவா அழுகிறேன்.

# கூந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது

## ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயில்

கூந்தலை மழமழப்பாகவும் கவர்ச்சியாகவும் ஆக்குகிறது





ஸ்வஸ்திக் ஹேர் ஸ்டைல் 'மயூர்'

சிறிதளவு ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயிலைத் தடவி, கூந்தலை வாரி மூன்று கால்களாக்கிக்கொண்டு நடுப்பாகத்தைச் சுழற்றி ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போடவும். இரு பகுதிகளையும், எதிரும் புதிருமாகக் கொண்டையைச் சுற்றிச் செருகிவிடவும். பொருத்தமான அணிகளினால் கொண்டையை அலங்கரித்துக்கொள்ளவும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.

# பொன் விலங்கு

## மணிவண்ணன்



### ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்

இனிமேலாவது நல்ல காரியங்களைச் செய்து நல்லபடியாக வாழலாம் என்று நினைப்பதற்குப் பதில் இதுவரை செய்திருக்கிற தவறுகளையும், இனிமேல் செய்யப் போகிற தவறுகளையுமே நல்ல காரியங்களாக நிரூபித்துக்கொண்டு வாழ்ந்து விடலாம் என்று நினைக்கிற வறட்டுக் கௌரவத்தைச் சிலரால் விட்டுவிட முடியாது. மஞ்சள்பட்டியார் இந்த விதத்தைச் சேர்ந்தவர். சத்தியமூர்த்தியின் தந்தையைக் கூப்பிட்டு அவனை அடக்கி வழிக்குக் கொண்டு வருமாறு சொல்லியதோடு நிற்காமல் அதற்கு முன்பே ஜமீன்தார் வேறு சில ஏற்பாடுகளையும் செய்திருந்தார். தம்முடைய சொந்தப் பத்திரிகையாகிய குத்து விளக்கில் அந்த வாரம் மாணவர்களின் வேலை நிறுத்தத்தைக் கண்டனம் செய்தும், மாணவர்களைச் சில ஆசிரியர்கள் தவறான வழியில் தூண்டுவதை ஒடுக்க வேண்டுமென்று கண்டித்தும் தலையங்கம் எழுதச் சொல்லியிருந்தார். மல்லிகைப் பந்தல் கல்லூரி விடுதியின் 'கூரை ஷெட்' நெருப்புப் பிடித்து எரிந்த காட்சியைப் புகைப்படமாகப் பிரசுரிக்கவும் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. பொதுமக்களுடைய அநுதாபத்தைத் தங்கள் பக்கமாகத் திருப்பிக் கொள்ள வேண்டுமென்பதற்காக ஜமீன்தாரும் கண்ணாயிரமும் இந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். ஜமீன்தாருடைய சொந்தப் பத்திரிகையாகக் கைக்கு வந்து கண்ணாயிரத்தின் நிர்வாகத்தில் அடங்கிய பின் குத்து விளக்கில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. பொதுமக்களுடைய கவனத்தை மிகவேகமாகக் கவர வேண்டும் என்பதற்காக 'இரவில் நடந்த இருபது கொலைகள்' என்ற அதி பயங்கரத் துப்பறியும் தொடர் கதையை 'இரத்தக் காட்டேரி' என்னும் புனைப் பெயர் பூண்ட பேயாண்டி என்ற மர்மக் கதை மன்னர் எழுதி வந்தார். திரைப்படச் சிங்காரிகளின் தலை அலங்காரங்களைப் பற்றிய புகைப் படங்கள் தொடர்ந்து வெளிவரலாயின. புதிதாக நியமிக்கப்பட்டிருந்த மலையாள ஆசிரியர் ஆங்கிலத்தில் எழுதுகிற தலையங்கங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வந்து கொண்டிருந்தன. 'குத்து விளக்கின்' ஊழல்களைப் பற்றியும், அதில் வருகிற தரக் குறைவான அம்சங்களைப் பற்றியும் அதே பத்திரிகையில் முன்பு வேலை பார்த்து வந்தவன் என்ற முறையில் குமரப்பனிடம் யாரோ நண்பர்கள் கேட்டபோது ''நாமெல்லாம் இருந்து வேலை பார்த்து அதை இன்னும் அதிக காலம் நன்றாக வாழ வைத்துவிடக்கூடாது. 'இட் ஈஸ் மை விஷ் தட் இட் எண்ட்ஸ் இன் எ நேச்சுரல் டெத்' (அது இயற்கையாகவே சாகும்படி விட்டுவிட வேண்டுமென்பது தான் எனது ஆசை). துப்பறியும் கதைகளில் அதிகமாகச் செலவழிவது கொலை செய்யப் படுகிறவர்களின் இரத்தம். அதிகமாகச் செலவழியாதது அவற்றை எழுதுகிறவர்களின் மூளை. 'இரவில் நடந்த இருபது கொலைகள்' என்று தலைப்பை அதிபயங்கரமாகப் போட்டுவிட்

டுத் தூக்கம் வராமல் வேதனைப்பட்ட கதாநாயகன் கட்டிலுக்கடியில் இருந்த இருபது மூட்டைப் பூச்சிகளையும் நசுக்கிக் கொன்றதாக முடிப்பதும், 'எரிந்த பங்களா' என்று தலைப்பை எழுதிவிட்டுக் கடைசியில், 'நேற்றுவரை இருண்டு போயிருந்த அந்தப் பங்களாவில் இன்று விளக்கு எரிந்தது' என்பதாக முடிப்பதும் கூட உண்டு. அதெல்லாம் என்ன செய்வதென்று தெரியாதவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை உணராமலே ஏதோ செய்து வருகிற காரியங்கள். நாம் ஏன் அவற்றையெல்லாம் பற்றிக் கவலைப்பட வேண்டும்?'' என்று குமரப்பன் அலட்சியமாக மறுமொழி கூறியிருந்தான். அதே குத்துவிளக்கில் தான் இப்போது மாணவர்களின் வேலை நிறுத்தத்தைக் கண்டித்தும், ஜமீன்தாருடைய நிர்வாகத் திறமையைப் புகழ்ந்தும், தலையங்கங்கள் வெளிவந்திருந்தன. குத்துவிளக்கின் இந்த அடாத செயலை எதிர்த்துத் தங்கள் அதிருப்தியைக் காட்டுவதற்காக மல்லிகைப்பந்தல் கல்லூரி மாணவர்கள் அந்த வாரம் கட்டுக் கட்டாக அந்தப் பத்திரிகைப் பிரதிகளை விலைக்கு வாங்கிப்



பொது இடங்களில் நெருப்பு வைத்துக் கொளுத்தினுர்கள்.

''நல்லாக் கொளுத்தட்டும்! நமக்கென்ன வந்திச்சு? உள்ளூர் ஏஜெண்டை இன்னும் நாலு கட்டுப் பார்சல் வரவழைச்சுக் கொளுத்துறவங்களுக்கு விற்கச் சொல்லு'' என்று ஜமீன்தார் இதைப் பற்றிச் சிறிதும் கவலை இல்லாமல் கண்ணுயிரத்திடம் சொல்லிக் கொண்டிருந்தார். மல்லிகைப் பந்தல் கல்லூரி வேலை நிறுத்தத்துக்கு அநியாயமான முறையில் மாணவர்களைத் தூண்டியவன் சத்தியமூர்த்திதான் என்பதற்கு ஒரு 'ரிக்கார்டு' வேண்டுமென்பதற்காகக் குத்துவிளக்கில் அந்தத் தலையங்கம் வரச் செய்திருந்தார் ஜமீன்தார். அந்த வாரத்துக் 'குத்துவிளக்கு' இதழ் வெளியாகி நெருப்புக் கிரையான பின்னும் நம்பிக்கை போய் விடாதபடி அதற்கு மறுதினம் மோகினியை அழைத்துக் கொண்டு மல்லிகைப்பந்தலுக்கு வந்திருந்த சத்தியமூர்த்தியின் தந்தையைக் கருவியாகப் பயன்படுத்தி மகனை ஒடுக்கி விடலாம் என்ற யோசனையைக் கண்ணுயிரம் ஜமீன்தாரிடம் சமயம் பார்த்துச் சொல்லிக் கொடுத்திருந்தார். அந்த யோசனையை மறுக்க முடியாமல் நிர்ப்பந்தத்தின் காரணமாகச் சத்தியமூர்த்தியின் தந்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. காலஞ் சென்ற பூபதியின் மகள் என்ற உரிமையோடு பாரதி கல்லூரி வேலை நிறுத்தத்தைப் பற்றி இனி எதுவும் விசாரிக்க வாய்ப்பில்லாதபடி அவளை மோகினியிடம் நாட்டியம் படித்துக் கொள்ளச் சொல்லித் தந்திரமாக ஒதுக்கி விட்டிருந்தார் ஜமீன்தார். மோகினி மல்லிகைப்பந்தலுக்கு வந்து சேர்ந்த மறு தினம் காலையில் ஜமீன்தார் அவளையும் பாரதியையும் வற்புறுத்தி நாட்டிய டியூஷனைத் தொடங்கி வைத்துவிட்டார். மோகினிக்கும் நாட்டியம் கற்பிப்பதற்கேற்ற அமைதியான மனநிலை அப்போது இல்லை. பாரதிக்கும் நாட்டியம் கற்றுக்கொள்வதற்கு ஏற்ற அமைதியான மனநிலை அப்போது இல்லை. இரண்டு பேரும் ஜமீன்தாருடைய கூப்பாட்டுக்குப் பயந்து கற்பிப்பது போலவும், கற்றுக் கொள்வது போலவும் நடிக்க வேண்டியிருந்தது. அடவு, விளம்ப காலம், மத்திய காலம், துரித காலம், திஸ்ர ஜதி, சதுரஸ்ர ஜதி, கண்ட ஜதி, மிஸ்ர ஜதி, சங்கீர்ண ஜதி, என்று சில வார்த்தைகள் காதில் விழுகிறவரை உடன் உட்கார்ந்திருந்து மருட்டிவிட்டு அப்புறம் ஜமீன்தார் அங்கிருந்து எழுந்து போய் விட்டார். சத்தியமூர்த்திக்கு ஏற்பட்டு விட்ட துன்பங்களாலும், தந்தையை இழந்த சோகம் மாறுத மன நிலையாலும் பாரதி தளர்ந்திருந்தாளே ஒழிய உண்மையில் மோகினியைப் போல் பரத நாட்டியக் கலையில் வசீகரமான தேர்ச்சியுள்ள ஒருத்தியிடம் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை அவளுக்கே அந்தரங்கமாக உண்டு. ஜமீன்தார் எழுந்திருந்து போனபின்போ பாரதியின் ஆசை வேறு விதமாகத் திரும்பியது. ''அக்கா! நீங்க ஆடுங்க... நான் பார்க்கிறேன்'' என்று சொல்லித் 'தாயே யசோதா' என்ற தோடி ராகக் கீர்த்தனத்துக்கும், 'நாதர் முடிமேல்' என்ற புன்னுகவராளிப் பாட்டிற்கும் மோகினியை ஆடச் சொல்லிப் பார்த்து மகிழ்ந்தாள் பாரதி. ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த வான வில்லைப் போலவும், பூமியில் உள்ள பல நிற மலர்களாலும் தொடுத்த பூமாலையைப் போலவும் மோகினி சுழன்று சுழன்று ஆடிய ஆட்டத்தைக் கண்டு பாரதி அபூர்வமான சொப்பனங்கள் நிறைந்த ஒரு புதிய உலகத்திற்கே போய்விட்டுத் திரும்பி வந்ததைப் போன்ற உணர்வை அடைந்திருந்தாள். மோகினி ஆடி முடித்த பின்பு அந்த இடத்தைச் சுற்றிலும் அழகின் நவரச நயங்களும் பாவனைகளும் வந்து காத்துக் கட்டுண்டு கிடப்பன போல் ஒரு சூழ்நிலை உருவாகி யிருந்தது. வியப்பு மிகுதியினுல் உணர்ச்சி வசப்பட்ட பாரதி, ''அக்கா! இந்த விநாடியில் நீங்கள் தெய்வமாகக் காட்சியளிக்கிறீர்கள்! இப்படியே உங்களை நிற்கச் செய்து கைகூப்பித் தொழ வேண்டும் போல் இருக்கிறது'' என்ருள். இந்த வார்த்தைகளைக் கேட்ட மோகினியோ கண் கலங்க நின்று கொண்டிருந்தாள். ''எனக்குள்ளே சுயமாக நிறைந்திருந்த கலையுணர்வு செத்துப் போய்ப் பல நாட்களாகி விட்டதம்மா! இன்னும் நான் ஆடிக் கொண்டிருக்கிறேன் என்ருல் என்னுள் யாரோ ஒருவருடைய நல்ல ஞாபகம் மீதமிருந்து ஆட்டிக் கொண்டிருக்கிறதென்றுதான் சொல்ல வேண்டும்'' என்ருள் மோகினி. அவள் இருந்த நிலையைப் பார்த்து அவளிடம் மேலே எதுவும் பேசத் தோன்றுமல் அமைதியாக உட்கார்ந்திருந்தாள் பாரதி. அப்படி உட்கார்ந்திருந்தவளுடைய கவனத்தைப் பங்களாவின் முன் பக்கம் அப்போது நிகழ்ந்து கொண்டிருந்த வேறொரு நிகழ்ச்சி கவர்ந்தது. 'போர்டிகோ'வில் காரைக் கொண்டு வந்து நிறுத்திக் கண்ணுயிரமும் ஜமீன்தாருமாக—




இன்பம் பொங்கும் இல்லம், கண் நிறைந்த கணவன், மாண்புள்ள மனையாள், வீட்டு வேலைகளை விருப்பமுடன் செய்வாள்...

## துணி வெளுக்க அவள் உபயோகிப்பது துல்லியமான டெட்...

கண்ணைப் பறிக்கும் வெண்மை. ஆரோக்கியம் தரும் தூய்மை, டெட் சலவையின் மேன்மை!

நாகரீக நங்கையர் தேர்ந்தெடுக்கும் நவீன சலவை சாதனம் டெட்!

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்-1

Shilpi

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.



எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.








மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

[illegible]-G.4.TAM.

மதுரையிலிருந்து மோகினியை அழைத்துக் கொண்டு முன் தினம் மாலையில் மல்லிகைப் பந்தலுக்கு வந்திருந்த அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரை எங்கோ புறப்பட வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள். ''நான் அவனைப் போய்ப் பார்க்கிறத்துக்குக் கார் ஏதுக்குங்க....? நடந்தே போய்ப் பார்த்துச் சொல்ல வேண்டியதைச் சொல்லிப்பிட்டு வந்திடறேன்'' என்று அந்தக் கிழவர் காரில் ஏற மறுத்ததையும் — காரில் தான் போக வேண்டுமென்று வற்புறுத்திக் கண்ணுயிரமும் ஜமீன்தாரும் அந்தக் கிழவரைப் பிடித்து உள்ளே தள்ளாத குறையாகக் காரில் ஏற்றி விட்டுத் தாங்களும் பக்கத்துக் கொருவராக ஏறி உட்கார்ந்து கொண்டு எங்கோ அவசரமாகப் புறப்பட்டுப் போவதையும் பாரதி அப்போது கவனித்தாள். முந்தியநாள் மாலையில் இதே கிழவரிடம் ஜமீன்தார் ஏதோ சொல்லிப் பயமுறுத்திக் கொண்டிருந்ததையும் இப்போது நினைத்தாள் அவள். அந்தக் கணக்குப்பிள்ளைக் கிழவர் யாரிடம் எதைச் சொல்லி எப்படிக் கல்லூரி மாணவர்களின் வேலை நிறுத்தத்தைத் தடுக்க முடியும் என்பது தான் அவளுக்குப் பெரிய மர்மமாக இருந்தது. எவ்வளவு சிந்தித்தாலும் எதையும் தொடர்புபடுத்திப் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரைப் பற்றி மோகினிக்கு ஏதேனும் தெரிந்திருக்குமோ என்ற சந்தேகத்தில் அந்த நிலையில் இதைப் பற்றி அவளிடம் கேட்கத் தயங்கிக் கொண்டே கேட்டாள் பாரதி:

''அக்கா! இந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரைப் பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா? இவர் யார்? இத்தனை வயதானவரை ஜமீன்தார் மாமா ஏன் இப்படி வேலைக்காரர்களை ஏவுவது போல் ஏவிச் சிரமப்படுத்தறாங்க?''

''எனக்கு எதுவுமே தெரியாதம்மா? மதுரையில் மஞ்சள்பட்டி பங்களாவில் கணக்குப் பிள்ளையாக இருக்கிறார் போல் இருக்கு. என்னிடம் அவர் அதிகம் பேசறதேயில்லை. மதுரையில் காரில் சாமான்களையும் என்னையும் ஏற்றி விட்டு முன் ஸீட்டில் டிரைவருக்குப் பக்கத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டவர் இங்கே வந்து சேருகிற வரையில் வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூட என்னோடு பேசவில்லை. யாரோ பாவம்! அப்பாவி! என்னைப் போலவே இந்தப் பாவிகளிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறார்......'' என்றாள் மோகினி. கண்ணுயிரத்தையும், ஜமீன்தாரையும் மோகினி உள்ளூற வெறுக்கிறாள் என்பதைப் பாரதி முன்பே குறிப்பாகப் புரிந்து கொண்டிருந்ததனால் இதைக் கேட்டு அவள் அதிகம் வியப்படையவில்லை. இந்தப் புதிரைப் புரிந்து கொள்ள அவளுக்கு ஒரே ஒரு நம்பிக்கை மீதமிருந்தது. டிரைவர் முத்தையாதான் காரை ஓட்டிக் கொண்டு போயிருக்கிறான். திரும்பி வந்ததும் அவனைத் தனியே கூப்பிட்டு விசாரித்தால் அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரை அவர்கள் எங்கே அழைத்துக் கொண்டு போனார்கள்? என்ன செய்வதற்காக அழைத்துக் கொண்டு போனார்கள்? என்ற விவரமெல்லாம் தெரிந்து விடும். 'கார் திரும்பி வருகிற வரை பொறுத்திருப்போம்' என்று பொறுமையோடு இருந்தாள் அவள். அப்படியிருந்தபோது அதுவரை தானாக வலுவில் அதிகம் பேசாமல் இருந்த மோகினியே பாரதியிடம் மெல்லப் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினாள்:

''ஏனம்மா பாரதி? உங்க அப்பாவுக்கு அப்புறம் இந்தக் காலேஜ் நிர்வாகத்தை எல்லாம் யார் கவனிக்கிறாங்க....? அவரைப் போலப் பெருந்தன்மையா.... இனி மேல் இன்னொருத்தர் கவனிக்க முடியுமா?''

''இதென்ன இப்படிக் கேட்கிறீர்கள் அக்கா? நீங்க 'நியூஸ் பேப்பரே' பார்க்கிறதில்லையா? அப்பாவுக்கு அப்புறம் ஜமீன்தார் மாமா காலேஜ் நிர்வாகக் கமிட்டித் தலைவராக வந்திருக்கிறாரு. அதோடு காலேஜிலே 'ஸ்டிரைக்'கும் வந்திருக்கு!.... எதுவுமே உங்களுக்குத் தெரியாதா?'' என்று பாரதி கூறிய செய்தியைக் கேட்டதும் மோகினிக்குத் 'திக்' கென்றது. அவளுடைய உள்ளுணர்வு பயந்து நடுங்கியது. 'என்னைக் காப்பாற்றிக் கைப்பற்றி ஆட்கொண்ட தெய்வம் விரிவுரையாளராக வேலை பார்க்கிற இந்தக் கல்லூரிக்கும் ஜமீன்தார் தலைவராக வந்துவிட்டாரே! இனி என் அன்பருக்கு என்னென்ன கெடுதல்களெல்லாம் வருமோ?' என்றெண்ணி மனம் கலங்கினாள் அவள். அவளை மதுரையிலிருந்து மல்லிகைப்பந்தலுக்கு அழைத்து வந்த கணக்குப்பிள்ளைக் கிழ





''இதற்கு முன்பு நான் பார்க்கு களிலே செடிகளை யானை, மேறை, ஒட்டகம் போல எல்லாம் வெட்டிக் கொண்டு இருந்தேனுங்க!''

வரும், ''டிரங்கால் வந்தது! ஜமீன்தார் ஐயா உங்களைக் காரிலே மல்லிகைப் பந்தலுக்கு அழச்சிகிட்டு வரச் சொல்லி யிருக்கிருரு. நாளைக் காலையிலே புறப்படணும்'' என்று மட்டும்தான் கூறியிருந்தாரே ஒழியக் கல்லூரி நிர்வாகி யாக ஜமீன்தார் வந்திருப்பதையோ, வேலை நிறுத்தம் பற்றியோ, மல்லிகைப் பந்தல் அரண்மனையிலேயே இனிமேல் குடியேறவேண்டுமென்பதைப் பற்றியோ ஒரு வார்த்தைகூடத் தெரிவிக்கவில்லை. ''நிஜமாவே உங்களுக்கு ஒண்ணுமே தெரியாதா அக்கா?'' என்று மறுபடியும் வியப்பு மேலிட்டு வினவிய பாரதிக்கு மோகினி கூறிய பதிலில் ஆற்ருமையும் துயரமுமே நிறைந்திருந்தன.

''எனக்கென்னம்மா தெரிகிறது? மதுரையில் ஜெயில் கைதி மாதிரி அடைந்து கிடந்தேன். இனிமேல் இங்கே அடைந்து கிடக்கணும்!....''

''இந்த ஜமீன்தார் மாமா ரொம்ப மோசம்! உங்களுக்குக் கூட அவர் இதெல்லாம் தெரிவிக்கிறதில்லையா?... வரட்டும்.... சொல்கிறேன்...'' என்று பதில் சொல்லத் தொடங்கிய பாரதி 'உங்களுக்குக் கூட' என்ற வார்த்தையை ஏதோ ஒரு தொடர்பை நினை வூட்டுவது போன்ற அர்த்தத்துடன் பேசியதைக் கேட்டு மோகினி உள்ளூற மனம் கொதித்தாள். ஆனால் அதை வெளியே சொல்லிக்கொள்ள முடியாமல் தவித்தாள். மோகினி ஜமீன்தாரை வெறுத்தாலும் அவள் அவருடையவள் தான் என்று தவருகப் புரிந்துகொண்டு பேசிவந்தாள் பாரதி. மோகினியோ அந்தப் பேச்சினுல் மனம் புழுங்கிச் சொல் லவும் முடியாமல், மெல்லவும் முடியா மல் உள்ளேயே வெந்து துடித்தாள். அப் பப்பா! ஒரு பெண் தன் அந்தரங்கத்தி லிருக்கிற உண்மையை உலகத்துக்குப் பகிரங்கமாகத் தெரிவித்துக் கொள்ளத் தான் எத்தனை ஆயிரம் தடைகள்! மோகினியின் மன நிலையைப் புரிந்து கொள்ளாமல் பாரதி மேலும் மேலும் பேசிக்கொண்டே இருந்தாள். அவள் பேச்சு மாணவர்களின் வேலை நிறுத்தத் தைப் பற்றித் திரும்பியது:

''இங்கே ஓர் இளம் விரிவுரை யாளர் உதவி வார்டனுக இருக்கிருர். அவர் ரொம்ப நல்லவர். மாணவ மாணவிகளுக்கு எல்லாம் அவர் மேல் உயிர். அவரைக் கல்லூரியிலிருந்து வெளியேற்றி விட வேண்டுமென்று பிரின்ஸிபாலும் ஜமீன்தார் மாமாவும் சதி செய்யருங்க..... அதனுலேதான் 'ஸ்டிரைக்கே' வந்து சேர்ந்தது'' என்று அந்த இளம் ஆசிரியரின் பெயர், பதவி ஒன்றையுமே தெரிவிக்காமல் பொதுவாகவே பேசிக் கொண்டுபோன பாரதி அப்போது தன்னையறியாமலே தன் பேச்சினுல் மோகினியின் ஆவலைத் துடிதுடிக்கச் செய்துகொண்டிருந்தாள். சத்தியமூர்த்தியைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தை அடக்க முடியாமல்தான் மோகினி கல் லூரி நிர்வாகத்தைப் பற்றிய பேச்சையே பாரதியிடம் வலுவில் தொடங்கியிருந் தாள். வெளிப்படையாகச் ''சத்திய மூர்த்தி என்ற ஆசிரியர் உங்கள் கல்லூரி யில் இருக்கிருரா?'' என்று நேரடியாக விசாரிக்க முடியாமல் பயமும் கூச்சமும் தடுத்த காரணத்தால் அவள் அப்படிச் செய்ய வில்லை. 'மேலும் சத்தியமூர்த்தி யைப் பற்றி மட்டுமே விசாரித்தால் பாரதிக்கு அதன் காரணமாகத் தன் மேல் என்ன சந்தேகம் மூளுமோ'' என்ற தயக்கமும் மோகினிக்கு இருந் தது. அவள் வெளிப்படையாக எதைக் குறிப்பிட்டும் விசாரிக்காத காரணத் தால் பாரதி கல்லூரியைப் பற்றியும், மாணவர்களின் வேலை நிறுத்தத்தைப் பற்றியும் பொதுவாகவே கூறிக் கொண் டிருந்தாள். அவள் அப்படிப் பொது வாகக் கூறிய போதிலும் வேலை நிறுத் தத்துக்குக் காரணமாக இருந்த இளம் ஆசிரியரைப் பற்றி அவள் தெரிவித்த குறிப்புக்களைக் கூர்ந்து கேட்ட மோகினி, ''அந்த இளம் விரிவுரையாளர் சத்தியமூர்த்தியாக இருப்பாரோ?'' என்ற அநுமானத்தாலேயே மனம் பதறினுள். (தொடரும்)




தாயார்: சீனு, கெட்ட பிள்ளைகளின் சகவாசமே கூடாது. நல்ல பிள்ளைகளோடு பேசிப் பழகு. அப்பொழுதுதான் உன்னை எல்லோரும் நல்லவன் என்று சொல்வார்கள்.

சீனு: அது சரி, அம்மா! ஆனால் நல்ல பிள்ளைகளுடைய அம்மாக்களெல்லாம், என்னோடு அவர்களை விளையாடவே விடமாட்டேன் என்கிறார்களே, என்ன செய்வது?

ஃ ஃ ஃ

''ஐயா, கடைக்காரரே! எனக்கு இந்த வைரங்கள் நல்லவையா கெட்டவையா என்று கண்டுபிடிக்கத் தெரியாது. உம்மை நம்பித்தான் வாங்க வேண்டும். இவை நல்லவை தானா?''

''உங்களுக்கு வீண் சந்தேகம் எதற்கு? ஒரு காரியம் செய்யுங்கள்! என்னிடமிருந்து வாங்கிச் செல்லும் வைரங்களில் ஒன்றைக் காணாமல் போக்கிவிடுங்கள்! அப்புறம் பத்திரிகைகளில் விளம்பரம் கொடுங்கள், 'காணாமற் போன வைரத்தைக் கொண்டு தருகிறவர்களுக்கு இத்தனை ரூபாய் பரிசாகத் தரப்படும்' என்று. வைரம் திரும்பி வந்தால் மட்டம், திரும்பி வராவிட்டால் உயர்த்தி.''

ஃ ஃ ஃ

கணக்கில் கெட்டிக்காரர்கள் ஆண்களா, பெண்களா? — இது பற்றி ஒரு விவாதம் கல்லூரி அரங்கில் நடந்தது.

விவேகமணி என்னும் வாலிபன் சொன்னதாவது: ''கணக்கில் பெண்கள்தான் புலிகளாக இருந்து வந்திருக்கிறார்கள். லீலாவதி கணிதம் இயற்றியவர் ஒரு பெண்ணாய்த்தான் இருக்கவேண்டும் என்று பெயரிலிருந்தே புலனாகிறது. அதோடு தற்காலத்துப் பெண்கள் செய்யும் காரியங்களும் இதற்குச் சான்று பகர்கின்றன. பெண்கள் தங்கள் வயதை இரண்டால் வகுத்துக் கூறுகிறார்கள். புடவைகளின் விலையை இரண்டால் பெருக்கியும், கணவன்மார்களின் சம்பளத்தை மூன்றால் பெருக்கியும் கூறுகிறார்கள். தங்கள் தோழிமார்களின் வயதோடு ஐந்தோ பத்தோ கூட்டிக் கூறுகிறார்கள். தாங்கள் வாங்கும் பொருள்களின் விலையைப் பத்தோ இருபதோ கழித்துக் கூறுகிறார்கள். எனவே, கணக்கின் அடிப்படையான கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகியவற்றில் பெண்களுக்கு இருக்கும் அறிவு ஆண்களுக்குக் கிடையாது.''



''டாக்டர் சார்! நான் ரொம்ப ஏழை! இரவு நேரங்களில் எனக்குத் தூக்கமே வருவதில்லை. இதற்குச் செலவு செய்து வைத்தியம் செய்து கொள்ளக் கூடிய நிலைமையில் நான் இல்லை. என்ன செய்யலாம், சொல்லுங்கள்!''

''ஒரு நல்ல வழி இருக்கிறது. தூக்கத்துக்குத் தூக்கமும் வரும். பணத்துக்குப் பணமும் கிடைக்கும்!''

''அப்படியும் ஒரு வழி இருக்குதுங்களா? சொல்லுங்கள் டாக்டர்! உங்களுக்குக் கோடிப் புண்ணியமுண்டு.''

''பேசாமல் இரவு காவல் புரியும் வேலை ஒன்று பார்த்துக் கொள்ளுங்கள்!''

ஃ ஃ ஃ

பஸ் நிற்குமிடத்தில் ஒருத்தி: இந்த பஸ் நின்று நம்மை ஏற்றிக் கொள்ளாமல் மட்டும் போகட்டும், ஒரு கை பார்த்து விடுகிறேன்.

மற்றொருத்தி: என்ன செய்து விடுவாய்? வெறும் வாய்ப் பேச்சில் பயனில்லை.

அவள்: இது வெறும் வாய்ப் பேச்சு இல்லை. இந்தப் பஸ் ஓட்டிக் கொண்டு வருபவர் என் கணவர். நிறுத்தி நம் இருவரையும் ஏற்றிக்கொள்ளாவிட்டால் அப்புறம் அவரை வீட்டுக்குள் நுழைய விடுவேனா?

ஃ ஃ ஃ

ரங்கசாமிக்கு ஆகாயவிமானத்தில் போகும் வாய்ப்பு அப்பொழுதுதான் முதல் தடவையாகக் கிடைத்தது. அதுவும் தன் தலை தீபாவளிக்கு மாமனார் செலவில் டில்லி போனான். தன் ஆசை மனைவிக்குத் தன்னை விமான கூடத்திலேயே வந்து சந்திக்கவேண்டும் என்று ஆசையாகக் கடிதம் எழுதினான்.

அவன் எழுதியிருந்தது போலவே அவன் மனைவி சந்திரா காரை எடுத்துக்கொண்டு விமான நிலையத்துக்கு வந்திருந்தாள்.

மகிழ்ச்சி மிதப்புடன் விமானத்திலிருந்து இறங்கி வந்த ரங்கசாமி, ''விமானம் முழுவதையும் நன்றாகச் சுற்றிப் பார்த்துவிட்டேன். இதில் வேலை செய்யும் நபர்களின் பெயர் கூடத் தெரியுமாக்கும் எனக்கு! இதோ இவள்தான் மிஸ் உமா. விமான உபசாரிணி!'' என்றான்.

''அது சரி, விமானமோட்டியின் பெயர் என்னவோ?'' என்று கேட்டாள் சந்திரா.

''வந்து, வந்து... என்னவோ சொன்னானே?'' என்று விழித்தான் ரங்கசாமி!






உமாவின் பாட்டி செயலற்றவளாய்த் திக்பிரமையுடன் ஒரு புறம் நின்று கொண்டிருந்தாள். தன் பேத்திக்கு இத்தனை வயதாகியும் இன்னும் கல்யாணமாகவில்லை; கால் வேறு நொண்டியாகி விட்டால் என்ன செய்வது என்ற கவலை அவளுடைய மூச்சை முட்டியது.



அவர்கள் எல்லோரும் பலவாறாக யோசனை செய்து கொண்டிருந்த போது, தர்பாரை நோக்கி வரும் நாரத மகரிஷி போல், ஜகந்நாதன் குறும்புச் சிரிப்புடன் திரும்பி வந்து, ''என்ன, வசந்தி! இங்கே மகாநாடு கூடிப் பேசி விட்டீர்களா? கடைசியில் என்ன தீர்மானம் நிறைவேற்றினீர்கள்?'' என்று வினயமாகக் கேட்டார்.

''அக்காவை இந்த நிமிஷமே வேறு ஒரு டாக்டரிடம் கொண்டு போய்க் காட்டலாம் என்று தீர்மானித்திருக்கிறோம்!'' என்றாள் வசந்தி நறுக்கென்று 'குட்டுவது' போல்!

''அது எப்படி முடியும்? உமா கட்டிலை விட்டு நகரக் கூட முடியாது என்கிறாள். அவளை எப்படி இங்கிருந்து கொண்டு போவீர்கள்?''

''கட்டிலோடு தூக்கிக் கொண்டு போவோம்! உங்கள் கட்டிலுக்கு இரட்டிப்பு விலை வேண்டுமானாலும் கொடுத்து விடுகிறோம்!''

''அதை நான் அனுமதிக்க மாட்டேன்! என்னுடைய நர்ஸிங்ஹோமில் என் அனுமதியில்லாமல் என் நோயாளியை வெளியே கொண்டு போக முடியாது! வேறொரு டாக்டர் உள்ளே நுழையவும் முடியாது!'' என்று ஆணித்தரமாகச் சொல்லி விட்டு டாக்டர் ஜகந்நாதன் வெகு வேகமாக வெளியேறித் தமது புத்தக அறைக்குச் சென்று வெகு அமைதியாக ஏதோ ஒரு நாவல் எழுத உட்கார்ந்து விட்டார்.

பிச்சுமணி ஆத்திரத்தோடு அவர் முன் வந்து நின்று, ''டாக்டர்! மிஸ் உமாவை இங்கிருந்து வெளியே அனுப்ப ஏன் மறுக்கிறீர்?'' என்று அவரை அறையாத குறையாய் அழாத குரலில் கேட்டான்.

ஜகந்நாதன் வெகு அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே, ''தம்பி! பொதுவாக என்னைப் போன்ற டாக்டர்கள் தங்கள் நோயாளிகளை வெளியே அனுப்ப மறுப்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம்!'' என்றார்.

''என்ன காரணங்கள்?'' என்று பிச்சுமணி சீறினான்.

''நோயாளியைத் தன்னிடமே அதிக காலம் வைத்துக் கொண்டால் அதிகம் பீஸ் கறக்கலாம் என்று எண்ணலாம்! ரூம் வாடகைக்கு வேறொரு நோயாளியைத் தேடிப் பிடிக்க வேண்டிய அவசியம் இல்லை என்றும் அவர் கருதலாம்!'' என்றார் ஜகந்நாதன்.

''சை!'' என்று முணகினான் பிச்சுமணி. கூலிப் பணத்துக்காக நோயாளியின் வியாதியை வளர்க்க நினைக்கிற வைத்தியன் பிணம் தின்னி வௌவாலைவிட மகாமோசம் என்று கத்த வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

ஜகந்நாதன் மேலும் விடாமல் விஷமப் புன்முறுவலுடன் பொறுமையை உணர்த்தும் விதமாகப் பிச்சுமணியைக் குறுகுறுவெனப் பார்த்துக் கொண்டே, ''தம்பி! பணத்தாசை இல்லாத டாக்டர் என்று வைத்துக் கொள்ளுவோம். அவருக்குப் பெண்ணாசை இருக்கலாம்! அவரிடம் சிக்கிய நோயாளி அழகான இளம் பெண்ணாக இருந்து அவள் மீது டாக்டர் அளவில்லாத காதல் கொள்கிறார். டாக்டர் எத்தனையோ விதமான பெண்களைப் பார்த்தவர் என்றாலும் மாபெரும் அறிஞர் என்றாலும், அமைதியே உருவான அந்தப் பெண்ணொருத்தியிடம் மட்டும் ஏனோ தம் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டுத் தவிக்கிறார். ஆனால் அந்தப் பெண்ணோ தம்முடைய காதலை ஏற்றுக் கொள்ளாமல், தம்மை விட, வயதில் குறைந்தவனை ஒரு பையனின் காதலை ஏற்றுக் கொண்டு விடு




# மல்லிகை

அரு. ராமநாதன்

வாளோ என்று டாக்டர் பொறாமைப் படுகிறார்! அப்போது அவர் என்ன செய்வார்? நோயைச் சீக்கிரம் குணப் படுத்தி விட்டால் அந்தப் பெண் அவர் கையை விட்டுச் சீக்கிரம் பறந்து போய் விடுவாள்! அதற்கு மாறாக அந்தப் பெண்ணைத் தீராத நோயாளியாக—காலோ கையோ ஊனமாகி எந்த நேர மும் டாக்டரின் உதவியையும்? பணி விடைகளையும் எதிர்பார்க்க வேண்டிய நிலையில் வைத்திருந்தால், தன்னை வேறு எந்த ஆடவனுமே மணந்து கொள்ள மாட்டான் என்ற எண்ணத் தில் அந்தப் பெண் மனமுருகி, டாக் டரையே காதலித்துக் கலியாணம் செய்து கொள்வாள், இல்லையா, தம்பி?'' என்று வெகு சாதாரணமாகக் கேட்டார்.

''அப்படிப்பட்ட நீசத்தனமான எண்ணமுள்ள அரக்கனை எந்தப் பெண் ணும் எப்படிப்பட்ட நிலையிலும் ஏற் றுக் கொள்ள மாட்டாள்!''

''அப்படிச் சொல்லாதே, தம்பி! அருவருக்கத் தக்க அரக்கனே ஆனா லும் அவனிடம் அறிந்தோ அறியா மலோ ஒரு முறை தன் கற்பை எப் படியோ பறி கொடுத்துவிட்டால் அதன் பிறகு அந்த அரக்கனையே தன் பிராணப் பதியெனப் போற்றி வணங் கும் பதிவிரதாசிரோமணிகள் நம் கதை களில் மட்டுமல்ல, நிஜ வாழ்க்கையிலும் பலர் உண்டு!''

அந்த வாசகம் காதில் விழுந்ததும் பிச்சமணியின் முகம் ஒரு கணம் சவம் போல் வெளுத்தது. அடுத்த கணம் நரகத் தீ போல் அவன் கண்களில் கோபாக்கினி வீசியது.

''தம்பி! தனிப்பட்ட முறையில் ஆத்திரப் படாதே! பொதுப்படை யான சில காரணங்களைத்தான் சொன் னேன்!'' என்றார் ஜகந்நாதன்.

''உம்மிடம் பொதுப்படையான விஷயங்களை விவாதித்து என் அறிவை வளர்த்துக் கொள்வதற்காக நான் இங்கு வரவில்லை!'' என்று முழங்கிய பிச்சமணி தீர்மானமான குரலில், ''டாக் டர்! நாங்கள் மிஸ் உமாவை இங் கிருந்து கொண்டு போய் வேறொரு ஸ்பெஷலிஸ்ட் மூலம் எப்படியும் காலைக் குணப்படுத்தி விடுவதென முடிவு செய்திருக்கிறோம்!'' என்றான்.

''தம்பி! என்னால் குணப்படுத்த முடியாத 'பேஷண்டை' (நோயாளியை) இன்னொரு டாக்டர் குணப்படுத்த முடியும் என்றால் அந்த அவமானத்தை

என்னால் தாங்கவே முடியாது! அப்படி எனக்கு அவமானம் விளைவிக்கும் விதமாக என் பேஷண்ட் ஒருத்தி என் நர்ஸிங் ஹோமிலிருந்து வெளியே போவதைவிட அவள் இங்கேயே செத்து விடுவது மேல் என்று நினைப்பேன்'' என்றார்.

''ஓஹோ! உம்முடைய பெருமைக்காக நீர் கொலை செய்யவும் தயங்க மாட்டீரோ?''

''தம்பி! அதற்காக நான் கொலையாளியாக மாற வேண்டிய அவசியமில்லை! தூக்க மாத்திரைகளை நோயாளி அதிகமாகச் சாப்பிட்டு அதன் விளைவாக இறந்து போனால் அது தற்கொலை என்று ஆகி விடும்!''

''இதை முன்கூட்டியே போலீசுக்குத் தெரிவித்தால் நீர் என்ன செய்வீர்?''

''அப்போது வெறும் தமாஷ் பேச்சு என்று கதை மாறி விடும், தம்பி!''

'இப்படிப்பட்ட கொடூரமான வில்லனும் இந்த உலகத்தில் இருப்பானா?' என்று நினைத்துக் குமுறிய பிச்சுமணி தன் ஆத்திரத்தை யெல்லாம் பற்களால் கடித்து ஒருவாறு அடக்கிக் கொண்டு, ''நீர் நாவல் எழுதுகிற மாதிரிக் கதை பேசாமல், சுற்றி வளைக்காமல், நேரிடையாகவே தெளிவாகச் சொல்லி விடும்! மிஸ் உமா விஷயத்தில் உமது திட்டமென்ன?'' என்று கேட்டான்.

''தம்பி! உனக்குச் சொந்த மூளையிருந்தால் நீயே யூகித்துப் பார்! இல்லையெனில் பி. ஏ. படித்த வசந்தியின் மூளையையும் துணை சேர்த்துக்கொண்டு இருவருமாக யூகித்துப் பாருங்கள்! அப்படியும் உங்களுக்குப் புரியவில்லை என்றால் ஆண்டவன் விட்ட விதி என்று பேசாமல் இருங்கள்!'' என்றார் ஜகந்நாதன் ஏதோ ஓர் அர்த்தபுஷ்டியோடு.

பிச்சுமணி அதிஉக்கிரமாக அவரை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு சூறாவளி போல் அந்த அறையிலிருந்து வெளிக் கிளம்பி வசந்தியைத் தேடிப் பாய்ந்து ஓடினான்.

## அத்தியாயம் இருபத்தேழு

# புதிய பயம்

**டா**க்டர் ஜகந்நாதனைத் தேடிக் கொண்டு வசந்தி வெகு வேகமாக வந்து அவருடைய புத்தக அறைக்குள் நுழைந்து, ''டாக்டர்! நீங்கள் பிச்சுமணியை ரொம்பப் பயமுறுத்தி விட்டீர்கள், டாக்டர்! உங்களால் ஒரு நோயாளியைக் குணப்படுத்த முடியவில்லை என்றால் அந்த நோயாளி இன்னொரு டாக்டரிடம் போவதைவிட உங்கள் நர்ஸிங்ஹோமில் மாண்டுவிடுவது மேல் என்று சொன்னீர்களாமே!'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''பிச்சுமணியிடம் மட்டுமென்ன, உன் அக்காவிடம் கூடத்தான் அப்படிச் சொன்னேன்!''

''அக்காவைக் கூடப் பயமுறுத்தப் பார்க்கிறீர்களா, டாக்டர்?''

''ஆமாம்! இன்சொற்களைவிடப் பயமுறுத்தல்கள்தான் சில சமயங்களில் அதியற்புதமான காரியங்களை யெல்லாம் சாதிக்கும்!''

''டாக்டர்! நீங்கள் நோயாளிகளை வைத்துக் கொண்டு ஹாஸ்யம் செய்கிறீர்கள்!''

''இது தமாஷ் அல்ல, வசந்தி! ஸீரியஸான விஷயம்தான்!'' என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்ன டாக்டர் ஜகந்நாதன், ''நான் இதற்கு முன்னால் ஒரு நோயாளியைக் கொன்றிருக்கிறேன்!'' என்றார் வெகு அமைதியாக.

''என்ன? நீங்கள் ஒரு நோயாளியைக் கொன்றிருக்கிறீர்களா?'' என்று வசந்தி பரபரப்போடு கேட்டாள்.

''ஆமாம்! எவ்வளவு விலையுயர்ந்த ரேஸ் குதிரையாக இருந்தாலும் அது பந்தய மைதானத்தில் ஓடும்போது திடீரென்று அதன் கால் ஒடிந்து விட்டால் அது அதிகமாக அவஸ்தைப்படக் கூடாது என்பதற்காக உடனே அதைத் துப்பாக்கியால் சுட்டுத் தள்ளி விடுகிறார்கள் அல்லவா? அது போலவே ஒரு நோயாளியின் விஷயத்தில் நான் கையாள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அவள் அழகான ஓர் இளம் பெண்! தீராத நோயால் அவஸ்தைப்பட்டு எந்த நிமிஷமும் பலவீனமாக இருதயம் நின்று விடும்படியான மரணபத்தான நிலையில் என் நர்ஸிங் ஹோமுக்கு வந்து சேர்ந்தாள். வலி தாங்க முடியாமல் ஒவ்வொரு விநாடியும் நரக வேதனையோடு துடித்தாள். அவள் அப்படி வேதனைப்படுவதை விடச் சீக்கிரமே இறந்து விடுவது மேல் என்று அவள் உட்பட எல்லாருமே நினைத்தார்கள். நான் அவளுக்கு எவ்வளவோ மருந்து மாயங்கள் கொடுத்தும் அவ

ளுடைய வலி வேதனையைச் சிறிது கூடக் குறைக்க முடிய வில்லை. இந்த நிலையில் அவளை வேறொரு டாக்டரிடம் கொண்டு போக முயற்சி செய்தார்கள். இனி எவ்வளவு பெரிய டாக்டர்களானாலும் அவளுடைய ஆயுளை வேண்டுமானால் இரண்டொரு மாதங்களுக்குப் பிடித்து வைக்கவோ, அவளுடைய ஏழைத் தங்கையிடமிருந்து அதிகமாகப் பீஸ் பிடுங்கி வாட்டவோ முடியுமே தவிர, அவளுடைய நோயையோ, வலி வேதனைகளையோ ஒரு துளியளவுகூடக் குறைக்க முடியாது. இது எனக்கு மட்டுமல்ல, எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். நான் யோசித்தேன். ஜீவஹிம்சையை நீடிக்கச் செய்வதைவிட அந்த ஹிம்சையிலிருந்தே ஜீவனை விடுதலை செய்து விடுவது மேல் அல்லவா......?''

''அதற்காக அவளை நீங்கள் கொன்று விட்டீர்களா, டாக்டர்? எப்படிக் கொன்றீர்கள்? ஆபரேஷன் கத்தியாலா? விஷ மருந்தாலா? அதிகமான தூக்க மாத்திரைகளாலா?''

''அத்தகைய கொலைக் கருவிகள் எதுவும் அப்போது எனக்குத் தேவைப் படவில்லை. வெறும் வார்த்தைகளைத் தான் கொலைக் கருவியாக உபயோகப்படுத்தினேன்! அப்போது என்னைக் கொலைகாரனென்று சட்டப்படியோ தர்மப்படியோ குற்றம் சுமத்த முடியாது அல்லவா?''

''அப்படி என்ன வார்த்தையைக் கொலைக் கருவியாக அந்தப் பெண்ணிடம் உபயோகப் படுத்தினீர்கள், டாக்டர்?''

''அவளுடைய காதலனும் கணவனும் ஏககாலத்தில் இரு துப்பாக்கிகளுடன் வந்திருப்பதாக மெல்ல ஒரு வார்த்தை சொன்னேன். அவ்வளவு தான்! அந்த ஒரு வார்த்தையே அவளுடைய இருதயத்தைக் குத்தி மூச்சைப் பிடித்து நிறுத்தி விட்டது!''

''என்ன ஜீவகாருண்யம்! அக்கிரமம்! அக்கிரமம்! குதிரைகளுக்கும் மனித ஜாதிக்கும் வித்தியாசம் இல்லையா?'' என்று வசந்தி படபடத்தாள்.

''ஆண்டவன் படைப்பில் எல்லா ஜீவராசிகளும் சமம் என்கிற தத்துவத்தை இதில் மட்டும் ஒப்புக் கொள்ள ஏன் மறுக்கிறாய், வசந்தி?'' என்றார் ஜகந்நாதன் அலட்சியமாக.

அவரை வசந்தி கூர்ந்து பார்த்தாள்.

''என்ன யோசிக்கிறாய், வசந்தி? நான் நல்லவனா, கெட்டவனா என்பதை உன்னால் தீர்மானிக்க முடியவில்லை; இல்லையா? அதுதான் என் காரிய சாதனைக்குரிய வெற்றி வழி!''




**நிருபர் :** நீங்கள் மஞ்சள் பூசிக் குளிக்கிறீர்களா? அல்லது சோப்பா...?

**நடிகை :** 'அவர்' அரைத்துக் கொடுக்கும் நாட்களில் மஞ்சள் பூசிக் குளிப்பேன்! மற்ற நாட்களில் சோப்புதான்!

---

''உங்களைக் கெட்டவனென்று நீங்களே சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறீர்களா? வேடிக்கைதான்!''

''வசந்தி! இந்தக் காலத்தில் நல்லவன் என்று தன்னைக் காட்டிக் கொள்வதை விடக் கெட்டவன் என்று பலரும் குழம்பும்படி இருப்பதுதான் மிகவும் சௌகரியமானது! ஏனெனில், நல்லவன் எதற்கும் நல்லதுதான் செய்வான் என்று நினைத்துக் கொண்டு எதிராளிகள் மட்டுமல்ல, அதிமுட்டாள்கள் கூட என்னை ஏமாற்றத் துணிவார்கள்! நான் கெட்டவன் என்று தெரிந்தாலோ எதிரிகள் எச்சரிக்கையுடன் எளிதில் விலகி விடுவார்கள்! என் விவகாரத்தில் தலையிட எவரும் பயந்து ஒதுங்குவார்கள்! அநாவசியமான பேர் வழிகள் உதவி ஒத்தாசை என்று என் அருகில் நெருங்க மாட்டார்கள்! பிறரிடம் எனக்கு ஏதாவது அவசியப்பட்டு நானாகவே நெருங்கினாலோ என்னைத் தாஜா செய்ய வேண்டும் என்பதற்காக வேனும் எனக்கு வேண்டியதைச் செய்து தொலைப்பார்கள்! பிறர் பரிதாபப்படும்படியாகவோ பரிகசிக்கும்படியாகவோ இருப்பதைவிட, பிறர்




உங்கள்
இருமல்
விரைவில்
அகலும்

தொண்டை
மற்றும்
மார்பு உபாதை
களுக்கு உகந்த

# பெப்ஸ்

**வில்லைகளை உட்கொள்ளுங்கள்.**

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணம ளிக்கும் ஆவிபோன்ற அதன் சத்து வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவுவதுமான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி இதமளிக்கிறது பெப்ஸ்.

கெடுதி விளைவிக்கும்
மருந்துகள் எதுவும்
இதில் கிடையாது.

குழந்தைகளுக்கும்
பயமின்றி
அளிக்கலாம்.

ப்ராங்கைடிஸ்
தொண்டைப் புண்,
மண்டைநீர், அடைப்பு
ஜலதோஷம் மற்றும்
இருமலுக்கு உடனடி
இதமளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. ஃபுல்ஃபோர்ட் (இந்தியா) பிரை. லிட்.

சென்னை ராஜ்யத்திற்கு பூரண வினியோகஸ்தர்கள் :
மெஸர்ஸ் மோதி & கம்பெனி, சென்னை - 1

---

## தோல்நல பாதுகாப்பிற்கு

# விக்கோ அற்கஜா




குளிப்பதற்கு 15 நிமிடங்களுக்கு முன் தேகத்தில் தேய்ப்பதற்கான ஓர் ஆயுர்வேத எண்ணெய். இதைத் தவறாது உபயோகித்தால் அது உங்கள் கவர்ச்சியை மிகைப்படுத்தி, உங்களைத் தோல் வியாதிகளிலிருந்து பாதுகாக்கிறது.



*Vicco*
**LABORATORIES**
**BOMBAY 14**

TAMIL

**விக்கோ லாபரடரிஸ், பம்பாய்-14**

ஸ்டாக்கிஸ்டுகள் :

சென்னை : ஆர். எல். கவுடர் & கோ.
59, பந்தர் தெரு — சென்னை-1

கோயமுத்தூர்: N. தேசாய் கவுண்டர்&கோ.
அவிநாசி ரோடு — கோயமுத்தூர்

பெங்களூர்: கே. எல். கவுடர் & கோ
கபேதார் சத்திரம் தெரு. பெங்களூர்



தான் என்பது வரலாறு. கில்ஜியின் அடுத்த தாக்குதலில் கோட்டை தகர்ந்து விடுகிறது. ராஜபுத்திரர்களெல்லாம் போரிட்டுப் போர்க்களத்தில் மடிந்து விடுகின்றனர். ராணி பத்மினியும் மற்ற ராஜபுத்திரப் பெண்மணிகளும் தீக்குளித்து வீர மரணம் எய்து தங்கள் மானத்தையும் புகழையும் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றனர்.

பின்னர் அலாவுத்தீனுடைய பிரதிநிதியைத் தோல்வியுறச் செய்து ராணா அமீர் என்பவன் சித்தூர் கோட்டையைக் கைப்பற்றுகிறான். இவன் வழி வந்த ராணா கும்பாவின் காலத்தில்தான் சித்தூர் பழையபடியும் பெருமை அடைகிறது. அவன் கோட்டையைப் பலப்படுத்தினான். பல கட்டிடங்களைக் கட்டினான். மால்வா, குஜராத் முதலியஇடங்களிலிருந்து ஆண்ட முகம்மதிய மன்னர்களையெல்லாம் வென்றான். அந்த வெற்றியின் சின்னமாகவே ஜயஸ்தம்பம் ஒன்றையும் கட்டி வைத்தான். அந்த ராணா கும்பா சகல கலா வல்லவன். கவிதையும் கலையும் இவன் காலத்தில் ஆக்கம் பெற்றன. இவனே ஜய தேவரது கீத கோவிந்தத்தை மொழிபெயர்த்திருக்கிறான்.

இவன் பின் வந்த வீர ராஜபுத்திர மன்னனே மகா ராணா சங்கராம் சிங். இவனே சுருக்கமாக ராணா சங்கா என்று அழைக்கப்பட்டான். இவன் காலத்தில்தான் மேவார் ராஜ்யம் பெரும் புகழ் எய்தியது. பதினெட்டுப் போர்க் களங்களில் வெற்றி கண்ட வீரன் இவன். இந்த வீரனுமே 1527ல் மொகலாய மன்னன் பாபரால் முறியடிக்கப்படுகிறான். அதனால் மனம் உடைந்து சாகிறான். இன்னும் சில வருஷங்களில் இங்கிருந்து ஆண்ட விக்கிரமாதித்தன் என்பவனும் குஜராத் சுல்தான் பஹதூர் ஷாவினால் முறியடிக்கப்படுகிறான். இந்தப் படையெடுப்பில் ராஜபுத்திரப் படைகளை மன்னனது தாயாரான ஜவஹிர் பாய் என்பவளே முன்னின்று நடத்தியிருக்கிறாள். இந்தப் போர் முடியு முன்னமேயே ராணா சங்காவின் மனைவியான ராணி கர்ணவதியும் மற்றவர்களும் தீக்குளித்து ஜௌஹர் நடத்தி விடுகின்றனர். ஆம். ராஜபுத்திரப் பெண்மணிகள் தீக்குளிப்பதையே 'ஜௌஹர்' என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன.

மொகலாய மன்னர் அக்பர் காலத்தில்தான் 1567-ல் சித்தூர்க் கோட்டை கடைசியாக முற்றுகை இடப்படுகிறது. இப்போரில்தான் ராஜபுத்திர மன்னர்களான ஜெய்மலும், பத்தாவும் வீர மரணம் எய்துகின்றனர். பெண்மணிகளும் ஜௌஹர் நடத்தி விடுகின்றனர். ஜெய்மல், பத்தா என்னும் இரண்டு வீரர்களின் வீரத்தை மெச்சி அவர்களது வடிவைச் சிலையாக வடித்து ஆக்ராவிலே தம்முடைய கோட்டை வாயிலில் யானைகளின் மேல் ஏற்றி வைத்து அக்பர் கௌரவித்திருக்கிறார்.

இக் கோட்டைக்குள் நாம் காண வேண்டிய நினைவுச் சின்னங்கள் இரண்டு. ஒன்று கீர்த்தி ஸ்தம்பம், மற்றொன்று ஜயஸ்தம்பம். இவ்விரண்டில் காலத்தால் முந்தியது கீர்த்தி ஸ்தம்பமே. அது கோட்டையின் கீழ மதில்சுவர் பக்கம் இருக்கிறது. இந்த ஸ்தம்பம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஜீஜா என்னும் சமண வர்த்தகர் ஒருவரால் கட்டப்பட்டிருக்கிறது. அடித்தளத்தில் முப்பது அடி குறுக்களவு உள்ளதாகவும் எழுபத்தைந்து அடி உயரமுள்ளதாகவும் இருக்கிறது.

ராணா கும்பாவின் அரண்மனை இடிந்து கிடக்கிறது. அது ராஜபுத்திரர் கட்டிடக் கலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ராணி பத்மினியின் அரண்மனை மிகப் பெரிய கட்டிடம். ஒரு குளக் கரையில் இருக்கிறது. இன்னும் ஆதியில் சூரியனார் கோயிலாக இருந்து இன்று கால்கா மாதா — காளி கோயிலாக மாறியிருக்கும் கோயில் ஒன்றும் உண்டு. இதுவும் பழைய கோயில்தான். எட்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும். இக் கோயில் இன்று இடிந்து கிடந்தாலும் அங்குள்ள பிரதட்சிணைப் பாதையிலும் மண்டபத்திலும் உள்ள சிற்ப வடிவங்கள் அழியாப் புகழுடையனவாக இருக்கின்றன. ஜயஸ்தம்பம் பக்கத்தில் கும்பஸ்யாம் என்று ஒரு கோயில் இருக்கிறது. அங்குள்ள மூலமூர்த்தி வராகர். இதனை ராணா கும்பா 1448ல் கட்டியிருக்கிறார். இந்தக் கோயில் வாயிலில் ஒரு பெரிய கருடனது சிலை வேறே இருக்கிறது. இக் கோயிலின் பக்கத்திலேதான் மீராபாய் வணங்கிய கண்ணன் கோயில் இருக்கிறது. உயர்ந்த சிகரத்தோடு கூடிய பெரிய கோயில் அது. அங்கு ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அதைத் தாங்கி நிற்கும் தூண்கள் எல்லாம் சிறந்த வேலைப்பாடு உடையவை. கருவறையைச் சுற்றி ஒரு பிரதட்சிணை பாதை. இக் கோயிலின் பக்கத்திலேயே மீராவின் சரீரத்தோடு ஒட்டிய வேறு ஒரு சிறிய கோயிலும் இருக்கிறது.

ஏகாங் கதை

# நர்மதா தேவி

ஸோமாஸ்



நன்றாய் அலங்கரிக்கப்பட்டிருந்த அந்த அறையில் அதியற்புதமான சோபா ஒன்று போடப்பட்டிருந்தது. பெரிய மின்விசிறி வேகமாகச் சுழன்று கொண்டிருந்தது. பெரிய ஜன்னல்களாக நான்கு ஜன்னல்கள். அவற்றைச் சொகுசாக மறைத்துக் கொண்டு மெல்லிய பட்டுத் திரைகள் நிலா வர்ணத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. மின்விசிறியின் அலைக் காற்றில் அத்திரைகள் அலைப்புண்டு ஆடி அசைந்து மடங்கும் அழகைப் பார்த்தால் நான்கு அப்ஸரஸ் பெண்மணிகள், தங்கள் மென்மையான தேகங்களை வளைத்து நடன அபிநயம் பிடிப்பதுபோல் இருந்தது. அறை ஓரமாக ஓர் அழகிய மேஜையின் மேல் கண்ணாடி பதித்த வேலைப்பாடுகள் அமைந்த ஒரு வெள்ளி விமானம் காணப்பட்டது. அதனுள் தந்தத்திலான குழந்தை வேலன் பதுமை அழகை யெல்லாம் அள்ளிச் சொரிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். உயர்ந்த ஊதுவத்தியின் நறுமணம் அறை முழுதும் கமழ்ந்து கொண்டிருந்தது.

தந்தப் பதுமை போல் நர்மதா கட்டிலில் மிகவும் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டிருந்தாள். அடர்ந்து வளர்ந்திருந்த அவளது கூந்தல் மின் விசிறியின் சுழல் காற்றில் அசைந்து, நெளிந்து தலையணை முழுதும் பரவிச் செங்கமலத்தை யொத்த அவளது எழில் வதனத்துக்குப் பொருத்தமான பின்னணியாகத் திகழ்ந்தது.

அவளது பொன்னுடலோடு ஒட்டி உறவாடிக்கொண்டிருந்த வெண்ணிற நைலான் புடவை விசிறிக் காற்றில் பாற்கடல் போல் அலைஅலையாகப் பொங்கிப் பெருமிதம் அடைந்த வண்ணம் இருந்தது. புடவையின் நிறத்தை எடுத்துக்காட்ட உதவியாயிருந்த நீ வண்ணச் சோளி அவளது எடுப்பான வனப்பையும் எடுத்துக் காட்டத் தவறவில்லை.

அந்த அறை முழுதும் சௌந்தர்யத்தைப் பரப்பிய வண்ணம் கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்த நர்மதாவின் முகம் மேக்கப் இல்லாமலே அழகாயிருந்தது. அவள் கையில் ஒரு விஸிட்டிங் கார்டு இருந்தது. அதை அவள் திகைப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளையும் அறியாமல் நித்திராதேவி தன்வசப்படுத்திக் கொண்டாள். வன தேவதையின் வனப்புடன் நர்மதா கண்ணயர்ந்தாள்.

சினிமாவே பார்த்திராத பெரியவர்களுக்குக் கூடச் சினிமா நட்சத்திரம் நர்மதாவைத் தெரிந்திருந்தது. சினிமா உலகில் காலடி எடுத்து வைத்த சில ஆண்டுகளுக்குள்ளாகவே நர்மதா நட்சத்திர அந்தஸ்தைப் பெற்று விட்டாள். புடவைகளில் 'நர்மதா பார்டர்' வளையல்களில் 'நர்மதா வளையல்', சோளிகளில், 'நர்மதா டிஸைன்', இன்னும், 'நர்மதா கூந்தல் வளரும் தைலம்', 'நர்மதா பற்பசை', 'நர்மதா பாக்குத் தூள்' என்று நர்மதாவின் புகழ் பலவிதமாகப் பரவிக் கொண்டே யிருந்தது.



அவள் நடித்த பத்துப் படங்களும் அவளைப் புகழ் ஏணியில் ஏற்றி விட்டன. மற்ற எந்த நடிகைக்கும் இல்லாத வாய்ப்பு நர்மதாவுக்கு இருந்தது. அதுதான் சொந்தக் குரலில் பாடும் திறமை. கர்ணாம்ருதமான குரலில் அவள் பாடிய பாடல்களின் ரிக்கார்டுகளே ஏராளமாக விற்றன. இந்தச் சிறப்பு அம்சங்கள் காரணமாகத்தான் படாதிபதிகள் அவளைப் படத்துக்குப் 'புக்' பண்ண 'நீ முந்தி, நான் முந்தி' என்று போட்டி போட்டுக் கொண்டு அவள் பங்களாவுக்கு ஓடோடியும் வந்தனர்.

நர்மதாவின் அழகு வெறும் மேக்கப்பினால் ஏற்படும் பொய் அழகல்ல; அவளது கரிய பெரிய விழிகள் நவரஸ பாவங்களையும் நவினமாக எடுத்துரைக்கும் ஆற்றல் பெற்றிருந்தன. அடர்ந்து வளர்ந்திருந்த அவளது அழகிய கூந்தல் எந்த விதப் பின்னல்களுக்கும் ஏற்றதாக இருந்தது. பொய்க் கூந்தலின் சாதனங்கள் எவையும் அவளுக்குத் தேவையில்லை. ஒரு புன்னகையில் புவனம் முழுவதையும் அடிமைப்படுத்த முடிந்தது. முத்துப் பல் வரிசை மோகனப் புன்னகைக்கு மேலும் கவர்ச்சியைத் தந்தது.

நர்மதா தேவியின் பங்களா காந்தி நகரில் இருந்தது. அதிகாலையிலிருந்தே சினிமாப் பித்தர்கள் அவள் வீட்டு வாசலில் கூட்டமாக நின்றுகொண்டு அவள் படப் பிடிப்பு முடிந்து வீட்டுக்கு வர மாட்டாளா என்றெல்லாம் வீணான ஆசைகளை வளர்த்துக் கொண்டு நேரம் போவது தெரியாமல் காத்துக் கிடந்தார்கள். எப்பொழுதாவது ஒரு சமயம் கப்பல் போன்ற பெரிய காரில் ஒய்யாரமாகச் சாய்ந்துகொண்டு நர்மதா படப் பிடிப்பு முடிந்து வீட்டுக்கு வருவாள். அவ்வளவுதான். கடவுளை நேரில் கண்டு விட்டவர்கள் மாதிரி ஒரே கோலாகல ஆரவாரம் எழும்பும் அவள் பங்களா வாசலில்.

பேரும் புகழும் பெற்றுப் பெரிய நட்சத்திரமாக விளங்கிய நர்மதாவுக்குத் துணையாக அவளுடைய சித்தப்பாவும், சித்தியும் இருந்தார்கள். சித்தி உள்துறையைக் கவனித்துக் கொண்டாள்; சித்தப்பா வெளி விவகாரங்களைக் கவனித்துக் கொண்டார். அந்தப் பெரிய பங்களா, நந்தவனம் கார் எல்லாம் அவருடைய மேற்பார்வையின் கீழ்தான் இருந்தன. ஒரு காலத்தில் நர்மதாவுக்கு நட்சத்திர ஸ்தானம் கிட்டியதும், சித்தப்பாவும், சித்தியும் ரத்தபாசத்தைக் காட்டிக் கனிவாகப் பேசி உறவு கொண்டாடிக் கொண்டு வந்து 'பிரிய மாட்டோம்' என்று சபதம் கூறி நிர்வாகங்களில் பங்கு கொண்டனர்.

இவ்வளவு பிரசித்தி பெற்ற சினிமா நட்சத்திரமாக இருந்தும் நர்மதா ரஸிகர்களைச் சந்திக்கவே விரும்புவதில்லை. அவளைப் பற்றிய உண்மையான விவரங்கள் எதுவுமே பத்திரிகைகள் எவற்றிலுமே வந்ததில்லை. அவளுக்குப் பிடித்த விளையாட்டு, அவளுக்குப் பிடித்த புஷ்பம், அவளுக்குப் பிடித்த கதாபாத்திரம், அவளுக்குப் பிடித்த 'ஸ்வீட்', அவளுக்குப் பிடித்த உடை, அவளுக்குப் பிடித்த காய்கறிகள், அவளுக்குப் பிடித்த பழங்கள் இவற்றையெல்லாம் பற்றிக் கேட்டுக் கட்டுக் கட்டாகத் தினந்தோறும் கடிதங்கள் வரும். அவற்றை நர்மதா பொருட் படுத்துவதில்லை. எல்லாம் குப்பைக் கூடைக்குப் போய்விடும்.

டெலிபோன் மூலம் நர்மதாவைப் பேட்டி காணச் சிலர் முயல்வார்கள்.

''ஹலோ! மிஸ் நர்மதாவின் பங்களாவா? நான் 'திரை விருந்து' பத்திரிகையின் ஆசிரியர் பேசுகிறேன். எங்கள் ரிப்போர்ட்டர் ஒரு வாரமாக நடிகையைக் காண அங்கு வந்து போய்க் கொண்டிருக்கிறார். ஏற்கனவே மலர் வேலை யெல்லாம் தொடங்கிப் பாதிக்கு மேல் முடிவடைந்து விட்டன. இந்தப் பேட்டி ஒன்றுதான் பாக்கி..... கொஞ்சம் உதவி செய்ய வேணும்.. .''

''ஹலோ! பேட்டி விஷயமெல்லாம் கவனிக்கிற அந்தரங்கக் காரியதரிசி இன்னும் வரவில்லை. நீங்கள் மத்தியானம் மூன்று மணி சுமாருக்குப் 'போன்' செய்யுங்கள்......'' என்று கூறிச் சிவசிதம்பரம் டெலிபோன் ரிசீவரை 'ணங்'கென்று கீழே வைத்து விடுவார். மூன்று மணிக்கு அந்த ஆசாமி 'போன்' செய்வதனால் ஒரு பயனும் இருக்கப் போவதில்லை என்பது அவருக்கு நன்றாய்த் தெரியும். அப்படி ஒரு காரியதரிசி இருந்தாலல்லவா அவர் பதில் சொல்லப் போகிறார்!

இந்தச் சால்ஜாப்புக்கெல்லாம் அலுத்துக் கொள்ளாமல் விடாப் பிடியாக ஒருவர் அந்தப் பங்களாவின் மீது நேரடியாகப் படையெடுத்தால், அப்பொழுது அவர் சொல்லும் பதில் இப்படித்தான் இருக்கும்.

அந்த விடாக்கண்டன் வெள்ளிக் கிழமையன்று பிற்பகல் மூன்று மணிக்கு நர்மதாவின் பங்களாவுக்கு வந்து விட்டால், ''அடடா! வாருங்கள். நர்மதா இப்பொழுதுதான் ஷூட்டிங்கு முடிந்து ஸ்டுடியோவிலிருந்து வந்து 'ரெஸ்ட்' எடுத்துக் கொண்டிருக்கிறாள். ஏழு மணிக்கு வாருங்கள். நான் முன்னாலேயே அவளிடம் சொல்லி வைத்து விடுகிறேன்...'' என்பார் சிவசிதம்பரம்.





அந்த ஆசாமி ஏழு மணிக்குச் சரியாய்ப் போய் நிற்பார்.

''அடாடா! இன்று இரவு கால்ஷீட் இருப்பது எனக்கு நினைவில்லை. நீங்கள் போன சற்று நேரத்துக்கெல்லாம் ஸ்டுடியோவிலிருந்து கார் வந்தது. ஓய்வெடுக்கக் கூட முடியாமல் குழந்தை உடனே ஸ்டுடியோவுக்கு ஓடிவிட்டாள். நீங்கள் அடுத்த வெள்ளிக்கிழமை கட்டாயம் வாருங்கள். எப்படியும் நர்மதாவைப் பார்க்கலாம்...ஆனால் முன்னதாக டெலிபோன் செய்துவிட்டு வாருங்கள்.''

மீண்டும், டெலிபோன் செய்து விட்டு வந்தால், மீண்டும் ஸ்டுடியோ, கால்ஷீட்டு இருக்கவே இருக்கின்றன. இப்படியேதான் சிவசிதம்பரம் எத்தனையோ பேர்களைச் சமாளித்துக்கொண்டு வந்தார்.

அன்று வந்த ஆசாமி சிவசிதம்பரத்தின் தந்திர மந்திரங்களுக்கெல்லாம் அசைந்து கொடுப்பவனாக இல்லை. கொஞ்சமும் அலுத்துக் கொள்ளாமல் சுமார் ஐம்பது தடவையாவது அந்தப் பங்களாவுக்கு வந்திருப்பான். தம்மால் ஆன மட்டும் சிவசிதம்பரம் அவனுக்குச் சால்ஜாப்புகள் சொல்லிப் பார்த்து விட்டார். அவன் விடுகிற வழியாயில்லை. நர்மதாதேவியைப் பேட்டி கண்டு தான் எழுதியுள்ள ஒரு நாவலுக்கு ஓர் அணிந்துரை எழுதி வாங்கிக் கொண்டு போயே தீருவேன் என்று அடம் பிடித்தான். தன் நாவலின் 'பைண்டு' செய்யப்படாத பிரதி ஒன்றையும் ஏற்கனவே கொடுத்து விட்டுப் போயிருந்தான்.

பார்ப்பதற்கும் அவன் மிகவும் அழகாயிருந்தான். அவனுக்கு வயது முப்பத்திரண்டு இருக்கும். கருகரு வென்று சுருண்டு வளர்ந்திருந்த கேசத்தை அழகாகப் படிய வாரிக் கொண்டு நவநாகரிகமாகத் தோற்றமளித்தான். எவ்வளவு வாரினாலும் சீப்புக்குப் படிய மறுத்த கேசம் சற்று நிமிர்ந்து சுருண்டு நெற்றியில் வந்து படிந்து அவன் அழகை மிகைப்படுத்திக் காட்டியது. சிவந்த நிறம். நல்ல உயரம். உயரத்துக்குத் தகுந்த பருமன். யாரையும் வசீகரிக்கும் புன்னகை சதா முகத்தில் தவழ்ந்தது. ஒரு நாளைக்கு ஓர் உடை; உடைக்கேற்ற நடை.

ஒரு நாள் டெரிலின் ஸ்லாக்கும் பளபளக்கும் கறுப்பு நிற 'ஷார்க் ஸ்கின்' பாண்டும் போட்டுக் கொண்டு வந்தால், இன்னொரு நாள் நீல நிற உல்லன் பாண்டும் ஸில்க் ஸ்லாக்கும் போட்டுக் கொண்டு வருவான். ஒரு நாள் ஸில்க் ஜிப்பாவும் ஜரிகை வேஷ்டியுமாக வருவான்.

காரில் ஷூட்டிங்குக்குப் புறப்படும்போது இரண்டு மூன்று தடவைகளாவது அவனைப் பார்த்திருப்பாள் நர்மதா. அந்த மனிதனின் வனப்பு அவளைக் கவர்ந்தாலும் நட்சத்திர அந்தஸ்தை நழுவ விட முடியாதல்லவா? அவனுடைய வணக்கத்தை நாசூக்காக ஏற்றுப் புன்னகையால் பதில் அளித்துக் கொண்டே காரில் நகர்ந்து விடுவாள்.



துயில் தெளிந்து எழுந்த நர்மதாதேவியின் முகத்தில் மட்டும் தெளிவுக்குப் பதிலாகக் குழப்பமே மிகுந்திருந்தது. அவள் சித்தப்பா சிவசிதம்பரம் மெதுவாக வந்து அவள் அருகே அமர்ந்தார்.

''சித்தப்பா! அவன் பெரிய வம்புக்காரனாயிருப்பான் போல் இருக்கிறது..... முரட்டுத்தனமாக என்னத்தையாவது அவனிடம் வாய் கொடுத்தால் விபரீதமாகப் போய் விடுமோ என்று பயமாயிருக்கிறது.....நான் ஒரு யோசனை செய்து வைத்திருக்கிறேன். இன்னொரு முறை அவன் வந்ததும் என்னிடம் அனுப்புங்கள்...... நான் அவனிடம் பேசிக் கொள்ளுகிறேன்...''

சிவசிதம்பரம் அதற்குச் சம்மதம் தெரிவிப்பவர் போல் ஆமோதித்து விட்டுத் தம் அறைக்குப் போனார். அங்கே 'ரிஸப்ஷன்' ஹாலில் அவன் அமர்ந்திருந்தான். சிவசிதம்பரத்தைக் கண்டதும் எழுந்து, ''வணக்கம், ஸார்!'' என்று கைகூப்பினான். சிவசிதம்பரம் தலையை அசைத்து விட்டு, தம்முடன் வரும்படி சைகை காட்டி விட்டு நர்மதாவின் அறையை நோக்கி நடந்தார். அவனும் தொடர்ந்தான்.

இப்பொழுது நர்மதா சோபாவில் உட்கார்ந்திருந்தாள்.

''வணக்கம்'' என்று கூறிக் கைகூப்பினான் அந்த மனிதன்.

''வணக்கம்......!''

''......நான் கொடுத்த நாவலைப் பார்த்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். ஏனென்றால் நான் அதை இங்கு சேர்த்துச் சுமார் இரண்டு மாதங்கள் ஆகின்றன. நானும் அதிலிருந்து விடாமல் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருக்கிறேன்.''

''......புஸ்தகத்தைப் படிக்க எனக்கு அவகாசம் இல்லை... நீங்களே ஏதாவது எழுதிக் கொண்டு வந்தால் நான் பார்த்துக் கொடுத்து விடுகிறேன்!''

''...... ஏற்கனவே என்னை உங்களுக்குத் தெரியும். இரண்டு வருஷங்களுக்கு முன்பே பல தடவை உங்கள் பங்களாவுக்கு வந்திருக்கிறேன்...... முதன் முதல் பிஸ்கத்துக் கம்பெனியொன்றின் பிரதிநிதியாக வந்து, ''நர்மதா தேவி பெரிதும் விரும்பும் பிஸ்கத்துகள்.....'' என்று போட்டு உங்கள் அபிப்பிராயத்தைக் கீழே நாலைந்து வரிகளில் எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கும்படி எவ்வளவோ முறை கெஞ்சிக் கேட்டும் நீங்கள் இசையவில்லை. அதற்குப் பிறகு சோப்புக் கம்பெனியின் பிரதிநிதியாக வந்து உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டுப் பல முறை உங்களுடைய பங்களாவுக்கு வந்து



# இதைப்போன்ற புள்ளிகளை நீங்கள் சுவர்களில் கவனித்ததுண்டா?



மிகவும் கவனமாக அவைகளைப் பாருங்கள்—அவைகள் மூட்டைப்பூச்சிகளின் அடையாளங்கள் அதாவது உறக்கமற்ற இரவுகளின் அறிகுறிகள். நீங்கள் அறிந்திருப்பதைக்காட்டிலும் மூட்டைப் பூச்சிகள் மிகமிக வேகமாகப் பெருகுகின்றன. அவைகளை அலட்சியப்படுத்தாதீர்கள். அவைகளை இப்பொழுதே 'டால்பை'க் கொண்டு அழித்தொழியுங்கள். கொஞ்சம் டால்பைத் தெளியுங்கள்.... நீங்கள் அறியுமுன்பே மூட்டைப் பூச்சிகள் செத்துப்போயிருக்கும்.

டால்பின் ஒரே ஒரு தெளிப்பு அல்லது அதன் ஸ்பரிசம் பட்டாலே போதும். டால்ப் மூட்டைப் பூச்சிகளை உடனடியாகக் கொல்வதுடன் நீடித்த வன்மையுடையது. எல்லாவற்றையும்விட டால்ப் மிகவும் சிக்கனமானது—ஒவ்வொரு பாட்டிலிலிருந்தும் இத்து முழு ஸ்ப்ரே டப்பிகளையோ அல்லது ஸ்பிரேட் டின்களையோ இதன் கரைசலால் நிரப்பலாம்




பாயர் (இந்தியா) லிமிடெட்

# டால்ப்

A Bayer PRODUCT




மூட்டைப்பூச்சிகளுக்கு சாவு மணியடிக்கிறது



அழைத்தும் நீங்கள் சம்மதிக்கவில்லை. இந்தத் தடவை யாவது...!''

''.....இப்பொழுது என்னத்துக்காகப் பழைய சமாசாரத்தை யெல்லாம் இழுக்கிறீர்கள்? நான்தான் இப்பொழுது கொடுக்கிறேன் என்று சொல்லி விட்டேனே......!'' என்று சொல்லி விட்டு ஆத்திரத்தை அடக்கிக் கொள்ளத் தன் உதட்டைக் கடித்துக் கொண்டாள் நர்மதா. அவள் முகம் சிவந்து விட்டது.

''நானே புத்தகத்தின் அணிந்துரையை எழுதித் தந்து விடுவது பற்றி ஆட்சேபணை யில்லை. ஆனால் அதை நீங்கள் கையினால் எழுதி உங்கள் கையெழுத்தையும் போட்டுத் தர வேண்டும்...அதை நாங்கள் அப்படியே 'பிளாக்' செய்து உங்கள் புகைப்படத்தின்கீழே பிரசுரிப்பதாகத் தீர்மானித்திருக்கிறோம்.''

இதை அவன் சொல்லி முடிக்குமுன்பே நர்மதா 'ஓ'வென்று கதறிக் கைகளினால் முகத்தைப் பொத்திக் கொண்டு தன் பூமேனி குலுங்கக் குலுங்க அழுதாள்.

உடனே அவன், ''நர்மதா தேவி, அழாதீர்கள்! உங்களுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பது எனக்கு நன்றாய்த் தெரியும்.... இதற்காக நீங்கள் இவ்வளவு தூரம் வருந்த வேண்டாம். நீங்கள் மட்டும் மனசு வைத்தால் வெகு சீக்கிரத்தில் தமிழ், ஆங்கிலம், ஹிந்தி எல்லாவற்றிலும் எழுதப் படிக்க வெகு சுலபமாகக் கற்றுக் கொள்ளலாம். உங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால், அந்த மூன்று பாஷைகளையும் சொல்லிக் கொடுக்கும் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்ளத் தயார். இதற்காக எனக்குச் சம்பளம் என்று நீங்கள் தர வேண்டாம். என் பெயர் அச்சிட்ட விஸிட்டிங் கார்டைக் கூடப் படிக்க முடியாமல் நீங்கள் இன்று காலையிலிருந்து தவித்த தவிப்பு எனக்கு நன்றாய்த் தெரியும். நான் நாளை மறு நாள் வருகிறேன். அதற்குள் உங்களுடைய நல்ல முடிவைத் தெரிவியுங்கள். தயவுசெய்து என்னைப் பற்றித் தவறாக எதுவும் நினைத்து வீணாக உங்கள் மனசைக் குழப்பிக் கொள்ளாதீர்கள் என்று உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். என் பெயர் மோகனசுந்தரம் எம். ஏ. உங்கள் சுயமரியாதைக்கு இழுக்கு நேரிடும் விதத்தில் நான் என்றுமே நடந்துகொள்ள மாட்டேன். இதை மட்டும் நீங்கள் உறுதியாக நம்புங்கள்!'' என்று கூறி விட்டுச் சினிமாவில் வரும் புரட்சிக் கதாநாயகன் மாதிரி ஒரு நொடியில் அந்தப் பங்களாவை விட்டு வெளியேறி மறைந்து விட்டான்.

நர்மதாவுக்கு இன்று நடந்ததெல்லாமே சினிமாக் காட்சிகள் மாதிரி இருந்தன. அவள் நடித்த எந்தப் படத்திலும் இத்தகைய திடுக்கிடும் சம்பவங்கள் வந்ததே யில்லை. இரண்டு நாட்களாக நர்மதா படப் பிடிப்புக்களில் கலந்து கொள்ளவே யில்லை.

இரண்டு நாட்களுக்குப் பிறகு மோகனசுந்தரம் நர்மதாவின் பங்களாவுக்கு வந்தான். நர்மதா மந்திரத்தால் கட்டுண்டவள் மாதிரி அவனிடம் எழுத்துப் பயிலலானாள்.

தினம் மாலை வேளையில் ஏழு மணிக்கு மோகன சுந்தரம் நர்மதாவின் பங்களாவுக்கு ஸ்கூட்டரில் வருவான். நர்மதா, ஆங்கில, தமிழ்ப் புத்தகங்களுடன் பாடம் படிக்கத் தயாராயிருப்பாள்.

மோகன சுந்தரம் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தால் இடையில் வேறு எந்தப் பேச்சும் பேச மாட்டான். அவளை அடிக்கடி உற்றுப் பார்க்கவும் மாட்டான். பாடம் முடிந்த மறுகணமே புறப்பட்டு விடுவான். எந்த ஆண்மகனும் அவளிடம் இத்தனை பராமுகமாயிருந்ததில்லை. உற்று உற்றுப் பார்த்து அசடு வழிவார்கள்.

அவன் தன்னுடன் பேச மாட்டானா என்ற ஆதங்கம் நர்மதாவை வாட்டி வதைத்தது. தானாகவே படப் பிடிப்புகளில் நடந்த அதிசய நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூற ஆரம்பிப்பாள். மோகனசுந்தரம் அவற்றைக் கேட்டு அதிக உற்சாகம் காட்டாமல் பாடத்தை ஆரம்பித்து விடுவான். அதைக் கண்டு நர்மதாவுக்கு வியப்பு ஒரு புறமும், கோபம் ஒரு புறமும் உண்டாகும்.

நர்மதாவின் திமுல் உருவத்தைக் கண்டே எத்தனையோ வாலிபர்கள் கருத்தழிந்து பைத்தியமாகி இருக்கின்றனர். ஆனால் மோகன சுந்தரம் அவர்களுக்கெல்லாம் முற்றிலும் விதிவிலக்காயிருந்தான்.

''நீங்கள் சினிமா பார்ப்பதுண்டா ?'' என்று நர்மதா அவனை ஒரு நாள் கேட்டாள்.

''இன்னும் எவ்வளவோ முக்கியமான காரியங்களுக்கே அவகாசம் போதாமல் இருக்கும் போது சினிமா எங்கே பார்க்க முடிகிறது?'' என்று சர்வ சாதாரணமாய்க் கேட்டு விட்டுப் பாடத்தை ஆரம்பித்து விட்டான் அவன்.

மாதங்கள் வேகமாக ஓடின. நர்மதாவின் படிப்பும் வெகு வேகமாக முன்னேறியது. தமிழ், ஆங்கிலம், ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளிலும் நல்ல அபிவிருத்தி ஏற்பட்டு விட்டது. அத்துடன் அவளையும் அறியாமல் மோகன சுந்தரத்தினிடம் அவள் மனம் ஈடுபட்டுக் கொண்டே வந்தது. காலையில் எழுந்ததும் அவன் எப்பொழுது வரப் போகிறான் என்று அவள் மனம் ஆவலோடு எதிர் பார்க்க ஆரம்பித்தது; ஆவல் ஏக்கமாயிற்று; ஏக்கம் காதலாக மாறி எதையும் செய்ய விடாமல் அவளைத் துளைத்தெடுத்தது. அவன் வரவை எதிர்பார்த்த அவள் மனம், அவன் பிரிவை ஏற்க மறுத்தது. தன் மனம் இவ்வளவு பலவீனமாகிப் போய் நெகிழ்ந்து விடுவதைத் தாங்கிக் கொள்ள அவளாலேயே முடியவில்லை.

இத்தனைக்கும் மோகனசுந்தரம் சிறிதும் தளராமல் இருந்தது அவளுக்கு மிகவும் ஆச்

சரியமாயிருந்தது. அவனாகத்தான் அவ னிடம் பேச்சுக் கொடுக்க வேண்டியிருந்தது.

''......உங்கள் மனைவி, குழந்தைகளெல்லாரும் சௌக்கியமா? இங்கே உங்களுடன் தானே எல்லாரும் இருக்கிறார்கள்?'' என்று நர்மதா ஒரு நாள் கேட்டாள்.

''இல்லை.... நான் விவாக பந்தத்திலேயே இன்னும் சிக்கிக் கொள்ளவில்லை. அம்மா இருக்கிறாள். என்னைப் பார்த்துக் கொள்ள. பூர்விகச் சொத்து இருக்கிறது எங்கள் இருவரையும் பார்த்துக் கொள்ள......'' என்று மோகன சுந்தரம் சுருக்கமாகப் பதில் அளித்தான்.

''......அம்மாவை எத்தனை நாளைக்குத் தொந்தரவு செய்ய முடியும்? பாவம், வயசாகி யிருக்குமே!'' என்று அநுதாபத்தோடு கேட்டாள் நர்மதா.

''அதற்குத்தான் வீட்டோடு ஒரு சமையற்கார அம்மாளைப் போட்டிருக்கிறேனே ! அம்மாளுக்கு வேலையே கொடுப்பதில்லை....'' என்றான் மோகனசுந்தரம்.

''நீங்கள் ஏன் விவாகம் செய்து கொள்ள வில்லை?'' என்று நர்மதா நேரடிக் கேள்வியாகக் கேட்டு விட்டாள்.

''இன்னும் வேளை வரவில்லை....!'' என்றான் மோகனசுந்தரம்.

''......வேளை எப்பொழுது வரும்?''என்று குழந்தை மாதிரி ஒரு கேள்வியைக் கேட்டாள் நர்மதா.

''அந்த வேளை வரும் போது நிச்சயம் உங்களிடம் சொல்கிறேன்..... சரி. நான் ஊருக்குப் போக வேண்டி யிருக்கிறது. பதினைந்து. இருபது நாட்களில் வந்து விடுவேன்....அதற்குள் இந்தப் புத்தகங்களைப் படியுங்கள்...'' என்று கூறி இரண்டு ஆங்கிலப் புத்தகங்களைக் கொடுத்தான்.

புத்தகங்களை வாங்கிக் கொண்ட நர்மதா, ''....டியூஷன் சொல்லிக் கொடுப்பதற்குத் தான் சம்பளம் வாங்கிக் கொள்ள மாட்டேன் என்கிறீர்கள். இப்பொழுது ஊருக்குப்போகச் செலவுக்கு இதை வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிக் கொண்டே தன்னுடைய ஜம்பப் பையிலிருந்து ஐந்து நூறு ரூபாய் நோட்டுக் களை எடுத்து அவன் கையில் கொடுக்கப் போனாள்.

பணத்தை வாங்கிக் கொள்ளாமலே, ''....உங்களிடமே இருக்கட்டும். பணம் தேவைப்படும்போது நான் வாங்கிக் கொள் கிறேன்.......'' என்று சொல்லி விட்டு மோகன சுந்தரம் கைகூப்பி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

அவன் போனதையே பார்த்துக் கொண்டிருந்த நர்மதா அவன் அமர்ந்திருந்த சோபாவைப் பார்த்தாள். அதில் ஒரு பெரிய டைரி—அழகிய பிளாஸ்டிக் ஜாக்கெட்டுடன்—இருந்தது. ஆவலோடு எடுத்துப் பார்த்தாள். ஆளை அனுப்பி மோகனசுந்தரத்தை வரவழைத்து டைரியைக் கொடுத்து விடலாமா என்று ஒரு கணம் யோசித்தாள். ஆனால் மறுகணமே தன் யோசனையை மாற்றிக் கொண்டு விட்டாள். அவனைப் பற்றிய விவரங்கள் இன்னும் தெரிந்து கொள்ளலாம் என்று தோன்றியது. 'என்னத்துக்காக அவனைப் பற்றிய விவரங்களை அவள் அறிய வேண்டும்?' இந்தக்



கேள்வி அவள் மனத்தில் எழுந்தது என்னவோ உண்மைதான். ஆனால் விடை அவளுக்கே தெரிய வில்லையே! 'பிறன் ஒருவன் டைரியைப் பார்ப்பது பெரிய தவறில்லையா ?' நர்மதாவுக்குத்தான் மோகனசுந்தரத்தை அயலானாகவே நினைக்க மனம் இடம்தரவில்லையே?

அடக்க முடியாத ஆவலோடு டைரியைப் பிரித்தாள் நர்மதா. மணி மணியான எழுத்துக்களில் நிறைய விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன.

''இன்று ஒரு நன்னாள். இன்றுதான் நான் திரிபுரத்தை முதன் முதலில் பார்த்தது. வறுமையில் பிறந்தும் வாளிப்பு கொஞ்சமும் குறைய வில்லை. செம்மண் பூமியில் செழித்து வளர்ந்திருக்கும் செவ்வாழை மரத்தைப் போல் என்ன செழிப்பு! நகரப் புறங்களில் இத்தனை அழகைக் காண முடியாது! நகை நட்டு எதுவும் இல்லாமலே எத்தனை பொலிவு! மான் போல் மருளும் பார்வை என்பது இவளுக்குத்தான் பொருந்தும். கனவுலகில் மட்டுமே காணக் கூடிய கனவுக் கன்னி அவள். காவியத்தில் களி நடம் புரிந்து கவினுறு கவிதையெனப் பொங்கிய காரிகையாம் சகுந்தலை அவள்.....''

நர்மதா தணியாத ஆவலுடன் கட்டிலிலே குப்புறப் படுத்து மெல்லிய வெல்வெட் தலையணையில் இரண்டு முழங்கைகளையும் ஊன்றிய வண்ணம் உள்ளங் கைகளால் தன் செங்கமல வதனத்தைத் தாங்கிக் கொண்டு டைரியைக் கவனமாகப் படிக்கலானாள்.




திரையுலகின் திலகமென விளங்கும் நர்மதா முதன் முதலில் சினிமாவில் எப்படி நுழைந்தாள் என்பது மிகவும் சுவை நிறைந்த வரலாறு.

நர்மதாவின் பூர்வாசிரமப் பெயர் திரிபுரம். திரிபுரசுந்தரி என்றுதான் பெற்றோர் பெயரிட்டிருப்பார்கள். ஆனால் வறுமையில் வாடும் ஏழை உபாத்தியாயர் பெண்ணுக்குச் சௌந்தரியம் இருந்தால் அது எடுபடுமா? ஆகையினாலேதான் அதை நீக்கி விட்டுத் திரிபுரம் என்று மட்டும் அமைத்தார்கள் போலும்! மதுரையை அடுத்த சமயநல்லூரில் அந்த ஏழைக் குடும்பம் இருந்தது.

சின்ன வயதிலேயே தந்தையை இழந்து விட்ட திரிபுரத்தை வளர்க்க அவள் தாயார்

பட்ட கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. எழுத்தறிவிக்கும் இறைவனின் மகளாகப் பிறந்தும் திரிபுரத்துக்குக் கல்வி பயிலும் வாய்ப்பே கிட்டாமற் போனதை ஒரு துர்ப்பாக்கியம் என்றுதான் சொல்ல வேண்டும். நல்ல வேளையாக அவளுடன் சேர்ந்து வறுமையைப் பங்கு போட்டுக் கொள்ள உடன் பிறந்தவர்கள் யாருமே இல்லை.

வறுமையைக் கண்டு பருவம் அஞ்சுவதுண்டா? திரிபுரத்தைத் தீண்டிய பருவம் அவளை ஒரு பொற் சிலையாக மாற்றி விட்டது. கந்தல் உடையிலும் அவள் ஓர் அப்ஸரஸாகவே தோன்றினாள். பள்ளியில் சேர்ந்து படிக்கா விட்டாலும், திரிபுரத்துக்கு இயற்கையாகவே நல்ல புத்திசாலித்தனமும், சாதுர்யமும் இருந்தன. ஒரு பெரிய மனிதர் வீட்டில் சமையல் வேலை செய்து வந்த அவள் தாய் தன் மகளுக்கு எப்படியாவது கல்யாணம் செய்துவிட விரும்பினாள்.

திரிபுரம் மட்டும் அழகில் தன்னையொத்த பெண்களை யெல்லாம் மிஞ்சிக் கொண்டே வளர்ந்தாள்; வயது இருபதை எட்டி விட்டது. ஏழைப் பெண் — அதுவும் தாயைத் தவிர வேறு திக்கில்லாத அநாதை — அழகாயிருக்கிறாள் என்பதற்காகவே அவளுக்கு விவாகம் நடந்து விடும் அதிசயத்தை நாவல்களிலும், சினிமாப் படங்களிலும் வேண்டுமானால் காணலாம். வாழ்க்கையில் நேருக்கு நேர் காண முடியாத அதிசயமல்லவா அது?

ஆனால் அந்த அதிசயமும் நிகழ்ந்து விடக் கூடிய சூழ்நிலை திரிபுரத்தின் வாழ்வில் ஏற்பட்டுவிட்டது.

அவள் தகப்பனாருடன் அதே பள்ளிக்கூடத்தில் வேலை பார்த்து வந்த ஓர் உபாத்தியாயர் திரிபுரத்தின் குடும்பத்தில் சிறிது அக்கறை உள்ளவரா யிருந்தார். காலஞ் சென்ற தம் நண்பரின் மகளுக்கு ஒரு நல்ல வரனைப் பார்த்துத் திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று தீவிர முயற்சி எடுத்துக் கொண்டார். மதுரை, திருநகரில் ஒரு பெரிய மனிதரின் வீட்டில் 'டியூஷன்' சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார் அவர்.

அந்தப் பெரிய மனிதர் மத்திய சர்க்கார் இலாக்காவில் பெரிய அதிகாரியாக இருந்தார். ஏராளமான நிலபுலன்கள் இருந்தன. இவ்வளவுக்கும் ஒரே வாரிசாக அவருக்கு ஒரு பிள்ளை இருந்தான். அந்த ஒரு பிள்ளை எம்.ஏ. பாஸ் செய்து விட்டு நல்ல உத்தியோகத்தில் இருந்தான். அந்தப் பெரிய மனிதர் தம் மகனுக்கு ஏழைக் குடும்பத்துப் பெண்ணைப் பார்க்கிறார் என்னும் விஷயம் இந்த உபாத்தியாயர் காதில் விழுந்ததும், அவரிடம் திரிபுரத்தைப் பற்றிச் சொன்னார். உடனே அந்தப் பெரிய மனிதர் திரிபுரத்தைப் 'பெண் பார்க்க' விரும்பினார்.

பெண் பார்க்கும் படலம் உபாத்தியாயர் வீட்டில் செய்யப்பட்டது. அது கூடம், தாழ்வாரம் என்று கொஞ்சம் பெரிதாக இருந்ததுடன் தனி வீடாகவுமிருந்தது.

திரிபுரத்தின் தாயாரின் மனம் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தது. 'மீனாட்சி அம்மன் தான் வழி காட்டினாள்' என்று உள்ளம் நெகிழச் சொல்லி, மனமுருகப் பிரார்த்தித்தாள். சிரமத்தைப் பாராமல் ஓர் அழகிய வாயில் புடவையை வாங்கி மகளை உடுத்திக் கொள்ளச் சொன்னாள்.

அந்த எளிய வாயில் புடவையை உடுத்திக் கொண்டு திரிபுரம் அப்ஸரஸாகத் தோற்றமளித்தாள்.

அந்தப் பெரிய மனிதரும், அவர் மகனும், மனைவியும் குறிப்பிட்ட நேரத்தில் திரிபுரத்தைப் பெண் பார்க்க வந்தனர்.

சங்கீத சிக்ஷை சொல்லிக்கொள்ளா விட்டாலும் திரிபுரம் திவ்வியமாகப் பாடுவாள். எல்லாம் கேள்வி ஞானம். தமிழிலும் தெலுங்கிலும் இரண்டு மூன்று கீர்த்தனைகள் பாடினாள். அவள் குரலில் இழைந்த மதுர பாவங்கள் எல்லோரையும் கிறங்க வைத்தன; பக்திச் சுவை பரவசம் அடையச் செய்தது. பெரிய மனிதரும், அவர் மனைவியும், மகனும் மெய்ம் மறந்து விட்டனர். பெண் பிடித்துப் போய் விட்டது என்பது இதிலிருந்தே நன்றாக விளங்கிவிட்டது.

பல தர்மவான்களின் உதவியைக் கொண்டு கல்யாணத்தைக் கூடியவரையில் சிறப்பான முறையில் நடத்தி விடுவது என்று அந்த உபாத்தியாயர் முடிவு செய்து அதற்கான முயற்சிகளில் ஈடுபடலானார். முகூர்த்தத்துக்குத் தேதி குறிப்பிடப்பட்டு விட்டது. விவாகத்துக்குச் சரியாக ஒரு மாதம் இருந்தது. அப்பொழுதுதான் அந்த முற்றிலும் எதிர்பாராத பேரிடி போன்ற செய்தி வந்தது.

அறுவடைக்காகக் கிராமத்துக்குச் சென்றிருந்த அந்தப் பெரிய மனிதர் திடீரென்று இருதயக் கோளாறு ஏற்பட்டு அங்கேயே இறந்து விட்டார். இந்தச் செய்தி வந்ததும் அனலில் விழுந்த புழுப் போல் துடித்தது திரிபுரத்தின் தாயார்தான்.

திரிபுரத்தின் நிலைமை மிக மிகப் பரிதாபத்துக்குரியது. அவள் முகத்தில் முன்பு குடிகொண்டிருந்த குதூகலம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. அசோகவனத்துச் சீதை மாதிரி சோகத்தில் ஆழ்ந்து ஒரு மூலையில் முடங்கி விட்டாள்.

இறந்தவரின் இறுதிச் சடங்குகள் முடிந்து ஒருவாறு துக்கத்தின் வேகம் அடங்கி விட்டது. திரிபுரத்தின் விவாகத்துக்கு இன்னும் ஒரு வாரம்தான் பாக்கி யிருந்தது. தன் மகளுக்கு வரப் போகும் பாக்கியத்தை எண்ணி எண்ணிக் குதூகலப்பட்டுக் கொண்டிருந்த திரிபுரத்தின் தாயார் பைத்தியம் பிடித்த மாதிரி ஆகி விட்டாள்.

உபாத்தியாயர் அந்தப் பெரிய மனிதர் வீட்டுக்குப் போய்ப் பேச்சுக் கொடுத்தார். அவர் வீட்டில் யாருமே முகம் கொடுத்துப் பேசவில்லை.

"......இனி நீங்கள் கலியாண விஷயமாகப் பேச வேண்டாம். அது நின்று விட்டது. மருமகளாக வீட்டுக்கு வருவதற்கு முன்பே மாமனாரை விழுங்கி விட்டாள். கல்யாணம் முடிந்து வீட்டுக்கு மருமகளாக வந்து விட்டால் இன்னும் என்னென்ன விபரீதங்கள் நேரிடுமோ? யார் கண்டது? தயவுசெய்து நீங்கள் போய் வாருங்கள்.... நீங்களே அந்த அம்மாளிடம் எங்கள் முடிவைச் சொல்லி விடுங்கள்......!" என்று அந்தப் பெரிய மனிதரின் தங்கை முகத்தில் அடித்தாற்போல் சொல்லியனுப்பி விட்டாள்.

இதைக் கேட்ட திரிபுரத்தின் தாயார் அன்று படுத்தவள்தான்; பிறகு எழுந்திருக்கவே யில்லை. ஏற்கனவே உழைத்து ஓடாய்ப் போயிருந்த உடம்பு; அத்துடன் இதயமும் உடைந்து விட்டது. நாளுக்கு நாள் மெலிந்து கொண்டே வந்து ஒரு நாள் திரிபுரத்தை அநாதையாக விட்டு விட்டு அவள் இறந்து விட்டாள்.

தர்மமென்றும், தானமென்றும், அறமென்றும், அன்பென்றும், அஹிம்சை என்றும் பேசும் மக்கள் எத்தனையோ பேர்கள் இருந்தும் அவ்வூரில் திரிபுரத்தை ஏனென்று கேட்பாரில்லை.

அநாதையாகி விட்ட திரிபுரத்தை வீட்டுக்காரர் வாடகைக்குத் தொந்தரவு செய்தார். வீட்டில் இருந்த பழைய பாத்திரங்கள் சிலவற்றை விற்றுக் காசாக்கிக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டு விட்டாள் திரிபுரம்.

மதுரையையே சுற்றிப் பார்த்ததில்லை அவள். இந்த நிலையில் வறுமையையும், தாயாரை இழந்து விட்ட துயரத்தையுமே துணையாகக் கொண்டு பெருகிவரும் கண்ணீருடன் சென்னைக்கு ரயில் ஏறினாள்.

திரிபுரத்தின் கண்ணீரையோ, கவலையையோ பற்றிச் சிறிதும் ரயில் பொருட்படுத்தினதாகத் தெரியவில்லை. 'திடு திடு' என்று ஓடிக் கொண்டேயிருந்தது. ரயில் இப்படியே தலைதெறிக்கும் வேகத்தில் ஓடிக் கொண்டேயிருந்தால் என்ன என்று தோன்றியது, அவளுக்கு. வெகு நேரம் தூங்காமலேயிருந்தவள் செங்கல்பட்டு ஜங்ஷனுக்கு முன்னாலே தன்னையும் அறியாமலே அயர்ந்து விட்டாள்.

வண்டி எழும்பூர் ரயில் நிலையத்துக்கு வந்து நின்ற பிறகும் திரிபுரம் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். கீழே இறங்கிக் கொண்டிருந்த பிரயாணிகளில் ஒருத்தி திரிபுரம் இன்னும் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து, ''என்னம்மா, எழும்பூர் வந்து விட்டது. இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாயே!'' என்று கூறி அவளை எழுப்பினாள்.

திடுக்கிட்டு எழுந்த திரிபுரம் தான் முன் பின் பார்த்திராத பெரிய ஸ்டேஷனையும், ஜன நெரிசலையும் கண்டதும் அதிர்ந்து திகைத்துப் போனாள். கைப் பையுடன் வண்டியை விட்டுக் கீழே இறங்கி, ஒன்றும் புரியாமல் பிளாட்பாரத்திலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த ஜனக் கூட்டத்துடன் திரிபுரம் வெளியே வந்தாள். முதலில் ஒரு காப்பி ஹோட்டலுக்குள் நுழைந்து பல் தேய்த்து முகம் கழுவி, இட்டிலியும் காப்பியும் சாப்பிட்டாள். பிறகுதான் திரிபுரத்துக்கு உயிர் வந்த மாதிரி இருந்தது. ஆனால் செலவுக்குப் பணம் இல்லாமல் உயிர் வந்து என்ன பயன்? இனிமேல் எங்கே போவது?

பகல் பன்னிரண்டு மணியிருக்கும். திரிபுரம் எங்கெல்லாமோ அலைந்து திரிந்து ஓய்ந்து போய் விட்டாள். பசி வயிற்றைப் பிடுங்கியெடுத்தது. வழி, துறை தெரியாமல், குறிக்கோள் இல்லாமல் அலைந்ததில் கடைசியாக, கோடம்பாக்கம் ரயில்வே கேட்டுக்கருகில் வந்தாள். மின்சார வண்டி போவதற்காகக் கதவு அப்பொழுதுதான் மூடப்பட்டது. பெரிய பெரிய சினிமாப் படாதிபதிகளையும்,



பிரசித்தி பெற்ற சினிமா நட்சத்திரங்களையும், புகழ்பெற்ற டைரக்டர்களையும், பின்னணிப் பாடகிகள், பாடகர்களையும் தன் தலைவாசலில் தவம் கிடக்கும்படி செய்யும் அந்தப் பொல்லாத 'லெவல் கிராஸிங் கேட்' அநாதையான திரிபுரத்தைக் கண்டதும் திறந்து கொண்டு விடுமா என்ன? அவளுக்காக இன்னும் கொஞ்சம் அதிகமாகவே மூடிக் கொண்டிருந்ததோ என்னவோ! வெகு நேரம் ஆகியும் கதவு திறக்காமற் போகவே, திரிபுரம் பசியும், தாகமும், களைப்பும் தாங்காமல் அங்கேயே சுருண்டு கீழே விழுந்து விட்டாள்.



திரிபுரம் தூக்கம் கலைந்து எழுந்தபோது சுவர்க் கடிகாரத்தில் மணி நாலடித்தது. இந்த மணிச் சத்தம் கேட்க ஆச்சரியமா யிருந்தது அவளுக்கு. பசி மிகுதியா யிருந்தபோதிலும், ஓரளவு களைப்புக் குறைந்திருந்தது. மெத்தென்ற பஞ்சணையில் அவள் படுத்திருந்தாள். தான் கனவு காண்கிறோமோ என்னும் சந்தேகம் ஏற்பட்டுத் தன்னைத் தானே ஒரு முறை கிள்ளிப் பார்த்துக் கொண்டாள் திரிபுரம். கனவு காணவில்லை யென்பது தெரிந்து விட்டது. திடுக்கிட்டுக் கட்டிலில் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். ரப்பர் மெத்தை அவளைத் தூக்கித் தூக்கிப் போட்டது புதிய அநுபவமா யிருந்தது. நாற்புறமும் பார்த்தாள். தான் ஒரு பெரிய பங்களாவில் நன்கு அலங்கரிக்கப்பட்ட அறையில் இருப்பது தெரிய வந்தது. தான் அங்கு வந்தது எப்படி என்று அவளுக்குத் தெரியவில்லை. எவ்வளவு நேரம் யோசித்தும் ஒன்றும் விளங்கவில்லை.

மலங்க மலங்க விழித்துக் கொண்டு ஒரே குழப்பத்தில் ஆழ்ந்து செய்வது இன்னதென்று தெரியாமல் தவித்தாள் திரிபுரம். அப்பொழுது ஒரு பெண் தட்டு நிறையப் பலகாரங்களுடன் அங்கே வந்து மிகவும் அன்பான குரலில், ''அம்மா, நீங்க ரொம்பப் பசியாக இருக்கீங்க. முதலிலே இதைச் சாப்பிடுங்க. மத்த விவரங்களெல்லாம் அப்புறமாய்ப் பேசிக் கொள்ளலாம்.....!'' என்று

கூறிக் கொண்டே ஒரு முக்காலியை இழுத்துக் கட்டிலுக்கு அருகில் போட்டு அதன் மீது சிற்றுண்டித் தட்டை வைத்தாள்.

திரிபுரத்தின் குழப்பம் இன்னும் அதிக மாயிற்று.

''பயப்படாதிங்க, அம்மா! கோடம்பாக்கம் ரயில் கேட்டண்டை மயக்கமாய்க் கிடந்திங்களாம். ஐயா அந்த வழியாகக் காரிலே வந்திருக்காங்க. உங்களைப் பார்த்ததும், காரிலே போட்டுக்கிட்டுப் பங்களாவுக்குக் கொண்டு வந்து சேர்த்தாரு. மயக்கம் தெளிஞ்சதும் ஆகாரம் கொடுன்னு சொல்லி விட்டு வெளியே போனாரு. இப்பொழுது வந்திடுவாரு..... நீங்க எழுந்து வந்து முகங் கைகால் கழுவிக்கிட்டு முதலிலே இதைச் சாப்பிடுங்க!'' என்று அன்பாகச் சொன்னாள் அந்தப் பெண்.

திரிபுரத்துக்கும் பசி தாங்கவில்லையாதலால் ஏதாவது சாப்பிட்டாக வேண்டும் என்று தோன்றியது. எழுந்து போய் வராந்தாவில் இருந்த பேஸின் குழாயில் முகம் கழுவிக் கொண்டு வந்து சிற்றுண்டியைச் சாப்பிட்டாள். அவள் காப்பியும் கொண்டு வந்து வைத்தாள். சிற்றுண்டியும் காப்பியும் உள்ளே போன பிறகுதான் திரிபுரத்துக்குச் சிறிது உயிர் வந்தது.

''அம்மா, வாங்க! எசமான் வர்றதுக்குள்ளே இந்தப் பங்களாவையும் தோட்டத்தையும் சுற்றிப் பார்க்கலாம்!'' என்று அந்த வேலைக்காரப் பெண் வந்து அழைத்தபிறகு திரிபுரத்துக்குத் தன் நினைவு வந்தது.

அவளோடு பங்களா முழுவதும் சுற்றிப் பார்த்தாள். அது மிகப் பெரிய பங்களா. விவரம் தெரிந்தது முதல் எட்டுக் குடித்தனக்காரர்களுடன் ஒன்பதாவது குடித்தனமாக ஒரே ஒரு சின்னஞ் சிறு அறையில் அடைபட்டுக் கிடந்து பழகிவிட்ட திரிபுரத்துக்கு இந்தப் பங்களாவைப் பார்க்க ஒரே ஆச்சரியமாக இருந்தது. இத்தனை பெரிய பங்களாவில் மனிதர்கள் எப்படி வசிக்கிறார்கள் என்று அவள் வியந்து போனாள். அப்பொழுது வாசலில் கார் சத்தம் கேட்டது. திரிபுரம் தான் முதலில் படுத்துக் கொண்டிருந்த அறைக்கு வந்து அமர்ந்து கொண்டாள்.

உள்ளே நுழைந்த மனிதருக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். ஆனால் வாட்டசாட்டமாகவும் திடகாத்திரமாகவும் இருந்தார். தூய கதராடையும், கதர் ஜிப்பாவும், கதர் அங்கவஸ்திரமும் அவருக்குப் பொருத்தமாக இருந்தன. அவரைப் பார்த்ததும் திரிபுரத்துக்கு ஏனோ பக்தியோடு பாசமும் மனத்தில் எழுந்தன. திரிபுரம் எழுந்து கைகூப்பினாள்; பிறகு அவர் காலில் விழுந்து வணங்கினாள்.

''இதெல்லாம் என்ன அம்மா? நீ இன்று உயிர் பிழைத்ததற்குக் கடவுளை வணங்கு....! அதெல்லாம் இருக்கட்டும். சிற்றுண்டி காப்பி சாப்பிட்டாயா?'' என்று மிகுந்த அன்போடு கேட்டார்.

திரிபுரம் இவ்வளவு அன்பான குரலில் தன் தாயாரைத் தவிர வேறு யாரும் பேசிக் கேட்டதில்லை. அவரை நன்றிப் பெருக்கோடு பார்த்தாள். அவள் கண்களில் நீர் பெருகிப் பார்வையை மறைத்தது. மெய் சிலிர்த்தது. அவளுக்குப் பேச நா எழவில்லை.

''அழாதே, அம்மா! இறைவன் உன்னை நல்ல இடத்தில்தான் சேர்த்திருக்கிறான். நான் சொந்தத்தில் சினிமாப் படம் தயாரிப்பவன். அத்துடன் சினிமா டைரக்டரும்கூட. உன்னை இன்று நடு மத்தியானம் கோடம்பாக்கம் ரயில் கேட்டுக்கு அருகில் மயக்கமுற்ற நிலையில் கண்டதும் என்ன காரணத்தினாலோ உன்னிடம் ஒரு பாசம் உண்டாகி விட்டது......'' என்றார் அந்த மனிதர்.

திரிபுரத்துக்குத் தெய்வத்தையே நேரில் காண்பது போல் இருந்தது. பிறகு தன் வரலாற்றை டைரக்டர் பரமேசுவரனிடம் விவரமாகச் சொன்னாள்.

அவள் வரலாற்றைக் கேட்ட பரமேசுவரன் மிகவும் வருந்தினாரென்றாலும் அடுத்த நிமிஷமே மகிழ்ச்சியால் துள்ளினார்.

''நீ கொஞ்சமும் வருத்தப்படாதேயம்மா. உனக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. உனக்கு நல்ல முகவெட்டு இருக்கிறது. நான் எடுக்கப் போகும் ஒரு புதுமையான சமூகப் படத்தில் நடிக்கப் புது முகம் ஒன்றைத் தேடிக் கொண்டிருக்கிறேன். நீ மட்டும் சம்மதித்தால் உன்னை ஒரு நட்சத்திரமாக்கி விடுவேன்......!'' என்றார் பரமேசுவரன்.

திரிபுரம் துடித்துப் போய் விட்டாள். அவள் உடம்பெல்லாம் நடுங்கியது.

''ஐயையோ......எனக்கும் சினிமாவுக்கும் ரொம்ப தூரம். முன்பின் தெரியாதவர்கள் எதிரே நாலு வார்த்தை பேசுவதென்றாலே நடுங்கி, உளறிக் கொட்டி விடுவேன். அப்படியிருக்கும் போது சினிமாவில் நடிக்க என்றால் எப்படி முடியும்? சமையல் நன்றாய்ச் செய்வேன். எனக்கு உங்கள் வீட்டில் அந்த வேலையைக் கொடுங்கள். போதும் ஸார்! தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள். சினிமா வேண்டாம், ஸார். நான் ஏதோ சில தமிழ்ப் படங்கள் பார்த்திருக்கிறேன். அடேயப்பா! அவர்கள் எல்லாரும் எத்தனை உயர்வாய் நடிக்கிறார்கள்? எவ்வளவு நன்றாய்ப் பேசுகிறார்கள்? முதலில் எவ்வளவு அழகாக இருக்கிறார்கள்...! ஸார், வேண்டாம், ஸார்! எனக்குச் சினிமா வேண்டாம்...ஸார்!''

விழிகளிலிருந்து கண்ணீர் அருவியாய்ப் பொழிய மெல்லிய உதடுகள் துடிக்க, படபடவென்று வார்த்தைகளை உணர்ச்சிவசப்பட்டுக் கொட்டி விட்டாள் திரிபுரம்; அவளது இடை துவண்டது.

இது வரையில் திரிபுரத்தையே பார்த்துக் கொண்டிருந்த டைரக்டர் பரமேசுவரன், ''சபாஷ்!'' என்று கூறித் துள்ளிக் குதித்தார்.

திரிபுரத்துக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் தன்னைப் பரிகாசம் செய்வதாக அவளுக்குத் தோன்றியது. திகைப்போடு அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''திரிபுரம், உன்னையும் அறியாமல் இப்பொழுது நீ மிகவும் நன்றாக நடித்துக் காட்டி விட்டாய்! உன் முகத்தில் எத்தனை பாவங்கள்! எத்தனையோ படங்களை டைரக்ட் செய்து அனுபவப்பட்ட நான் எடுத்த எடுப்பில் இவ்வளவு நன்றாய் நடிக்கக் கூடிய ஒரு புது முகத்தைக் கண்டதேயில்லை! ஆகா! இப்பொழுது நீ நிற்கும் 'போஸ்' ஒன்று போதும்......!''

என்று பரவசத்தோடு நெகிழ்ந்த குரலில் கூறினார் பரமேசுவரன்.

திரிபுரம் மேலும் திகைத்தாள். அவளுக்குப் பரமேசுவரனின் செயல்கள் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றின.

"உனக்குப் பாடத் தெரியுமா? எந்தப் பாட்டாயிருந்தாலும் பரவாயில்லை...!" என்று பரமேசுவரன் உற்சாகமூட்டும் குரலில் சொன்னார்.

".....நான் முறையாகப் பாட்டுக் கற்றுக் கொள்ளவில்லை. கேள்வி ஞானத்தைக் கொண்டு பாடுவேன்; என் குரல் நன்றாயிருக்கிறது என்று ஊரில் எல்லோரும் சொல்லுவார்கள்.....!" என்று மிகவும் நாணத்தோடு கூறினாள் திரிபுரம்.

"சரி, சரி. பாடு. கேட்போம்" என்றார் டைரக்டர்.

இரண்டு, மூன்று சினிமாப் பாட்டுக்களைப் பாடினாள் திரிபுரம்.

பரமேசுவரன் அயர்ந்து போனார். "சபாஷ்" என்று இன்னொரு முறை துள்ளிக் குதித்தார். "குரல் மிகவும் நன்றாயிருக்கிறது. நீ கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம். எல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இனி நீ என்னுடைய பெண். இது உன் வீடு. நீ சந்தோஷமாய் இங்கே இருக்கலாம். நாளைக்கு ஊரிலிருந்து என் மனைவியும் குழந்தைகளும் வருகிறார்கள்.... என் மனைவிக்குப் பெண் குழந்தை இல்லையே என்று ரொம்பக் குறை. அவள் உன்னைப் பார்த்தால் விடவே மாட்டாள்!" என்றார்.

திரிபுரத்துக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. தான் ஒரு சினிமா நடிகையாக முடியும் என்று அவள் கனவிலும் எதிர்பார்த்ததில்லை.

சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்த பரமேசுவரன், "...உம். முதலில் உன் பெயரை மாற்றவேண்டும்..." என்றார்.

"ஏன் ஸார்!" என்று ஒன்றும் புரியாமல் கலவரத்தோடு கேட்டாள் திரிபுரம்.

"திரிபுரசுந்தரி என்று உன் பெயரைச் சினிமாப் படத்தில் போட்டால் யார் உன்னைப் பார்க்க வருவார்கள்? இப்பொழுது பிரபல நட்சத்திரங்களாக விளங்கும் சுபா, தாரா முதலியவர்களெல்லாம் குப்பம்மா, சுப்பம்மா என்ற பெயர்களில் இருந்தவர்கள்தான். உம். இன்று முதல் உன் பெயர் நர்மதாதேவி! என்ன? நினைவிருக்கட்டும். சினிமாவில் பிரசித்தி பெறுவதற்குக் கவர்ச்சியான தோற்றம் மட்டும் போதாது. எல்லோரையும் கவரக் கூடிய பெயரும் முக்கியம்.....!"

திரிபுரத்துக்கு அவர் சொன்னதைக் கேட்க ஒரே ஆச்சரியமாயிருந்தது. எங்கேயாவது சமையல்காரியாக வேலைக்கு அமர்ந்து வாழ்நாளை ஓட்ட முடிந்தால் அதுவே பெரிய அதிர்ஷ்டம் என்று நினைத்துக் கொண்டிருந்தவளுக்கு எத்தனை பெரிய அதிர்ஷ்டம்!



மோகன சுந்தரத்தின் டைரியைப் பார்த்துக் கொண்டிருந்த நர்மதாவின் கவனத்தை 'டங்' என்ற சுவர்க் கடிகாரத்தின் மணி ஒலி கலைத்தது. நர்மதா கடிகாரத்தைப் பார்த்தாள். இரவு மணி பன்னிரண்டரை. மணி ஆனதே தெரியவில்லை. அவளை அவ்வளவு தூரம் பரவசப்படுத்திய விஷயம் மோகனசுந்தரம் எட்டு ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய ஒரு சிறு கடிதம்தான். ஏற்கனவே அவனைப் பார்க்கும் போதெல்லாம் கனவில் கண்ட முகம் மாதிரி ஒரு தேய்ந்த நினைவு நர்மதாவின் மனத் திரையில் எழும். ஆனால் எப்பொழுது பார்த்தோம்; எங்கே பார்த்தோம் என்பதெல்லாம் விளங்காத புதிராக இருந்தது. இந்தக் கடிதம் எல்லாவற்றையும் விளக்கி விட்டது. நர்மதா திரிபுரமாயிருந்த போது அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாயிற்றல்லவா? திடீரென்று வரனின் தகப்பனார் இறந்து விடவே கல்யாணம் நின்று விட்டது. அதே துயர அதிர்ச்சியினால் திரிபுரத்தின் தாயார் இறந்து விட்டாள் அல்லவா? இந்தக் குழப்பங்கள் நடந்த சமயம் மாப்பிள்ளைப் பையன் உத்தியோக விஷயமாகச் சென்னைக்குப் போயிருந்தான். அவன் திரும்பி வந்த அன்று இரவுதான் திரிபுரம் மதுரையைவிட்டுச் சென்னைக்குப் புறப்படத் தீர்மானித்தாள்.

இந்தக் கல்யாணத்தைப் பொருத்தம் இல்லாத காரணத்தைக் காட்டி நிறுத்தி விட்டதாக வரன் தன் குடும்பத்தினரிடம் வாதாடி, 'மணந்தால் திரிபுரத்தைத்தான் மணப்பேன் இன்றேல் பிரம்மச்சாரியாகவே இருப்பேன்' என்று சபதம் கூறினான். திரிபுரத்திடம் நேருக்கு நேர் பேசி அவள் சம்மதத்தைப் பெற அவனுக்குத் தைரியம் இல்லையாதலால் ஒரு கடிதம் எழுதி விட்டு வேலைக்காரியிடம் கொடுத்துத் திரிபுரத்திடம் சேர்க்குமாறுகூறி அனுப்பினான்.



அந்தக் கடிதத்தைக் கண்ட திரிபுரத்துக்குத் தாங்க முடியாமல் அழுகைதான் வந்தது. பொங்கிவந்த கண்ணீருக்கிடையே அக்கடிதத்தைப் பிரித்துப் பார்த்துவிட்டு மறுமொழி ஏதும் சொல்லாமல் வேலைக்காரியிடமே திருப்பிக் கொடுத்துவிட்டாள்! "ஐயா! உங்கள் கைப்படப் பதில் வாங்கிவரச் சொன்னாரு..." என்று கூறி வேலைக்காரி அங்கிருந்து போகத் தயங்கினாள்.

"பதிலும் இல்லை, ஒன்றும் இல்லை. நீ உடனே இங்கிருந்து போய் விடு.....!" என்று ஆவேசம் வந்தவள் மாதிரி கத்தித் திரிபுரம் அவளைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாகத் துரத்தி விட்டாள். அன்றிரவே அவள் ஊரை விட்டுப் புறப்பட்டு விட்டாள்.

அப்பொழுது திரிபுரத்துக்கு எழுத்தறிவில்லாத குறையினால் கடிதத்தைப் படித்துப் பார்க்காமலே திருப்பி விட்டாள். இப்பொழுது நர்மதாவுக்குத்தான் நன்றாய்ப் படிக்கத் தெரியுமே! அந்தக் கடிதத்தை எடுத்துப் படித்தாள்:

''அன்புள்ள திரிபுரத்துக்கு,

என் மனமார்ந்த ஆசிகள் பல. ஒருத்தியைக் கைப்பிடிக்கும் முன்பே அவளுக்குக் கடிதம் எழுதுவது பண்பற்ற செயல்தான் என்றாலும் வேறு வழி ஏதும் இல்லாத நிலையில் இதை எழுதுகிறேன். நம் கலியாணம் நின்று போனது குறித்து நீ மிகவும் வருந்தியிருப்பாய். இது நான் ஊரில் இல்லாத சமயத்தில் நடந்து விட்டது. எனக்கு ஒன்றுமே தெரியாது. என்னை மன்னித்து விடு. நம் கலியாணம் எப்படியும் நடக்கும். நான் முடிவு செய்து விட்டேன், மணந்தால் உன்னைத்தான் மணப்பதென்று. உன்னைப் பெண் பார்த்த அன்றே எனக்குப் பிடித்து விட்டது. என் குடும்பத்தினரின் சம்மதத்தையும் பெற்று விட்டேன். நீ நடந்தவைகளை அடியோடு மறந்து விட்டு, உன் கைப்பட உன் சம்மதத்தைத் தெரிவித்து ஒரு வரி பதில் எழுதி வேலைக்காரியிடம் அனுப்பு.

இப்படிக்கு,
**மோகனசுந்தரம்.''**

முன்பு படிக்கத் தெரியாத காரணத்தால் அவளுக்கு அழுகை வந்தது: இப்பொழுது படித்துத் தெரிந்து கொண்ட காரணத்தால் அழுகை வந்தது. குமுறிக் குமுறி அழுத படியே நர்மதா உறங்கி விட்டாள்.

பொழுது நன்றாய் விடிந்ததும் தான் நர்மதாவின் தூக்கம் கலைந்தது. பல் தேய்த்து முகம் கழுவி, நெற்றியில் குங்குமத்துடன் தன் அறைக்கு அவள் வந்த போது மணி ஏழாகி விட்டது. நர்மதா மீண்டும் ஒரு முறை அந்தக் கடிதத்தை எடுத்துப் பார்த்தாள். பதினைந்து நாட்களில் தினந்தோறும் எத்தனையோ முறை படித்து விட்டாள். எப்பொழுதும் போல் மறுபடியும் கண்ணீர்த் திரை பார்வையை மறைத்தது.

'அவருடைய பெயர் சுந்தரம் என்று அம்மா அப்பொழுது சொன்னது இப்போது நினைவுக்கு வருகிறது. ஆகா! எத்தகைய உத்தமர் இவர்! எனக்கு எழுத்தறிவித்ததும் அல்லாமல் நான் இந்தக் கடிதத்தைப் படிக்க வேண்டும் என்பதற்காகவே இந்த டைரியில் இதை வைத்து விட்டுப் போயிருக்கிறார்!' என்று நர்மதா தனக்குத் தானே பேசிக் கொண்டாள். சினிமாவில் நடிக்கும் ஞாபகத்தில் மேற்கூறிய வரிகளைச் சற்றுப் பலமாகக் கூறி விட்டாள்!

உடனே சினிமாவில் நடப்பது போலவே ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

திடீரென்று மோகனசுந்தரம் பிரவேசித்து, ''உண்மைதான் நர்மதா. நீ பார்க்க வேண்டும் என்னும் ஆசை காரணமாகத்தான் கடிதத்தை டைரியில் வைத்து விட்டுப் போனேன். இனி என்னை ஏமாற்ற மாட்டாயே? உனக்காகவே எட்டு ஆண்டுகளாகக் காத்திருக்கிறேன்!''—என்று கூறிக்கொண்டே அவள் அருகில் வந்தான்.

நர்மதா திடுக்கிட்டுப் போய் அவனைப் பார்த்தாள். மோகன சுந்தரம் உரிமையோடு அவள் கரங்களைப் பற்றினான். நர்மதா தன் கரங்களை விடுவித்துக் கொள்ள முயலவில்லை. அவன் மார்பிலே சாய்ந்து கொண்டு விம்மினாள். எத்தனையோ படங்களில் கதாநாயகர்களோடு நெருங்கி நடித்துப் பெரும் புகழ் பெற்று விளங்கும் நர்மதா இன்றுதான் உண்மையாக நெகிழ்ந்து போனாள். படத்தில் காட்டியது நடிப்பு; ஆனால் வாழ்க்கையிலோ...? உண்மை; நெஞ்சின் துடிப்பு!

''ஏன், அழுகிறாய், நர்மதா? உன் சுதந்திர வாழ்க்கையில் நான் குறுக்கிட்டு விட்டேனே என்று?'' என்று கேட்டான் மோகனசுந்தரம்.

''இனி மேல் இன்னொரு முறை அப்படிச் சொல்லாதீர்கள். மனம் விட்டு அழுவதைத் தவிர இப்பொழுது எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. நானே உங்களைக் கேட்டுக் கொள்ளலாம் என்றிருந்தேன். எனக்காகவே நீங்கள் காத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று அறிந்ததும் என் மனம் நெகிழ்ந்துவிட்டது. நம் விவாகம் நிச்சயம் ஆன சந்தர்ப்பத்தில் உங்கள் தகப்பனார் திடீரென்று இறந்து விடவே விவாகம் நின்று விட்டது. அதிலிருந்து வாழ்க்கையிலேயே ஒரு கசப்பும், ஆண் வர்க்கத்தினிடமே ஒரு வெறுப்பும் ஏற்பட்டு விட்டன. அந்தக் கசப்பும் வெறுப்பும்தான் இந்தச் சினிமா வாழ்வில் எனக்குப் பாதுகாப்பாக விளங்கி வருகின்றன. ஆனால் உங்களைப் பார்த்தபிறகு வாழ்க்கையிலேயே ஒரு தனி விருப்பம் உண்டாகி விட்டது: முன்பு உங்கள் முகத்தையே நான் பார்த்ததில்லை. உங்கள் பெயரும் அப்பொழுது சுந்தரம் என்று சொன்னதாக ஞாபகம்.''

''ஆம். என் முழுப் பெயர் மோகன சுந்தரம். சுந்தரம் என்றுதான் எல்லாரும் கூப்பிடுவார்கள். நீ திடீரென்று ஊரை விட்டுப் புறப்பட்ட பிறகு உன்னைக் கண்டு பிடிக்க எவ்வளவு கஷ்டப்பட்டுப் போனேன், தெரியுமா ?''

''.......எப்படி என்னைக் கண்டுபிடித்தீர்கள்.....?''

''நீ நடித்த முதல் படமாகிய ''நினைவு முகம்'' படத்தில் உன்னைப் பார்த்ததும் எனக்குத் தெரிந்துவிட்டது. நர்மதா என்று உன் பெயர் கொடுக்கப் பட்டிருந்தாலும் நீதான் திரிபுரம் என்று கண்டுபிடித்துவிட்டேன். அதற்குப் பிறகு உன்னைச் சந்திக்க நான் பட்ட கஷ்டங்கள் உனக்குத் தெரியும். ஆனால் அந்தக் கஷ்டங்களெல்லாம் இப்பொழுது உன்னை அடைந்த மகிழ்ச்சியில் மறைந்து விட்டன.''

''நீங்கள் விரும்பிய பெண்ணை அடைந்ததில் உங்களுக்கு மகிழ்ச்சி. நான் விரும்பியவரே எனக்குக் கிடைத்ததில் எனக்குத் தாங்க முடியாத மகிழ்ச்சி. இனி மேல் என் சினிமா வாழ்க்கைக்கு ஒரு முற்றுப்புள்ளி...!''

''கூடாது, நர்மதா, கூடாது! நம் வாழ்க்கைச் சரித்திரத்தையே படமாக்க வேண்டும் என்பதுதான் என் விருப்பம். அதில் நீதான் நடிக்க வேண்டும்!''

''அது சரி. உண்மையைக் கண்டபின்பு நடிப்பில் சுவை காண முடியுமா? இனி என்னால் வேறொருவருடனும் நடிக்க முடியாது. உங்களோடு வாழத்தான் முடியும்....!''

நர்மதாவின் உணர்ச்சி மிகுந்த பேச்சைக் கேட்டு மோகனசுந்தரம் நெகிழ்ந்து போனான்.

குறிப்பாக எங்கள் பாப்ளின்கள், சின்ட்ஸ், வாயில்கள் போன்ற அணிகளில் அச்சிடப்பட்டுள்ள மனோகரமான பொட்டுப் பூவேலைகள் ஆடைகளை ஒரேயடியாக மாற்றிவிடுகின்றன. கணக்கற்ற கண்கவர் வர்ணங்களில் நவீன மோஸ்தரிலோ, பண்டைய பாணியிலோ எழில்மிகு ஸல்வார் கமீஸ் ஜோடிகள், புடவைகள், மற்றும் விளையாட்டுக்கான ஆடையணிகள் எதையுமே நீங்கள் உயரிய வகையில் அமைத்துக்கொள்ளலாம். ஸாயாஜி மில்ஸ் அளிக்கும் பிரிண்ட் வகைகள் அழகிய அமைப்புடையவை. மீண்டும் மீண்டும் அவற்றை அணிய விரும்புவீர்கள்.

ஸயாஜி மில்ஸ் ந. 1 பரோடா
ஸயாஜி மில்ஸ் லிட். அஹமதாபாதின் ஒரு பிரிவு, கபலக்ஷ்மி மில்ஸ் லிட், கேம்பே

# பூவேலை ஆடையை ஒரேயடியாக

## மாற்றி விடுகின்றன!



SPY-8



# கலைத் தொழில் கல்லூரி

''இந்தப் பத்திரிகை வெளி உலகத்தைத் தங்கள் வீட்டு ஜன்னல் வழியாகப் பார்த்துத் திருப்திப்பட்டுக் கொள்பவர்களுக்காக இல்லை. பார்வைகளுக்கு அப்பால் விண் விளிம்புகளுக்கும் அப்பால் நிலவும் எத்தனையோ இயற்கை ரகசியங்களையும், இன்பச் சூழ்நிலைகளையும் மனக் கண் முன் கொண்டு வரக் கூடியவர்களுக்காகத்தான்'' என்று ஓர் அமெரிக்க நாட்டுச் சஞ்சிகை தன்னைப் பற்றிச் சமீபத்தில் விளம்பரம் செய்திருந்தது.

அரசினர் கலைத் தொழில் கல்லூரி (Govt. College of arts & crafts)யின் முதல்வர் திரு கே. ஸி. எஸ். பணிக்கர் தம் மாணவர்கள் தீட்டியிருந்த நவீனக் கலை ஓவியங்களைக் (Modern art) காண்பித்து விளக்க முற்பட்டபோது மேலே குறிப்பிட்ட அமெரிக்கச் சஞ்சிகையின் விளம்பரம்தான் நினைவுக்கு வந்தது. ஓவியங்களிலே புதுமை இருக்கிறது. ஆனால் அது எத்தகைய புதுமை என்று சாதாரண ரசிகர்களால் அறிந்துகொள்ள முடியாது; விளக்கவும் முடியாது. ரவி வர்மாவின் பூர்ணத்துவம் பெற்ற உருவங்களையும் மற்ற ஓவியர்கள் சம்பிரதாயப்படி தீட்டியிருக்கும் இயற்கைக் காட்சிகளையும் சித்திரங்களில் பார்த்துப் பார்த்துப் பழகிய கண்களுக்கு இந்த நவீனக் கலை ஓவியங்கள் ஏதோ புரியாத புதிராக, வர்ணத்திட்டுகளாகக் குழந்தைகள் கோலம் போட முயற்சி செய்தது போலத்தான் இருக்கும்.

இதைப்பற்றியெல்லாம் பேச்செடுத்ததுமே ''ஸர் ஸி. வி. ராமனுடைய ஆராய்ச்சிகள் எல்லாருக்கும் புரிந்து விடுகிறதா? அப்படி புரியாததனால் அதை மோசம் என்று சொல்லிவிட முடியுமா? அதைப் போலத்தான் இதுவும்'' என்று சற்று ஆவேசமாகவே பதிலளித்த திரு பணிக்கர் விஞ்ஞான வளர்ச்சிக்குச் சாமான்யமான மக்களின் ஆதரவு அவசியமில்லை என்பதையும் கலைகளின் வளர்ச்சி அதனை விரும்பி ஏற்கும் பெருவாரியான மக்களின் பாராட்டுதலைப் பொறுத்தும் இருக்கிறது என்பதையும் மறந்து விட்டதாகவே தோன்றியது. ஏனெனில் தமிழ் நாட்டில் இந்த நவீன ஓவியக் கலை வித்தகர்களைப் பாராட்டி உற்சாகப்படுத்தப் பத்திரிகைகள் முன் வரத் தயங்குகின்றன என்ற தாபம் கல்லூரி முதல்வர் பணிக்கருக்கு நிறையஇருப்பதாகத் தெரியவந்தது.

- முதல்வர் பணிக்கர்



''கண் பார்வைக்கு அகப்படுவதை அப்படியே பிடித்து நிரந்தரமாக்கித் தருவதற்குத்தான் காமிரா இருக்கிறதே! கண்களுக்குப் புலப்படாத உள் உணர்ச்சிகளுக்கு உருவம் கொடுக்க முயற்சி செய்வதுதான் நவீனக் கலைப் பாணி'' என்றார் அந்தத் தீவிர நவீனக் கலைவாதி. இந்தக் கல்லூரியிலேயே பயின்று, ஆசிரியராகப் பணியாற்றி இப்போது முதல்வராகப் பணியாற்றுகிறார்.



கோபுரக் கலைகளைத் தமது பிரத்யேகப் பாணியாகக் கொண்ட ராமானுஜம்

இன்று பாரதத்திலே செயல்படும் கலைத்தொழில் கல்லூரிகளில் சென்னை நகரிலுள்ள இந்தக் கல்லூரிதான் பெரியது. வயதிலும் முதிர்ந்தது. முதலாவதாகத் தோன்றியதும் கூட!

டாக்டர் அலெக்ஸாண்டர் ஹண்டர் என்னும் ஐரோப்பியர் தனிப்பட்ட முறையில் தொடங்கிய இந்தக் கலைத் தொழில் பள்ளியை 1850ம் ஆண்டிலேயே சர்க்கார் எடுத்து நடத்தத் தொடங்கியது. இந்தப் பள்ளியில் தயாரான தொழிலாளிகள், கல்கத்தாவில் 1854-ம் ஆண்டிலும் பம்பாய் நகரில் 1857-ம் ஆண்டிலும் கலைத் தொழில் பள்ளிகளை நிர்மாணிக்க வெகுவாக உதவினார்களாம்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் தென்னாட்டுக்கு வந்த பிரிட்டிஷ் கலை

# கலை வளர்க்கும் கோயில்கள்

நிபுணரும், சரித்திராசிரியருமான இ. பி. பிளேவல் என்பவர் இந்தக் கல்லூரியின் முதல் பிரின்சிபாலாகப் பதவி ஏற்றார். வங்காளத்தின் தலைசிறந்த கலைஞரான அவனீந்திரநாத் தாகூர் போன்றோருடன் தொடர்பு கொண்டு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தார்.

ஹண்டரும் பிளேவலும் போதித்த கலையின் வளர்ச்சிதான் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் 1911ம் ஆண்டு டில்லியில் முடிசூட்டு விழா நடத்திக் கொண்டபோது பிரத்தியேக மர வேலைப்பாடுகளுக்காகச் சென்னையிலிருந்து நூறு மர நுண்கலை வித்தகர்களை டில்லிக்கு அனுப்ப உதவியது.

இந்தக் கல்லூரியில் நாற்பதுக்கு மேற்பட்ட ஆசிரியர்களும் சுமார் முந்நூற்றி ஐம்பது மாணவர்களும் இருக்கிறார்கள். இங்கு அளிக்கப்படும் போதனையை இரண்டு

தொழில் துறைப் பகுதியில் சேரும் மாணவர்களுக்கு இலவசமாகவே போதனை அளிக்கப்படுகிறது. கலைப் பிரிவில் சேரும் மாணவர்களுக்கு அடையாளக் கட்டணமாக ஆண்டு ஒன்றுக்கு சுமார் முப்பது ரூபாய் தலா வசூலிக்கிறார்கள். இவர்களிலும் பலருக்குச் சம்பளச் சலுகை பெற வசதி இருக்கிறது. ஆண்டு தோறும் விசேஷ ஆராய்ச்சித் துறைக்காக மத்திய சர்க்கார் அளிக்கும் தேசிய ஸ்காலர்ஷிப்பை அதிகபட்சமாக இந்தக் கல்லூரி மாணவர்கள் அடைந்து பயன்பெறுகிறார்கள்.

சமீபத்தில் இந்தக் கல்லூரி மாணவர்கள் டில்லியில் தங்கள் ஓவியங்களைக் கொண்டு நடத்திக் காட்டிய கண்காட்சி ஒன்று நவீனக் கலை விமரிசகர்களின் பாராட்டுதலுக்குப் பாத்திரமாகி யிருக்கிறது. திரு ராஜவேலு,




சிற்ப சாஸ்திரத்திலும் 'மாடர்ன் ஆர்ட்'டிலும் இடம்பெற்றிருந்தாலும் சம்பிரதாயமான ஓவியக் கலையையும் சிற்பக் கலையையும் மாணவ மாணவிகள் பயிலத் தவறுவதில்லை.

பிரிவுகளாக்கி வைத்திருக்கிறார்கள். கலைப் பிரிவு, தொழில் பிரிவு என்ற இரண்டு பிரிவுகளிலும் சேர விரும்பும் மாணவ மாணவிகளுக்கு இத்தனை அளவு அதிகம் படித்திருக்க வேண்டும் என்ற வரையறை இல்லை. எட்டாவது வகுப்புப் படிப்பே உயர்ந்த பட்சமானது என்று கருதுகிறார்கள்.

கலைப் பிரிவில் பொதுவான சித்திரம் வரைதல், ஓவியக் கலை, ஓவியத்தில் விளம்பரக் கலை, சிற்பம் அமைப்பது ஆகியவற்றைச் சொல்லித் தருகிறார்கள். ஓவியக் கலையையோ, ஓவியத்தில் விளம்பரக் கலையையோ பூரணமாகப் பயின்று டிப்ளோமா வாங்க விரும்புபவர்கள் ஆறு ஆண்டு காலம் படித்தாக வேண்டும். சிற்பத்துக்குத் தேவையானது மூன்று வருட காலம்.

தொழில் பிரிவில் மர வேலைப்பாடு, எனாமல், பொன் வேலைகள் முதலிய பாடங்கள் சொல்லித் தரப்படுகின்றன. மர வேலைக் கலைக்கு ஐந்து வருட காலம் தேவைப்படுகிறது. மற்றவைகளுக்கு மூன்றோ இரண்டோ வருட அவகாசம் போதுமானது.

திரு பிரெடெரிக் செல்லப்பா, வாசுதேவ், சதானந்தன், விசுவநாதன், நாராயணன், ராணி பூவையா ஆகியோரின் வண்ணச் சித்திரங்கள் டில்லி ரசிகர்களிடம் நல்ல பெயர் பெற்றிருக்கின்றன.

'வடக்கத்திய ஓவியர்களின் பாசறைக்குள்ளேயே நுழையும் தைரியத்துடன் வந்திருக்கும் இந்தத் தென்னாட்டு இளம் ஓவியர்களின் படைப்பிலே கலையும் திறமையும் கலந்து மிளிர்கின்றன' என்று ஒரு விமரிசகர் ஆரம்பித்து ஒவ்வொரு சித்திரமாக அலசிப் புகழ்ந்திருக்கிறார்.

வனவிலங்கு சாந்தநாயகம் தயாரித்த விளம்பரப் படம்



இந்த நவீனக் கலை விமரிசகர்கள் சில சமயங்களில் உபயோகிக்கும் சொற்றொடர்களும் எப்படியெல்லாமோ வளைந்து நவீனக் கலை ஓவியங்களைப் போல் 'சட்'டென்று புரியாத புதிராகவே விளங்குகின்றன.

இந்தக் கல்லூரி மாணவர்கள் ஓவியமும் சிற்பமும் பயில ஆண்டு ஒன்றுக்குச் சுமார் முப்பதினாயிரம் ரூபாய் பெறுமான சாதனங்களையும் உபகரணங்களையும் இலவசமாகவே வழங்குகிறார்களாம்.

கலைப் பகுதி மாணவர்களுக்குப் பாரதத்தில் உள்ள அத்தனை முக்கியமான கலைக் கூடங்களையும் பார்க்க வாய்ப்பு இருக்கிறது. இந்தச் சுற்றுப் பயணத்துக்கு அரசாங்கமே உதவி செய்கிறது.

ஓவியக்கலைக்கும் ஒட்டுத் தாடிக்கும் ஏதோ உன்னத உறவு இருக்கிறது என்றுதான் தோன்றுகிறது. மாணவர்கள் எல்லோருமே குறுந்தாடியுடனும் இள நகையுடனும் வளைய வருகிறார்கள். அதுவே ஓர் அழகாகத்தான் இருக்கிறது.

ஓவியச் சிற்பக் கலையில் விசேஷப் பயிற்சி பெறும் மாணவர்கள் தங்கள் படைப்புக்களில் தங்களுடைய பிரத்தியேக முத்திரைகளைப் பதிக்கப் பழகுகிறார்கள். திரு ராமானுஜம் என்னும் மாணவர் தாம் யாரை அல்லது எதை வரைந்தாலும் சரி அதில் மாடுகளுக்கு உள்ளதுபோல் இரண்டு கொம்புகளை வளைத்து விடத் தவறுவதில்லை! அவர் ஒரு நவீன ஓவியக் கலைஞர் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

சித்திரம் வரைவதற்கான சித்திரக்கூடத்தில் நிஜ மனிதர்களையே மாடல்களாகப் பிடித்து வந்து அமர்த்தியிருக்கிறார்கள். அவர்களைப் பார்த்தவாறே ஆரம்ப கட்ட மாணவ மாணவிகள் சித்திரம் எழுதப் பழகுகிறார்கள். இதே போல் சிற்பக் கூடமும் தனியாக இருக்கிறது. வண்ண ஓவியங்களுக்குத் தனி இடம். விளம்பரக் கலை ஓவியங்களின் பகுதியைக் கவனித்துக்கொள்பவர் திரு கிருஷ்ண ராவ். அவருடைய சித்திரக் கூடம் கல்லூரியின் தனிப் பகுதியாக விளங்குகிறது.

கல்லூரி முதல்வர் பணிக்கர் போல, கிருஷ்ண ராவும் இந்தக் கல்லூரி மாணவராக இருந்து ஆசிரியராகப் பணி செய்பவர். நவீன கலைப் பாணியிலும், எதையும் குறிக்காத ஓவியக் கலையிலும் (Abstract art) அவர் புகழ் பெற்றிருக்கிறார். வன விலங்கு வாரத்தை ஒட்டி அவருடைய மாணவர்கள் தீட்டியிருக்கும் சில விளம்பரச் சித்திரங்கள் வெகு இயற்கையாகவே அமைந்திருக்கின்றன.

கல்லூரி முதல்வர் பணிக்கரைச் சந்திக்கப் போயிருந்தபோது அவருக்கு அமெரிக்க நாட்டிலிருந்து திரும்பிய அலுப்பு இன்னும் விலகாத நேரம். அகில உலக ஓவிய சிற்பக் கலைஞர்களின் மகாநாட்டுக்குப் பாரதத்தின் ஒரு பிரதிநிதியாகப் போய்த் திரும்பியிருந்தார். மேலை நாடுகளில் நவீனக் கலைப் பாணிக்கு இருக்கும் மதிப்பைப் பற்றி உற்சாகமாக விவரம் கொடுத்தார்.

'மாடர்ன் ஆர்ட்'டையும் ஸர் சி. வி. ராமனின் ஆராய்ச்சிகளையும் அவர் ஒப்பிட்டுப் பேசினாரல்லவா? அந்த ஸர் சி. வி. ராமனே நவீன ஓவியங்களைப் பற்றிச் சொல்வதைக் கேளுங்கள்:

"இயற்கை அளிக்கும் விஷயங்களும் புதுமைகளும் எண்ணி முடியாது. அவற்றைப் பாகுபாடு செய்து பிரிக்கவும் முடியாது. ஆகையால் இயற்கையின் உதவி போதாது என்று அதை விட்டு விலகிப் போக ஓர் ஓவியனுக்கு அவசியம் ஏற்படாது. ஆனால் நவீன கலைப் பாணியிலோ எதையும் குறிக்காத கலைப் பாணியிலோ (Abstract art) ஓவியன் ஈடுபட்டுத் தனக்கு ஆதரவாளர்கள் இருக்கிறார்கள் என்று நினைத்தால் அந்த எண்ணத்துக்கு நான் ஆட்சேபனை எழுப்பத் தயாரில்லை."

சமீபத்தில் பள்ளி நிலையிலிருந்து கல்லூரி அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டுள்ள இந்த அரசினர் கலைத் தொழில் கல்லூரி மாணவர்கள் தங்கள் முதல்வரின் துணையுடன் மேலை நாடுகளைப் போல் தென் பாரதமும், நவீனக் கலைப் பாணியை ரசிக்க வேண்டும் என்கிற ஆர்வத்துடன் உழைத்து வருகிறார்கள்.

தமிழர்களுக்கு அந்த ரசனை ஏற்படக் கொஞ்சம் அவகாசம் தேவைப்படலாம்! கால் உணரும் தரையிலிருந்து தலை உணரா வான வெளிக்கு எம்பிப் பறப்பது என்பது அவ்வளவு சுலபமா என்ன?






பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
லிமிடெட்
மதராஸ் 17






# ஸில்வர் எக்ஸைட்

பாட்டரிகள் மற்றவை நின்ற பிறகும்
தொடர்ந்து இயங்குகின்றன

உங்கள் உள்ளூர் ஏஜண்டு:

தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா
பிரைவேட் லிமிடெட், சென்னை

கிளைகள்: பெங்களூர், கோயமுத்தூர், சிகந்தராபாத்

EBSC-64 TM

# கோபால் பல்பொடி



பல் வலி, பல் அரணை, வாய் நாற்றம்
பல்லில் இரத்தம் வடிதல், முதலிய
பல் வியாதிகளை குணப்படுத்தி
பல்களுக்கு வெண்மையும்
பலத்தையும் தருகிறது.




எஸ். பி. எஸ். ஜெயராம் அன் கோ.

பத்தினிக் கோட்டம்

### அத்தியாயம் முப்பத்தொன்பது

## ஞான வனிதை

**ம**று நாள் காலை.

ஆந்திர இளவரசியின் கட்டளைப்படி சிவிகையொன்றைப் பயணத்துக்குத் தயார் செய்து வைத்துக்கொண்டு காத்திருந்தான் நாகோதரன். ஆனால் அவனுக்கே அவள் எந்த ஊருக்குப் பயணமாகிறாள் என்பது தெரியாமலிருந்தது.

விடியற் காலமே எழுந்து நீராடிவிட்டுக் காலை ஆராதனையை முடித்துக் கொண்டு நேரே சமண சங்கப் பள்ளிக்குப் போய்ச் சமந்தபத்திரரிடம் விடை பெற்றுத் திரும்பியிருந்த உத்தமசீலி, பயணமாவதற்குத் தயாரான நிலையில், யாரோ ஒருவருடைய வரவை எதிர்பார்த்துக் காத்திருப்பவள் போல் முற்றத்து அறையில் தன்னந்தனியே அமர்ந்திருந்தாள். அவளுடைய தோற்றத்திலோ, நடையுடை பாவனைகளிலோ எவ்வித மாறுதலும் தென்படவில்லை. எப்போதும்போல் மலர்ந்த முகத்துடனும், மகிழ்ச்சியுடனுமே காணப்பட்டாள். ஆயினும் அவளது பார்வை மட்டும் எந்த ஒரு பொருளின் மீதும் பதியாமல் ஒளிப் பசையின்றி மிதவை விட்டுக் கொண்டிருந்தது.

''வணக்கம், இளவரசி !''

அவள் மெல்லத் திரும்பிப் பார்த்தாள். அன்றொரு நாள், ஏதோ புதிய பொருள் ஒன்றை உருவாக்கித் தருவதற்காக அவளுடைய பொன்னுபரணங்களை வாங்கிச் சென்ற பொற்கொல்லன் மல்லிநாதன் தான் அந்தப் பேழையுடன் அங்கு வந்து பணிவும் குழைவுமாக நின்றான்.

''மல்லிநாதனா? உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றவாறு எழுந்தாள் உத்தமசீலி.

'' தாமதத்துக்கு மன்னியுங்கள், தாயே! தங்களைக் காண்பதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயம் நாகோதரனும் வந்து அழைத்தார். உடனே இதோ, ஓடி வந்திருக்கிறேன்'' என்றான் மல்லிநாதன்.

''மகிழ்ச்சி! நான் சொன்ன காரியம் என்ன ஆயிற்று?''

'' இரவு பகலாக முழு மூச்சுடன் முனைந்து இன்று காலைதான் நிறைவாக்கி முடித்தேன், அம்மணீ!'' என்று கூறிக் கொண்டே தன் கையிலிருந்த பேழையைப் பயபக்தியுடன் அவளிடம் கொடுத்தான் பொற்கொல்லன்.

உத்தமசீலி அதை ஆவலுடன் வாங்கி அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தாள். பிறகு அதன் மூடியைத் திறப்பதற்காகக் கையெடுத்தவள், 'வேண்டாம்' என்பதுபோல் தலையசைத்துக் கொண்டு, ''என் சித்திரக் குறிப்புப்படிதானே இதைச் செய்திருக்கிறாய் ?'' என்று அடைத்த குரலில் கேட்டாள்.

''இளவரசியாரின் மாதிரிச் சித்திரத்திலிருந்து அணுவும் பிசகாமல் அப்



படியே உருவாக்கியிருக்கிறேன்; பேழையைத் திறந்து பாருங்கள், தாயே !''

''இருக்கட்டும்'' என்று முனகிய உத்தமசீலி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாய்ச் சிறுபொழுது மௌனமாயிருந்தாள். அவளது அழகிய முகம் வெளிறிச் சாம்பியது. கண்கள் இலேசாகக் கலங்கிப் பனித்தன. சட்டென்று நிமிர்ந்த அவள், இளவரசிக்குரிய சின்னமாகத் தன் தலையில் சூடியிருந்த—பிறை

நிலாப் போன்ற — விலையுயர்ந்த அணிகலன் ஒன்றைக் கழற்றி எடுத்து, ''மல்லிநாதா! நான் இட்ட பணியைச் செய்து முடித்ததற்கு ஊதியமாக இதை உனக்கு அளிக்கிறேன், பெற்றுக் கொள்!'' என்று கூறி அவனிடம் நீட்டினாள்.

திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்த மல்லிநாதன் அவளைத் திருதிருவெனப் பார்த்து விழித்தான்.

''ஏன் வாங்க மறுக்கிறாய்? அன்று நான் இது சம்பந்தமாகச் சொன்னதை மறந்து விட்டேனென்று நினைக்கிறாயா? மறக்கவில்லை, மல்லிநாதா! ஆனால் அன்றைய என் நிலை வேறு; இன்று இருக்கும் நிலை வேறு. உன்னுடைய உழைப்புக்கு ஊதியம் கொடுத்தாக வேண்டிய நிலையில் இப்போது இருக்கிறேன். எனது வெறும் பாராட்டு இனி உனக்கு எந்த வகையிலும் பயன்படாது. எனவே இதை நீ வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்.''

பதில் பேச நாவெழாமல் பயந்து நடுங்கிய மல்லிநாதன், அந்த மதிப்பு வாய்ந்த ஆபரணத்தை வணங்கிப் பெற்றுக் கொண்டான்.



''சரி; நீ போகலாம்.''

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போல் தட்டுத் தடுமாறியபடி அங்கிருந்து அகன்றான் மல்லிநாதன்.

சில விநாடிகளுக்குப் பின், ''நாகோதரா! பயணத்துக்கு எல்லாம் தயாராகி விட்டதா?'' என்று கேட்டாள் உத்தமசீலி.

''ஆயிற்று, அம்மணி!'' என்று ஓடி வந்து பதிலிறுத்தான் நாகோதரன்.

கையில் இருந்த பேழையை மார்புடன் அணைத்தவாறு மெல்லப் பின்னால் திரும்பினாள் உத்தமசீலி.

விடிந்தது முதலே அவளது ஒவ்வொரு நடவடிக்கையையும் தன் அறையில் இருந்தபடி வெகு கவனமாகக் கவனித்துக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சி, ''புறப்பட்டு விட்டீர்களா, இளவரசி?'' என்று கேட்டுக்கொண்டே முன்றிலை நோக்கி அவசரமாக வந்தாள்.

''ஆம், சகோதரி! உன்னிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட வேண்டியதுதான்'' என்று கூறிப் புன்னகை பூத்தாள் உத்தமசீலி.

''ஆந்திர இளவரசியார் எங்கு செல்கிறார் என்பது பற்றி என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே!''

''சொல்லக் கூடாத இரகசியம் ஏதுமில்லை; கூரம் கிராமத்துக்குத்தான் போகிறேன்.''

''சேதியக் கலைஞரைச் சந்திப்பதற்குத்தானே?''

'ஆம்' என்று தலையசைத்தாள் உத்தமசீலி.

''அதற்கு ஏன் இவ்வளவு அவசரமாகப் பயணப்பட வேண்டும்? இன்னும் சில தினங்களில் அவரே இவ்வூருக்கு வந்தாலும் வருவாரே?''

''அதுவரை என்னால் இங்கு தங்கியிருக்க முடியாது. எனக்கு ஆத்மசாந்தி வேண்டும். அதை நாடித்தான் அவரது புதிய கிருகத்துக்குப் போகிறேன்.''

சற்று நேரம் அவளையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த இளங்கோப்பிச்சி பொங்கி வரும் துக்கத்தை அடக்கிக் கொண்டு, ''ஆந்திர இளவரசியார் எங்கு போனாலும் என்னை மறக்காமல் இருப்பார் அல்லவா?'' என்று கேட்டாள்.

உத்தமசீலியின் வதனத்தில் ஓர் அபூர்வ ஒளி படர்ந்தது. ''எனக்கு ஞாபக சக்தி அதிகம், சகோதரி! யாரையும் எதையும் நான் எளிதில் மறக்க மாட்டேன். அதற்கு ஓர் உதாரணம் வேண்டுமா? அன்றொரு நாள், சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரரிடம் நீ வடக்கிருத்தல் நோன்பு பற்றிக் கேட்ட கேள்விக்கு அவர் கூறிய ஒரு பாடலை அப்படியே சொல்கிறேன், கேள்: 'இடையூறு, ஒழிவில் நோய், மூப்பு இவை வந்தால் கடை துறத்தல் சல்லேகனை' — பார்த்தாயா, என் ஞாபக சக்தியை?'' என்று மென்னகை புரிந்தவாறு சொன்ன அவள் பாசம் பரிமளிக்கும் குரலில் மேலும் கூறினாள்: ''என் அன்புச் சகோதரி! உன்னை நான் இந்தப் பிறவியில் மட்டுமல்ல, இனி வரும் பிறவிகளிலும் மறக்க மாட்டேன்.''

இளங்கோப்பிச்சியின் இதயம் உருகிக் கரைந்தது. தன்னையறியாமலேயே தன் இரு கரங்களையும் குவித்துக் கொண்டு கண்கலங்கி நின்றாள் அவள்.

''வருகிறேன், சோமகுமாரி! உனக்கு என் அன்பான வாழ்த்துக்கள்!'' என்றவாறு அமைதியாக நடந்து போய்ச் சிவிகையில் அமர்ந்தாள் உத்தமசீலி.

வட திசை நோக்கிச் சிவிகை புறப்பட்டது.

ஆந்திர இளவரசி பயணமாகிப் போனபின் அந்த இல்லத்திலே தான் மட்டும் தங்கியிருப்பதில் அர்த்தமில்லையென நினைத்த இளங்கோப்பிச்சி அன்றே அவ்வூரை விட்டுப் புறப்பட்டு



விட எண்ணினாள். அப்படி எண்ணியதுமே, பழையாறைக்குப் போவதா, அல்லது மதுரை அரண்மனைக்குச் சென்று தன் அத்தையார் மங்கையர்க்கரசியுடன் தங்கி விருப்பதா என்ற குழப்பமான கேள்வி அவள் மனத்தில் எழுந்தது. அத்துடன், தான் இங்கு இருக்கும் விவரத்தை அறிந்துள்ள கோவிந்தவர்மன் தன்னைப் பார்ப்பதற்காக வந்தாலும் வருவான் என்னுமொரு நைப்பாசையும் அவளுக்கு ஏற்பட்டது. இந்த ஆசையிலும் குழப்பத்திலுமாகத் தன் பயணத்தைத் தள்ளிப் போட்டுவிட்டு இரண்டு வார காலத்தை எப்படியோ கழித்து விட்டாள்.

ஆனால் அவள் ஆவலுடன் எதிர்பார்த்தது போல் கோவிந்தவர்மன் அவளைப் பார்க்க வரவேயில்லை. ஒருகால் ஆந்திர இளவரசி உத்தமசீலி இங்கிருந்து கூரத்துக்குப் போய்விட்ட விஷயம் அவனுக்குத் தெரியாமலிருக்கலாம்; அல்லது தன் எதிர்ப்பு நடவடிக்கையில் இன்னும் தீவிரமாக ஈடுபட வேறு எந்த ஊருக்காவது போய்விட்டிருக்கலாம்.

இளங்கோப்பிச்சி தன் மீதும் தனது எதிர்கால வாழ்க்கையின் மீதும் அளவற்ற வெறுப்பும் சலிப்பும் அவநம்பிக்கையும் கொண்டாள். இதற்குமேல் அந்த இல்லத்தில் தங்கியிருந்தால் தனக்குப் பைத்தியமே பிடித்து விடும் என்றும் அவளுக்குத் தோன்றியது. ஆகவே, அவள் சடுதியில் ஒரு முடிவுக்கு வந்தாள். நாளைப் பொழுது புலர்ந்ததும் திருப்பருத்திக்குன்றத்தை விட்டு மதுரைக்குப் பயணமாகி விடுவது என்னும் முடிவுதான் அது!

பயணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டு அப்போதுதான் முன்றிலுக்கு வந்த இளங்கோப்பிச்சி, அங்கே சிறிதும் எதிர்பாராதவிதமாகச் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் வருவதைக் கண்டு வியப்படைந்தவளாய் அவரை வரவேற்றாள்.

"சோழ இளவரசியார் நலம் தானே?" என்று பரிவுடன் கேட்டுக் கொண்டே வந்த பரவாதிமல்லர் அங்குமிங்குமாகத் தம் பார்வையைச் செலுத்தியவாறு, "உத்தமசீலியார் உள்ளே இருக்கிறாரா? அல்லது வெளியில் எங்கேனும் போயிருக்கிறாரா?" என்று ஆவலோடு வினவினார்.

இளங்கோப்பிச்சிக்குத் தூக்கிவாரிப் போட்டதுபோல் ஆகிவிட்டது. பரபரப்புடன் அவரைப் பார்த்த அவள், "என்ன ஐயா? ஆந்திர இளவரசியை நீங்கள் பார்க்கவில்லையா? உங்களைச் சந்திக்கக் கூரத்துக்கு வந்தாரே?" என்று அவசரமாகக் கேட்டாள்.

"அப்படியா?..." என்று கண்களை அகல மலர்த்திய பரவாதிமல்லர் சில விநாடி யோசனைக்குப் பின், "உத்தமசீலியார் இங்கிருந்து எப்போது பயணமானார்?" என்று விசாரித்தார்.

"அவர் புறப்பட்டுப் போய் இரண்டு வாரங்களாகின்றன, கலைஞரே!"

"ஓ..... சரிதான்! இருபது நாட்களுக்கு முன் கூரத்தை விட்டுக் கிளம்பிய நான், ஓர் அவசர காரியமாக மாமல்லபுரம் போய் அங்கிருந்து நேரே இங்கு வருகிறேன்."

இதைக் கேட்டு நிம்மதியடைந்த இளங்கோப்பிச்சி, "கூரத்தில் நிர்மாணிக்கத் தொடங்கிய தங்கள் இல்லம் முழுமையடைந்து விட்டதா, கலைஞரே?" என்று தன்னை மீறிய ஒரு திகிலுடன் வினவினாள்.

"அநேகமாக முடிவடைந்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டும், அம்மணி!"

"கிருகப் பிரவேசம் எப்போது வைத்திருக்கிறீர்கள்?"

"அந்த மங்கல நன்னாளைப் பல்லவ மன்னர்தான் தீர்மானிக்க வேண்டும்!"



# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ 1) (ரிஜிஸ்டர்டு)

தற்போது விட்டமின் C சத்துக்கள் சேர்க்கப்பட்டுள்ளது



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி அளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது. விட்டமின் C சத்துள்ள சில புதிய மூலிகைகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இதனால் தைலத்தின் வழக்கமான வாசனையில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டுள்ளது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்யமாக வாழ்வீர்கள்

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட

## SHRI RAMTIRTH YOGASHRAM

**DADAR, BOMBAY-14**

மதராஸ் டிப்போ : 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ் - 3






**வாணி தமிழ் இங்கிலிஷ் போதினி**

90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே இலக்கணமாகப் படிக்க, பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவோடு ரூ. 6-25.

**ஐசுவரியம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்கி, பத்தி, ஸ்நோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-25. வி. பி. 0-85.

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம் பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
கால்நடைகளின் நோய்களை போக்கும்.
விலை ரூ. 2. வி. பி. 0-85.

## வாணி புக் டிபோ (K)

3, மல்லையபெருமாள் தெரு, ரூம் நெ. 5
சென்னை - 1



# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்க முடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டு பண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இத்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளில் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

என்று மகிழ்ச்சி பொங்கச் சொன்ன பரவாதிமல்லர் சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவர்போல் கேட்டார்: "அது சரி, இளவரசி! உத்தமசீலியார் முன்னறிவிப்பின்றித் திடீரென்று ஏன் என்னைப் பார்க்கக் கூரத்துக்குப் போனார்?"

"ஆத்மசாந்தியை நாடிப் போவதாக மட்டுமே என்னிடம் சொன்னார், ஐயா! அதற்குமேல் இளவரசி உத்தமசீலியாரைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது" என்று அடைத்த குரலில் பதிலிறுத்த இளங்கோப்பிச்சி, "தாங்கள் அந்த ஊரில் இல்லாததால் அவர் அங்கே தங்கியிருப்பதில் ஏதேனும் சிரமம் ஏற்படுமோ?" என்று கவலையுடன் வினவினாள்.



"போன தேர்தலில் எனக்கு வோட்டுப் போட்டதாலே உங்களுக்குக் குழாய் வந்தது. அந்தக் குழாயில் ஜலம் வரணும்னா இந்தத் தேர்தலிலும் எனக்கே வோட்டுப் போடணும்!"

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய்ச் சிறிது நேரம் பேசாதிருந்த பரவாதிமல்லர், "அப்படியெல்லாம் ஒன்றும் நேராது, அம்மணி! ஏனென்றால், அங்கு என் பிரதம சீடர் புஷ்பசேனர் இருக்கிறார். அவர் அந்த இளவரசியாரை நன்கு கவனித்துக் கொள்வார்"! என்று புன்முறுவலுடன் சொல்லிப் புறப்பட ஆயத்தமானார்.

"சேதியக் கலைஞர் இப்போது கூரத்துக்குத்தானே போகிறார்?" என்றாள்.

"இல்லை, இளவரசி! என் புதிய கிருகப் பிரவேசத்துக்காகப் பல்லவ மன்னரை அழைக்கக் காஞ்சிக்குப் பயணமாகிறேன்."

இவ்வாறு சொல்லி விட்டு விடை பெற்றுச் சென்ற பரவாதிமல்லரை வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்ற இளங்கோப்பிச்சி, 'இந்த மனிதரைப் பற்றி நாட்டிலே நிலவும் கொந்தளிப்பை இவர் அறிந்ததாகவோ, அப்படி அறிந்திருந்தாலும் அதற்காகக் கவலைப்படுகிறவராகவோ தெரியவில்லையே!' என்று தனக்குள் எண்ணிக் குழம்பலானாள்.

### அத்தியாயம் நாற்பது

## வீர மங்கை

அன்றிரவு மூன்றாம் சாம வேளை.

இன்பமும் துன்பமுமாகக் கழிந்த இறந்த காலத்தையும், குழப்பமும் தோல்வியுமாக இருக்கும் நிகழ்காலத்தையும், மர்மமும் பயங்கரமுமாகத் தோன்றும் எதிர்காலத்தையும் தன் மனக் கண் முன்னே நிறுத்தி வைத்துக் கொண்டு அவை பற்றிய சிந்தனையில் உறக்கம் பிடிக்காமல் கட்டிலில் படுத்திருந்தாள் இளங்கோப்பிச்சி. அவளுக்குப் பக்கத்தில் — பெரிய சாளரம் ஒன்றின் ஓரமாக — மற்றொரு கட்டில் வெறுமனே கிடந்தது. உத்தமசீலி பயன்படுத்திவிட்டுப் போன கட்டில் அது. அந்தக் கட்டிலின்மேல் குறுக்குவாட்டத்தில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு பட்டு மெத்தையானது, அவள் இப்போதும் அதில் படுத்திருப்பது போன்ற பொய்த் தோற்றத்தைத் தந்தது. அறையின் எங்கோ ஒரு மூலையில் 'மினுக், மினுக்'கென்று விளக்கு எரிந்து கொண்டிருந்தாலும் அங்கு இருளின் ஆதிக்கமே மேலோங்கியிருந்தது. வெளியில் சற்றுப் பலமாகக் காற்று வீசியதால், சாளரத் திரைச் சீலை படபடத்துக் கொண்டிருந்தது.

அப்படிப் படபடத்த திரைச் சீலையையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த இளங்கோப்பிச்சி, ஏதோ சரசரவென்ற ஒலி கேட்டுத் திடுக்குற்றுச் சுற்றுமுற்றும் பார்த்தாள். அந்தச் சாளரத்தின் வெளிச் சுவர் பக்கமாக யாரோ ஏறி வருவது போல் திரைச் சீலையில் ஒரு கரிய நிழல் அசைந்தது.

அதைக் கண்டு திகிலடைந்து விட்ட அவள் தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு மெல்லக் கண்

> ஓர் ஏழையின் ஜாதியையோ, கொள்கையையோ, இனத்தையோ, வேறு எதையுமோ நினையாமல் அவனிடத்தில் சிவனைக்கண்டு, பணி புரிந்துவாருங்கள். அப்படிப் பணி புரிபவனிடம் சிவபிரான் கொள்ளும் மகிழ்ச்சியைத் தனது பிம்பத்தைக் கோயிலில் வழிபடுகிறவனிடமும் கொள்வதில்லை.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

திறந்து மீண்டும் அந்தச் சாளரத்தை உற்று நோக்கினாள்.

சந்தேகமில்லை; வாட்டசாட்டமாயிருந்த ஓர் ஆள் தன் முகத்தைக் கறுப்புத் துணியால் மறைத்துக்கொண்டு சாளரத்தின் விளிம்புச் சுவரில் ஏறி உட்கார்ந்து உள்ளே எட்டிப் பார்ப்பது நன்றாகத் தெரிந்தது. அவன் கையில் பளபளப்பான நீண்ட வாள் மின்னிக் கொண்டிருப்பதும் புலனாகியது.

அளவுக்கு மீறிய பயத்தால் சில் விட்டு விறைத்த இளங்கோப்பிச்சி தூங்குவது போன்ற பாவனையில் அப்படியே அசையாமல் கிடந்தவாறு இமை யிதழ்களை மட்டும் இலேசாகப் பிரித்து அவ்வுருவத்தைக் கூர்ந்து பார்த்தாள். அந்த உருவம் தன் கையிலிருந்த வாளை இறுகப் பற்றிக் கொண்டு வெறுமனே கிடந்த கட்டிலின்மேல் சுருட்டிக் வைக்கப்பட்டிருந்த மெத்தையைக் குறி வைத்துப் பாயத் தயாராவதுபோல் தோன்றியது.

'யார் இந்த ஆள்? யாரைக் கொலை செய்ய இத்தனை பயங்கர வெறியுடன் வருகிறான்? ஒருகால் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனாக இருப்பானோ?'

இளங்கோப்பிச்சியின் உடலிலும், உள்ளத்திலும் திடீரென ஒரு வீராவேசக் குமுறல் வெடித்துப் பொங்கவே வில்லெனத் துள்ளியெழுந்து தன் தலையணைக்குக் கீழே ஒளித்து வைத்திருந்த வாளை வெடுக்கென்று இழுத்து எடுத்துக்கொண்டு அந்தச் சாளரத்தை நோக்கிக் குபீரெனப் பாய்ந்தோடினாள்.

இந்த எதிர்பாராத எதிர்ப்பைக் கண்டு அதிர்ச்சியடைந்து விட்ட அந்த மர்ம மனிதன் சாளரத்துக்கு வெளியே தாவிக் குதித்தான். இளங்கோப்பிச்சியும் அதே வேகத்தில் வெளிப்புறத்தே பாய்ந்தாள். அடுத்த கணம் —

'டணார்! டணீர்!.....டணார் !'

நீண்ட இரு வாட்கள் ஒன்றுடன் ஒன்று முட்டி மோதி இரவின் கருமையை வெட்டிப் பிளப்பதுபோல் மின்னிப் பளிச்சிட்டன. முகத்திரை போர்த்தி வந்த மர்ம மனிதனுக்கும், இளங்கோப்பிச்சிக்கும்தான் அங்கே பயங்கர வாட்போர் மூண்டது.

அவள் அசுர வேகத்தில் தன் வாளைச் சுழற்றினாள். அவளுடைய ஆவேச வாள் வீச்சிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயல்பவன் போல் அந்த மர்ம மனிதனும் தன் வாளைச் சக்கர வட்டமாகச் சுழற்றிக் கொண்டே பின்னால் நகர்ந்தான்.

சற்று முன்வரை மலர்ச் சிலைபோல் மென்மையும் தண்மையுமாக விளங்கிய இளங்கோப்பிச்சியா இப்படிக் கோர தாண்டவம் புரியும் கொற்றவைபோல் காட்சி யளிக்கிறாள்? ஆமாம்; மாவீரர் பழையாறைச் சோழரின் மகள் அல்லவா? இளமை முதலே அவரிடம் பயின்று பெற்ற வாட் போர்த் திறனை வெளிப்படுத்த இதோ ஒரு சந்தர்ப்பம் அவளுக்கு வாய்த்து விட்டது!

ஆனால்.... அதோ.... இளங்கோப்பிச்சியின் கை சோர்வடைகிறதே! அவளது வாளின் சுழற்சி வேகம் குறைகிறதே! புடைத்துத் திமிறிய அவள் உடலில் எதிரியின் வாள் முனை இரத்தக் கோலங்களைத் தீட்டுகின்றனவே!... ஐயோ, அந்த வீரமாப் பெண்ணின் வாழ்க்கை இன்றோடு முடிவடைகிறதா?

'டணார்' —

இரண்டு வாட்களில் ஒன்று கணீரென்ற ஒலியுடன் தெறித்துப் போய்ச் சற்றுத் தொலைவில் வீழ்ந்தது. முகத்திரை யணிந்த மனிதன் வெறுங் கையோடு செடி கொடிகளுக்கிடையே புகுந்து இருளில் மறைந்து ஓட்டமெடுத்தான். உண்மையில் அவன் வாட் போரில் தோற்று விட்டானா? அல்லது வேண்டுமென்றே தன் வாளை வீசி யெறிந்து விட்டு ஓடுகிறானா? வெற்றிப் பெருமிதத்துடன் பயங்கரமாகச் சிரித்துக்கொண்டே தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்ற இளங்கோப்பிச்சி, கீழே கிடந்த அந்த வாளைத் தன் இடக் கரத்தால் எடுத்துத் தூக்கிப் பிடித்து அதன் கைப்பிடியை உற்று நோக்கினாள்.

''ஹா!..... புலிச் சின்னம்! சோழக் குறுநில அரசாங்கத்தின் புலிஇலச்சினை!''

அவள் கையில் பற்றி யிருந்த இரண்டு வாட்களும் தாமாகவே நழுவித் தரையில் விழுந்தன. அவளும் மயங்க முற்றுக் கீழே சாய்ந்தாள். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam

